“உத்தமன்” பட்டர் அருளிச் செய்த வார்த்தை “*[1] கருமாணியாயிரந்த கள்வனே உன்னைப் பிரமாணித்தார் பெற்ற பேறு* என்று - சிறு காலைக் காட்டி யிரந்து பெரியகாலைக் கொண்டு அளந்து நீ பண்ணின [2] ஓரம், உன்னையாச்ரயித்தார் நிர்ப்பரராகைக்கு அவர்களுக்கு நீவைத்த [3] சந்தானச் சாபமிறே. [4] இவ்வாந்தராளிகத்ருஷ்டாத்ருஷ்டங்களில் ஒருவர்க்கஞ்சாதே யமாதிகளுக்கு முழங்கை காட்டிச் செருக்காராய் இவர்கள் திரிகைக்கடியென்? என்னில்; ‘அறிந்தோம் - ஒரு [5] பரமதார்மிகன் செவியிலே துர்பலரான நம்மால் நம் கார்யம் நிர்வஹித்துக் கொண்டு கரையிலேற வொண்ணாது; உன்னுடைய ரக்ஷணத்துக்கு ஒரு ப்ரபலனை அண்டை கொண்டு த்ருஷ்டாத்ருஷ்ட விஷயமான உன்னுடைய யத்னங்களை யடைய அவன் வசத்திலே பொகட்டு நிர்ப்பயனாயிரு’ என்று [6] சொல்லிப்போம்; இவனும் அத்தையே விச்வஸித்து ‘அப்படியே’ என்றிருக்கும். எம்பெருமான், கழுத்திலே ஓலைகட்டித் தூது போயும், மார்பிலே அம்பேற்றியும், ஸாரத்யம் பண்ணியும், பகலை இரவாக்கியும், ஸத்யப்ரதிஜ்ஞனாயும், அஸத்யப்ரதிஜ்ஞனாயும், பொய்சொல்லியும், மெய்சொல்லியும், வார் கொத்துக்குத்தியும், எல்லை நடந்தும், இங்ஙனொத்த செயல்களைச் செய்து இவர்கள் கார்யமே நிர்வஹியா நிற்கும்” என்றார்;

[7]* மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே* என்று திருமந்த்ரத்துக்கு அர்த்தமாக *[8] மண்முழுது மகப்படுத்து நின்ற வெந்தை மலர்புரையும் திருவடியே வணங்கினேனே* என்று அநுஸந்தித்தாப்போலே இவளும் ‘ஓங்கியுலகளந்த உத்தமன்’ என்று திருநாமத்தினுடைய அர்த்தத்தை முந்துற அநுஸந்தித்து பின்னை அதுக்கு வாசகமான திருநாமத்தை ‘பாடி’ என்கிறாள்.

ஆழிமழைக்கண்ணா! ஒன்றுநீகைகரவேல்
ஆழியுள்புக்கு முகந்துகொடார்த்தேறி
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்து
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில்

1. 2242. 2. ஓரம்-பக்ஷபாதம். 3. சந்தானச் சாபம-ஸந்தான வ்ருத்யர்த்தமாகப் பிறந்தபிள்ளை. சாபம்-குட்டி. 4. ஆந்தராளிகம்-பரமபதத்துக்கு இவ்வருகான பச்வந்த ஸ்வர்க்காதி. 5. பரமதார்மிகன்-அர்ஜுநன். 6. ஸர்வேச்வர னென்று கூட்டிக் கொள்ள வேணும். 7. 2055 8. 2056.



ஆழிபோல்மின்னி வலம்புரிபோல்நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கமுகத்தைசரமழைபோல்
வாழஉலகினில்பெய்திடாய், நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். 4

நாலாம்பாட்டு: (ஆழிமழை) ‘ஸேச்வரமான ஜகத்தடைய இங்கே கிஞ்சித்கரித்துத் தந்தாம் ஸத்தை பெறாநின்றது, நம்முடைய ஸத்தையும் பெறுவோம்” என்று வர்ஷத்துக்குக்கடவ பர்ஜந்யம் வந்து ‘நான் செய்யவேண்டுவதென்’ என்ன, வர்ஷம் பெய்யும்படியை அவனுக்குக்கையோலை செய்து கொடுக்கிறார்கள். ராவணவதாநந்தரம் முன்பு [1] மறந்த இந்த்ரன் தன்பதம் பெறுகைக்காக ‘ஒருவரம் கொள்ளவேணும்’ என்றான். [2] அங்கு தப்பினார்க்கு இவர்களுளராக அஞ்சவேண்டா. [3] இங்கு தப்பினார்க்கு விநாசமேயிறேயுள்ளது.

இப்படி தேவதைகள் வந்து இவர்களுக்குச் சொல்லிற்றுச் செய்வர்களோ வென்னில் *[4] த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:* என்றும் *[5] பரிஹர மதுஸூதநப்ரபந்நாந்* *[6] இறைஞ்சியும் சாதுவராய்* இத்யாதி, *[7] நாவலிட்டுழி தருகின்றோம் நமன்றமர் தலைகள்மீதே* *[8] உன் தமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல் * என்று முண்டிறே. இந்த [9] ஆக்கரான தேவதைகளன்றிக்கே ஸாக்ஷாத் தேவதைகளான * அயர்வறுமமரர்களுமகப்பட இவர்களைத் தொழா நிற்பர்கள். எங்ஙனே யென்னில், *[10] ஆரவம் பெருகிக் குனிப்பாரமரர் தொழப்படுவாரே* *[11] மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே* *[12] விரும்புவரமரர் மொய்த்தே* *[13] விண்ணுளாரிலும் சீரியர் * என்று சொல்லுகையாலே.

ஆழ்வானை ஒரு பட்டன் ‘தேவதாந்தரங்களை நீங்கள் கண்டால் பண்ணுமாசாரமென்’ என்று கேட்க, ‘சாஸ்த்ர விரோதமாகக் கேளாதே கொள்ளாய், தேவதாந்தரங்கள்

1. மறந்த-சக்ரவர்த்தி திருமகனுடைய ஈச்வரத்வத்தை விஸ்மரித்த. 2. அங்கு பகவத் விஷயத்தில். 3. இங்கு பாகவத விஷயத்தில். 4. மாங்கல்யஸ்தவே. 5. வி. பு. 3-7-13. 6. 2449. 7. 872. 8. 1744. 9. ஆக்கரான-ஆதுநிகரான இந்த்ராதிகள். 10. 2948. 11. 3028. 12. 2940. 13. 2556.

உங்களைக்கண்டால் பண்ணுமாசாரமென்' என்று சேளாய் என்றார். *[1] ஸர்வேஸ்மை தேவா பலிமாவஹந்தி *[2] தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய தேஷாமபி நமோநம: * எம்பெருமானுக்குப் பண்ணும் அஞ்சலியேயிறே இவர்களுக்கும் பண்ணுவது. [3]. இவர்கள் பெருமைக்கு இடைவிடாதே பண்ணுகிறேன். எம்பெருமானுக்கு ஒருகாலமையும்; [4] ப்ராப்யரான இவர்களுக்கு ஸர்வஸ்வதாநமாகத் தன்னைக் கொடுக்குமத்தனையிறே.

(ஆழிமழைக்கண்ணா) *[5] ஸம இதி லோகஹிதாஹிதே நியுக்த:* என்று யமனை அக்கார்யத்துக்கிட்டாப் போலே புண்யபாபாநு ரூபமாக வேண்டுமளவிலே வர்ஷிப்பிக்கைக்கு ஸர்வேச்வரனாலே நியமிக்கப்பட்டுப் பேரளவுடையையாய் வர்ஷத்துக்கு நிர்வாஹகனானவனே! தேவதை அப்ரஸித்தமானமையாலும் தங்கள் ராஜகுலத்தாலும் 'இன்ன பணிக்குக்கடவன்' என்பாரைப்போலே தொழிலையிட்டுச் சொல்லுகிறார்கள். தந்தாம் பாகத்தளவிலே கார்யம் செய்யும் போதைக்கன்றோ [6] புதைத்துவிட வேண்டியது; எங்களுடைய பாக்ய பலமன்றோ எல்லாரும் புஜிக்கப்புகுகிறது; சேதநனுடைய நன்மை தீமை கணக்கிட்டு [7] படி வைக்கும் [8] குசாண்டுள்ள ஈச்வரகோஷ்டியிற்படியன்றியே [9] வரையாதே பாவமே பச்சையாக ரக்ஷிக்குமெங்கள் கோஷ்டியிற்படியே நடத்தித்தரவேணும். *[10] மித்ரமௌபயிகம் கர்த்தும், விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ: * *[11] ஏவமுக்தா ஹநுமதா * இத்யாதி. *[12] பாபாநாம் வா* *[13] ராஜஸம்ச்ரயவச்யாநாம்* *[14] அலமேஷா* இத்யாதி. மஹாபாரதம் தூது போனவனேற்றமான நீர்மையைச் சொல்லுகிறது. ஸ்ரீராமாயணம் பிராட்டி நீர்மையைச் சொல்லுகிறது.

---

1. தைத்திரீய சீக்ஷா 5-3. 2. (?) 3. இரண்டுக்கும் வ்யாவ்ருத்தியென்னென்னில் அருளிச்செய்கிறார் - இவர்களித்யாதி. இது 'நமோநம:' என்கிற த்விருக்தியின் கருத்து. 4. ப்ராப்யரான-ப்ராப்யதமரான. 5. வி. புராண. 3-7.15. 6. புதைத்துவிடுதல் (அத்ருஷ்டாநுகுணமாகக் கார்யங்களை) செய்தல்-வர்ஷித்தல். 7. படிவைத்தல்-ஜீவனம் கற்பித்தல், பல ப்ரதாநம் பண்ணுதல் 8. குசாண்டு-ஸாமர்த்யம் 9. வரையாதே-பின்வாங்காமல், இடைவிடாமல் 10. ஸ்ரீ. ஸு. 21.19, 20. 11. ஸ்ரீ. யு. 116.48. 12. ஸ்ரீ. யு. 116.44 13. ஸ்ரீ. யு. 116-38 14. ஸ்ரீ. ஸு. 27-58.



(ஒன்று நீ கை கரவேல்) அர்த்திகள் [1] 'கைபெரியன்' என்று கொண்டாடுமா போலே உன்படிகளொன்றும் குறையாதபடி வந்துதோற்றவேணுமென்கிறார்கள்.

'என்னை ஸ்தோத்ரம் பண்ணுகிறதென்? உங்களுக்கு வர்ஷிக்கைக்கு நீருண்டோ' என்னில்; (ஆழியுட்புக்கு முகந்து கொடு) என்கிறார்கள். இந்த முன்வாயில் ஸாகரர் கல்லின உப்புக்குழி யொழிய பெருங்கடலிலே புக்கு முகந்து கொண்டு பாதாளம் கிடக்க மணலோடே பருகவேணும். (ஆர்த்து) முதலிகள் அநசநத்திலே தீக்ஷித்துக் கிடந்தவர்கள் த்வநி கேட்டபோதே எழுந்திருந்து ஆடும்படி திருவடி பிராட்டியைத் திருவடிதொழுத ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஆர்த்துக் கொண்டு வந்தாப் போலே வரவேணும். (ஏறி) நாங்களும் ஜகத்தும் கண்ட காட்சியாலே தளிரும் முறியுமாம்படி மின்னி முழங்கி வில்லிட்டுக் கொண்டு வரவேணும். *[2] விச்ரம்ய விச்ரம்ய புந: ப்ரயாந்தி* கர்ப்பிணிகள் நகர்ந்து நகர்ந்து பெரிய ஏற்றமேறுமா போலே ஏறவேணும். *[3] மதயானைபோ லெழுந்த மாமுகில்காள் *[4] விண்ணீலமேலாப்பு விரித்தாப்போலே ஆகாசாவகாச மத்தனையும் நிறையும்படி பாரித்துக்கொண்டு வரவேணும்.

(ஊழிமுதல்வன்) ஸ்ருஷ்டித்தால் இவைபண்ணும் நன்மை தீமைக்குத் தக்கபடி பார்க்கும் பார்வையன்றிக்கே ஸ்ருஷ்டிக்கு முன்பு எல்லாரையும் 'ஐயோ' என்று ஒக்கப்பார்க்கும் பார்வை போலே, நீங்களும் இங்குத்தைக்கு ஒத்திருக்க வேணுமென்று கருத்து. *[5] ஞாலம் படைத்த வெம்முகில் வண்ணனே யிறே. (உருவம்போல் மெய் கறுத்து) அகவாயில் நீர்மையை உங்களால் [6] தேடப்போகாது, நிறத்தையாகிலும் கொள்ளுங்கோள். [7] நாய்ச்சியார் விழிவிழிக்கச் சொல்லுகிறார்கள். ஈச்வரனைப் போலே முகம் தோற்றாமல் நின்று உபகரிக்க வொண்ணாது. (ஊழிமுதல்வனுருவம்போல் மெய்கறுத்து, காலோபலக்ஷிதமான ஸர்வ பதார்த்தங்களையு முண்டாக்கவேணு

---

1 கைபெரியன்-பரமோதாரன் 2. ஸ்ரீ. கி-28-22. 3, 585 4. 577. 5. 2908. 6. தேட-ஸம்பாதிக்க. 7. நாச்சியார் விழிவிழிக்கையாவது பெரியபிராட்டியார் ஸாபராதாநபராத காலங்களெல்லாவற்றிலும் குளிரவே கடாக்ஷிக்குமா போலே கண்ணுக்குக்குளிர்ந்து தோற்றுகை.

மென்று திருவுள்ளத்தில் கொண்டதாகையாலே கருவடைந்த பயிர்போலே யிருக்கும் திருநிறமென்கை. (மெய் கறுத்து) †† அக வாயில் நீர்மை அவனுடைய நீர்மைக்கு நெருப்பென்னலாம்.

(பாழி) இடமுடைமை. [1]* பாஹுச்சாயா மவஷ்டப்த:* ஒதுங்கின ரக்ஷ்யவர்க்கம் பொருந்தும்படி நிழல்மிக்கிருக்கை. *[2] நிவாஸ வ்ருக்ஷஸ் ஸாதூநாம்*. (அந்தோள்) [3] உழறுபால். ரக்ஷகமும் தானேயாய் போக்யமும் தானேயாகை. *[4] சுந்தரத் தோளுடையானிறே. படவடித்தாலும் விடவொண்ணாது. (பற்பநாபன்) "புத்ரஸ்தே ஜாத:" என்று ப்ரஹ்மாவை உண் டாக்கின வநந்தரம் பிறந்த ஒளி. *[5] கொப்பூழிலெழு கமலப்பூ வழகரெம்மானார்* என்று கொப்பூழிலழகைக் கண்டு கிடக்கு மவளிறே. (கையிலாழி) வெறும்புறமே அமையும், அதுக்குமேலே திருவாழி. ராஜாக்களுக்கு பிள்ளை பிறந்தால் காம்பீர்யத்தால் அவர்கள் தாங்கள் பேசாதிருக்க, உரியவடியார் செய்யாடல் [6] போற்றுமா போலே திருவாழி நின்று ஜ்வலியா நிற்கும். *[7] ஆழியொடும் பொன்னார் சார்ங்க முடைய வடிகளை இன்னா ரென்றறியேன்*. [8] வெளிச் செறிப்பிக்கைக்கும் அழிக்கைக்கும் பரிகரமதுவே. (வலம்புரிபோல் நின்றதிர்ந்து) பாரதஸமரத் திலே பாஞ்சஜந்யம் போலே முழங்கி தோற்ற வேணும். *[9] ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம்* *[10] பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்* *[11] கைகழலாநேமியான்* இத்யாதி ஸ்த்ரீத்வத்துக்கு மூலைபோலே அவனுடைய பும்ஸ்த்வத்துக் குத்திருவாழி (வலம்புரி) *[12] உண்பது சொல்லி லுலகளந்தான் வாயமுதம்* *[13] பொதுவாக வுண்பதனைப்புக்கு நீயுண்டக்கால்* என்று தம் துறையிலுள்ளதிறே. [14] தேவதாந்தர பஜநம் பண் ணினாரைப் போலே யன்றியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணி னார் பெறுமாபோலே பெறவேணும். (நின்று) தேவமாத்ருகம் போலன்றிக்கே பகவத்ஸமாச்ரயணம் நதீமாத்ருகம் போலே [15] சரதமென்கை.

†† அகவாயில் நீர்மை-மேகத்தின் உள்ளுள்ள ஜலம்.

1. ஸ்ரீ. ஸு. 34.31. 2. ஸ்ரீ. கி.15.19. 3. உழறுபால்-குழம்புப் பால். 4. 587. 5. 608. 6. போற்றுதல்-புகழ்தல். 7. 1950. 8. வெளிச் செறிப்பு-ப்ரகாசம். 9. கீதை. 1-9. 10. 595 11. 2671. 12. 574. 13. 575. 14. இவ்வாக்யம் 'வலம்புரி, தாழாதே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து. 15. சரதம்-நிச்சிதம்.



(தாழாதே) தசரதாத்மஜன் 'சரணம்' என்று புகுந்தவர் களைக் கொண்டல்லது தரியாதாப்போலே வரவேணுமென்கை. (சார்ங்க முதைத்த) பெருமாள் கடைக்கணிக்கும் போதும் பெருமாளைப் பார்த்து ப்பின்னைத்தானே பராக்ரமிக்குமென்கை. [1] அகம்படியர் கிளர்ந்தால் அரசனாலும் விலக்கப்போகா திறே. *[2] அவஷ்டப்ய மஹத் தநு:* பெருமாள் தம்மால் அமைக்க வொண்ணுமே பிடித்துக்கொண்டு நின்று ஊசலாடி னார். *[3] சார்ங்கமென்னும் வில்லாண்டான்* சரமாரி *[4] வாளி மழை* வார்த்தை முறைப்பட்டது. (சரமழை) *[5] சரவர்ஷம் வவர்ஷஹ* என்று தானே சரவ்ருஷ்டி பண்ணவற்று. (வாழ வுலகினில் பெய்திடாய்) அங்கு சத்துருக்களான ராக்ஷஸர் மேல்பட்டாப் போலே யன்றிக்கே லோகமடைய வாழும்படி யாகப் பெய்யவேணும். எங்கள் வடிவைப்பாராய், மழை வேண்டுவார்க்கு நாளையுமாம்.

இப்படி செய்தால் எனக்கு ப்ரயோஜன மென்னென்ன; உன்கார்யம் செய்து தருகிறோம். (நாங்களும் மார்கழி நீராட) நாங்களும் க்ருஷ்ணனும் மகிழ்ந்து குளித்துத் தருகிறோமென் கிறார்கள். *[6] ப்ரஹர்ஷயிஷ்யாமி* *[7] நாங்கள் வியக்க வின்புறு தும்*. இவர்களுக்கு *[8] காட்டேல்மின் நும் முரு என்னுயிர்க் கதுகாலன்* என்னவேண்டாவே; க்ருஷ்ணனைக் கண்டாப் போலே யிருக்கவமையும். *[9] ஏவமுக்தா ஹநுமதா மைதிலீ ஜநகாத்மஜா, உவாச தர்மஸஹிதம் ஹநூமந்தம் யசஸ் விநீ* 'தஹ பச' என்றும் 'கொள்ளைக்கூத்து' என்றும் ராமகோஷ்டி யில் சொல்லும் வார்த்தையைச் சொல்லாதே எங்கள் குடிப் பிறப்புக்கும் பிறந்த மண்பாட்டுக்கும் தக்கபடி சத்துருக்களும் வாழவேணும். எங்கள் கோஷ்டியில் வார்த்தையைச் சொல் லென்று அருளிச் செய்தார். 4

மாயனை மன்னுவடமதுரைமைந்தனை
தூயபெருநீர் யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினில்தோன்றுமணிவிளக்கை
தாயைக்குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை

1. அகம்படியர் - அந்தரங்கர். 2. ஸ்ரீ. யு. 100-11. 3. 12. 4. 3329. 5. ஸ்ரீ. யு. 94.18. 6. ஷ. 46. 7. 3697. 8. 3607. 9. ஸ்ரீ. யு. 116-37.

தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது
வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்க
போயபிழையும் புகுதருவான்நின்றனவும்
தீயினில்தூசாகும் செப்பேலோரேம்பாவாய். 5

அஞ்சாம்பாட்டு. (மாயனை) நாம் இங்ஙனே [1] இலையகலப் படுத்தா நின்றோம். *ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி பவந்தி மஹதாமபி * என்கிறபடியே நாம் அநாதிகாலம் பண்ணின பாபங்கள் விக்நப்படுத்தாதோ? சக்ரவர்த்தி திருமகன் திருவபிஷேகத்துக்கு வஸிஷ்டன் முகூர்த்த மிடுகிறான், பாக்யாதிகரான பெருமாள் முடிசூடவிருக்கிறார், ஜகத்தடைய இதுக்கு *[2] ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி * என்று மங்களாசாஸநம் பண்ணுகிறது. *[3] நாராயண முபாகமத் * என்று பெரிய பெருமாளை ஆச்ரயிக்கிறது. அங்குமன்றோ சில விக்நங்கள் வந்ததென்று சில பெண்பிள்ளைகள் சொல்ல, எம்பெருமான் ஸங்கல்பித்த உத்ஸவத்துக்கு விக்நமுண்டாவது; அவனடியார் ஸங்கல்பித்த உத்ஸவத்துக்கு விக்நமுண்டாகா தென்றார்கள் சில பெண்பிள்ளைகள்; எங்ஙனே யென்னில், தன் ஸங்கல்பத்தை அழியமாறி ஸ்ரீ பீஷ்மன் அர்ஜுநன் ஸங்கல்பத்தை முடிய நடத்துகையாலே. நாம் இம்மஹோத்ஸவத்திலே அதிகரித்துச் செல்லா நிற்கவே அதுக்கு விக்நம் பண்ணக்கடவ உத்தர பூர்வாகங்கள் தன்னடையே நசித்துப்போ மென்கிறார்கள்.

(மாயனை) தானே தன்னை யமைத்துத்தரி லல்லது தனனை நினைக்கவும் பேசவுமொண்ணாதபடி கரைகட்டாக்காவேரி போலே யிருக்கும் பேரளவுடைய ஸ்ரீ வைகுண்ட நாதனென்றபடி. இங்கு ஒருகாலொருத்திக்கு உடம்பு கொடுக்குமாபோலே எல்லார்க்கு மொக்க அங்கு தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்குமவன். *[4] ஸதா பச்யந்தி *. (மாயன்) அவ்விருப்புக்கு எத்திறம்! *[5] வைகுந்தனென்பதோர் தோணிபெறாது உழல்கின்றேன் * என்னு மவனிறே. இடைச்சேரி யோபாதி அவ்விடமும் கைவந்தபடி. நவநீத சௌர்ய நகரக்ஷோபாதிகளை நினைத்து *[6] எத்திறம் * என்றதாகவுமாம். [7] இவ்விடத்தில்

1. இலையகலப் படுத்தல்—பாரித்தல். 2. ஸ்ரீ. அ-2-52. 3. ஸ்ரீ. அ. 6.1. 4. ஸாம உத்த. 18.2.4. 5. 548. 6. 2697. 7. இவ்விடத்தில் திருநாட்டுப்படியை விஸ்தரிக்கலாவது அவ்விடத்தில் அதிகாரிகளில்லாமையாலே பகல்விளக்குப் பட்டுக்கிடந்த ஸௌலப்யம் இருள்தருமா ஞாலமான



திருநாட்டுப்படியை விஸ்தரிப்பது. அவ்விடத்திலே எம்பெருமானபிமானத்திலே ஒதுங்கித் தந்தாமுக் கென்ற அபிமானமின்றிக்கே யிருக்கும்; இங்கு தனித்தனியே *[1] ஈச்வரோஹம்* என்றிருப்பர்கள். இங்குள்ளார் அங்கே செல்லிலும் 'அடியேன்' என்று தெளியப்பண்ணும். *[2] தெளிவிசும்பு அவ்விடம். அங்குள்ளா ரெவரேலும் 'என்னது' என்று அறிவு கலங்கப் பண்ணும். *[3] இருள் தருமா ஞாலம் இவ்விடம்.

(மன்னு வடமதுரை) பகவத்ஸம்பந்தம் மாறாத தேசம்' (மன்னு) ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் ஆர்த்தரக்ஷணார்த்தமாக இங்கே பிறக்கையாலே உளனானன். [4] (ஸம்ஸாரிகளுக்கு ப்ராணன் வரும்.) ஆர்த்தர்க்கும் ஆச்ரிதர்க்கும் பிறந்தவாறே வயிறெரிந்து மறக்கப்பண்ணாதிருக்கும். (வடமதுரை) *மதுரா நாம * ஸ்ரீ வைகுண்டம் போலே [5] குன்றும் குறிச்சியல்ல. [நகரீ] விட்டுப்போந்த விடமோ, பிறந்து விரும்பின விடமோ நகரியாவது? [புண்யா] அவனைத் தருகைக்கு உபாயமாகை. [பாபஹரா] விரோதி நிரஸநத்துக்கும் தானே. [சுபா[ அவை யிரண்டு மில்லையாகிலும் விடவொண்ணாது. பரமபதமும் ஸம்ஸாரமும் வேண்டாமென்னும்படி ப்ராப்யமும் தானே. [யஸ்யாம் ஜாத:] இத்தனைக்கு மடி. [ஜகந்நாதஸ் ஸாக்ஷாத் விஷ்ணுஸ் ஸநாதந:] தன் ப்ரஜைகள் பட்ட ஆபத்தை நீக்குகைக்கு அவர்களிட்ட வழக்காய். *[6] வைகுந்தா * என்றும் 'அகர்மவச்யன்' என்றும் சொல்லுகிறபடியே பிறக்கை. [ஸாக்ஷாத்] *[7] அங்கு வைத்திங்குப்பிறந்த. [8][பூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம்] அத்திக்கில் ஆதித்யனுக்குள்ள ஸம்பந்தம். ஸ்நேஹத்தில் புரையில்லை யித்தனை. (மைந்தனை) பிறந்த போதே கம்ஸனை முடிக்க வல்ல மிடுக்கென்றுமாம், தாய்தமப்பன் காலில் விலங்கு கழலும்படி யிருக்கை யென்றுமாம். பிள்ளையென்றுமாம். ராஜாவென்றுமாம்.

இவ்விடத்தில் நவநீத சௌர்யாதிகளினால் ப்ரகாசிக்கிற தென்றபடி. அங்கு நித்யஸூரிகள் *சூட்டு நன் மாலைகள் படியே பரிமாறின பரிமாற்றத்தை. இங்கு கோப கோபிமார்கள் தன்னிடத்தில் பரஸ்பரம் பரிமாறின பரிமாற்றமாகவுமாம். 1. கீதை. 16-14. 2. 3627. 3. 3722. 4. குண்டலிதம் ஸந்திக்தம். 5. குறு ஆம் குறிச்சி-நிக்ருஷ்டமான சிறிய க்ராமம், பள்ளி. 6. 2640. 7. 2948. 8. வி-பு. 5.3-2.

(தூயபெருநீர் யமுனை) கலங்காப்பெரு நகரம் விட்டுப் போந்தவனுக்குத் திருவாய்ப்பாடி என்றொரு அஞ்சிறை புகலிட முண்டானாப்போலே, விரஜையை மறப்பிக்க ஒரு ஆறுண்டான படி. *[1] ப்ரஸாதம் நிம்நகா யாதா * கோதாவரியைப் போலே பிராட்டியைக் கும்பிடுகொண்டு சரணாகத காதுகையா யிராதே கம்ஸனுக்கஞ்சி எழுந்தருளின போதைக்கு வற்றியும் நீர்விளையாட்டு ஆடுகைக்குப் பெருகியும். *[2] வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ * அடியறிந்தார் கூடப் போந்து கருத்தறிந்து பரிமாறினாப் போலே [3] அடிக்குப் பாங்கா யிருந்தபடி. (தூய) *[4] வல்லவீவதநோச்சிஷ்டபவித்ராதரவித்ருமம் * க்ருஷ்ணனும் பெண்களும் மாறிமாறிக் கொப்பளித்த தூய்மை என்றுமாம். (பெருநீர்) [5] ச்லாக்யதை என்றுமாம். [2] யமுநாம் சாதிகம்பீராம் *. (யமுனைத்துறைவனை) யமுனையாற்றுறையுடையவனை. க்ருஷ்ணனுக்கும் பெண்களுக்கும் களவுக்குப் பெருநிலை நிற்குமாறு. [6]*சங்கணி துறைவன் *என்னுமாபோலே பெண்கள்படும் துறையை யுடையவன்.

(ஆயர்குலத்தினில் தோன்றும்) ஸ்ரீ வைகுண்டத்தில் குணங்கள் [7] மடிந்துகிடக்கும். இங்கே, *[8] ஒளிவருமுழுநலமாய்த்து. அந்தகாரத்தில் விளக்குப்போலே ஸ்ரீ மதுரையில் பிறப்பு, பிறவாத ஸ்ரீ வைகுண்டத்தோடொக்கும் திருவாய்ப்பாடியில் பிறப்பைப் பார்க்க வென்கை. [9] ஏக்கத்திலே முலைப்பாலின்றிக்கே யொழிந்தது, நாக்கொட்டி அழமாட்டிற்றிலன்; சிறுகுபடாமைக்கு அதுவும் கார்யகரமாய்த்து. முலைப்பால் பெற்று அழுதது [10] இவ்விடத்திலே யிறே.

(தோன்றும்) *[11] தேவகீ பூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம் மஹாத்மநா *. அஜத்வ அவ்யயத்வ ஈச்வரத்வங்களுக்கு அழிவு வாராமே பிறக்கையாலே, கீழ்திக்குக்கு ஆதித்யனோடுள்ள ஸம்பந்தம் இவனோடு இவளுக்குள்ளது. (அணிவிளக்கு) புகையும் எண்ணெயு மில்லை. (மணிவிளக்கு) அதுக்குமேலே மங்கலதீபம்.

1. வி. பு. 5.3. 4. 2. வி.பு. 5.3.18. நீர்வற்றினதுக்கு ப்ரமாணமிது. அகாதஜலமென்று அர்த்தமாக அதுக்கு ப்ரமாணம் யமுநாஞ்சேத்யாதி. 3. அடிக்கு வஸுதேவருடைய ஸ்ரீபாதத்துக்கு. 4. ... (?) 5. ச்லாக்யதை-நைர்மல்யம். 6. 3699. 7. மடிந்து-ஸங்குசிதமாய். 8. 2699. 9. ஏக்கம்-ஸ்தந்யம் பெறுமே அழுகை. 'ஏக்கத்தாலே' என்று பாடாந்தரம். 10. இவ்விடம் திருவாய்ப்பாடி. 11. வி.பு.5-3-2.



(தாயைக்குடல் விளக்கம் செய்த) பெற்றவயிற்றுக்குப் பட்டம் கட்டுகை. *[1] கௌஸல்யா சுசுபே தேந புத்ரேணாமித தேஜஸா*. *[2] என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள் *. (தாமோதரனை) தன்வயிற்றில் தழும்புகண்டார் 'இப்படி பவ்யனாவதே; என்று கொண்டாடப்படுகை. [3] (பட்டம் கட்டுகையாவது) நம்முடைய பந்தம் நம்மாலறுக்க வொண்ணாதாப் போலே அவனுடைய பந்தமும் அவனாலறுக்க வொண்ணாது. [4]* பக்திக்ரீதோ ஜநார்தந: * க்ஷாமத்திலே ஒருபடி தவிட்டுக்கு எழுதிக்கொடுத்தார், நல்லகாலப் பட்டால் ஸார்வபௌமனாங் காட்டில் மீட்கப்போமோ! 'தானெழுத்து வாங்கின தழும்புகாட்டி நம்மை எழுத்து வாங்குவித்துக்கொள்ளும் சேஷியுடைய திருவிலச்சினை' என்று பட்டர்.

(தூயோமாய்) அவன் இடையனாகக் கொண்டு தாங்கள் இடைச்சிகளான சுத்தி. க்ஷத்ரியனிடையனானாப் போலே தாங்களு மிடைச்சிகளானபடி. வாயிலும் முகத்திலும் நீரிடாதே வருகை. பரபத்திலே வந்தவாறே, *[5] ஸாதுரேவ * என்றான். புண்யத்திலே வந்தவாறே, *[6] பரித்யஜ்ய * என்றான். ஸம்ஸாரிக்குக் குற்றமாவது தனக்கு நன்மையுண்டென்றிருக்கை. *[7] மத்தவருத்மசிந்தயித்வா *. ஸ்ரீ விபீஷணாழ்வான் கடலிலே முழுகியோவந்தது! த்ரௌபதி தூய்மையாய்க் குளித்தோ ப்ரபத்தி பண்ணிற்று! அர்ஜுநன் பறையர் நடுவேயன்றோ சரமச்லோகம் கேட்டது! இருந்தபடியே வருகைக்கு மேற்பட சுத்தியும் தேடவேண்டா; அசுத்தியும் தேடவேண்டா. (தூயோமாய் வந்தோம்) கையில் மயில்கற்றையில்லை யென்றுமாம். அதாவது, *[8] ரம சாப்யந்தராத்மாயம் சுத்தம் வேத்தி விபீஷணம் * இவனோடு ஸம்பந்தமுடையார்க்கு மகப்பட ப்ரயோஜநாந்தர பரதையில்லை என்னும்படி அநந்யப்ரயோஜநதை தோற்ற வந்தானென்றாப்போலே, அநந்யப்ரயோஜனைகளென்னவுமாம். சக்ரவர்த்தி பற்றச்சொன்ன தர்மத்தை த்யஜித்து, விடச்சொன்ன தர்மத்தை யநுஷ்டித்து, பற்றச்சொன்ன பலத்தையிழந்து விடச்சொன்ன பலத்தையே பற்றிப்போனான். ருஷிகள் அவ

1. ஸ்ரீ. அ. 1-8. 2. 133. 3. குண்டலிதம் ப்ரக்ஷிப்தம். 4. வி.த. 3-24. 5. கீதா. 9 30. 6. கீதா 18-66 7. ஆ. 65. 8. ஸ்ரீ. யு. 18-37

னையே உபாயமாகக்கொண்டு பலத்திலே வ்யபிசரித்துப்போனார்கள். புல்லுக்கு மெழும்புக்கும் விலக்குகைக்குப் பரிகரமில்லாமையாலே உபாயோபேயங்களிரண்டும் எம்பெருமானேயாய்விட்டது. ஆநுகூல்யம் பேரிட்டு விலக்குவாரும் ப்ராதிகூல்யத்தாலே விலக்குவாருமாய் எல்லாருமிழந்துபோனார்கள். இவள் இளையபெருமாளைப்போலே இரண்டுமவனேயாகப் பற்றிச் செல்லுவோமென்கிறாள். [1] ஆசும் மாசுமற்றபடி.

(வந்து) அவன் திருவுள்ளத்தைப் புண்படுத்தக்கடவோம். *[2] உபஸ்த்தேயை ருபஸ்த்தித:, *[3] பத்ப்யாமபிகமாச்சைவ,* *[4] ஹ்ரீரேஷாஹி மமாதுலா * அவன் செய்யுமத்தை நாம் செய்தோமென்கை. *[5] வந்துனதடியேன் மனம் புகுந்தாய்*. (நாம்) உபாயத்தில் துணிவு முற்படவொண்ணாது; உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்க வொண்ணாது; அப்படியேயிருக்கிற நாம். (தூமலர்கள்) அயத்நஸித்தமாகக் கைக்கெட்டின பூவெல்லாம்; ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாத மலரென்றுமாம். *[6] மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவம்* என்னுமாபோலே அநந்யப்ரயோஜநமான மலர்கள். (தூவி) [7] யதாததாவாபி * என்கிறபடியே க்ரமவிவக்ஷையில்லாமை. ப்ரணயிகளுக்குச் சடங்குண்டோ? (தொழுது) தொழுவார் கண்டால் 'முறைகெட்டார்கள்' என்று தோற்றுமைக்காக தேவதைகளைத் தொழுமாபோலே, ஓரஞ்ஜலி பண்ணுதே தொழுவித்துக் கொள்ளுமவர்களிறே இப்போது தொழுகிறார்கள். *[8] இது மிகையாதலில்* அவனை, *[9] ருணம் ப்ரவ்ருத்தமிவ மே* என்னப் பண்ணுகை.

(வாயினால்பாடி) வாய்படைத்த ப்ரயோஜநம் பெற்றோமென்று ப்ரீதிபூர்வகமான குணகீர்த்தநம் பண்ணி. (வாயினால் பாடி) மாநஸஸஹகார மில்லாமை. **உவாசச* *போற்றுதும்* என்னும்படியே அத்தலையை அழிக்கக்கடவோமென்றுமாம். (மனத்தினால் சிந்திக்க) மனஸ்ஸிலே பகவத் குணங்களை விளைநீரடைத்துக்கொள்ள. (மனத்தினால் சிந்திக்கப்போய பிழையும்

1. ஆசு - உபாயாந்தரபரிக்ரஹரூபதோஷம், மாசு - உபேயாந்தர பரிக்ரஹரூப தோஷம். 2. ஸ்ரீ. ஆ. 10-10. 3. ஸ்ரீ. அ. 50-40. 4. ஸ்ரீ. ஆ. 10-9. 5. 1188. 6. 1960. 7. ஆ. 28. 8. 3587. 9. ம. உ. 58-22.



புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும்) பாலும் கண்டசர்க்கரையும் பருகப்பிச்சு தெளியுமாபோலே, நமக்கினிதாக பகவதநுபவம் பண்ணுநிற்கப் பெருநெருப்புப் பட்ட பஞ்சுபோலே பிணமுகம் காணவொண்ணாதபடி நசித்துப்போம். *[1] இஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே * என்கிறபடியே. பூர்வாகமாவது அநாதிகாலம் புத்திபூர்வகமாகப் பண்ணிப்போந்த பாபம். உத்தராகமாவது ஜ்ஞாநம் பிறந்தால் ப்ரக்ருதிவாஸனையாலே ப்ராமாதிகமாகப் பண்ணும் பாபம். பாபங்களாவன—ஸர்ப்பங்கள் போலே செய்தபோதே மிடற்றைப் பிடிக்குமதல்ல. க்ரியை இங்கே நசிக்கும்; கர்த்தா அஜ்ஞனானகையாலே மறக்கும்; ஸர்வஜ்ஞன் உணர்ந்து புஜிப்பிக்கும்; பூர்வாகத்தை நசிப்பிக்கும்; உத்தராகத்துக்கு அவிஜ்ஞாதாவாம்; இனி ஆரை அண்டைகொண்டு அவை ஜீவிப்பது? ஸர்வேச்வரன் 'பொறுத்தோம்' என்னத் தீருமத்தனையிறே. (செப்பு)

[மாயனை மன்னு வடமதுரை மைந்தனை தூய பெருநீர் யமுனைத் துறைவனை ஆயர்குலத்தினில் தோன்றும் மணி விளக்கை தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதரனை—செப்பு] என்றந்வயம் 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன்கோயில்
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும்
மெள்ளவெழுந்து அரியென்றபேரரவம்
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். 6

ஆறும் பாட்டு. ஒரு விடாயாற்றிக்கு வேண்டும் பெண்கள் திரண்டு, சிலர் இழக்கச் சிலர் புசிக்கமாட்டாமையாலும், எம்பெருமானிலும் இவர்களுத்தேச்யரா யிருக்கையாலும் இவ்விஷயம் தனி அநுபவிக்கவொண்ணாதே திரளாக அநுபவிக்க வேண்டும் விஷயமாகையாலும் மேல் பத்துப்பாட்டாலும் ஒருவரையொருவர் எழுப்புகிறார்கள்.

இவ்வநுபவம் ஆண்டாளிங்கேயிருந்தநுபவித்தல், பரமபதத்திலுள்ளார் அங்கேயிருந் தநுபவித்தல் செய்யுமத்தனை. ஸம்ஸாரிகளுக்கு நிலமல்ல, ஸம்ஸாரிகளுறங்குகைக்கு ஹேதுவும் வேறே; உணர்ந்தால் அநுபவிக்கைக்கு விஷயமும் வேறே;

1. சா. 5.24-3.

தமஸ்ஸூ அபிபவிக்க உறங்கிக் காலமுணர்த்த உணர்ந்து விஷய ப்ரவணராவர்கள்; எம்பெருமானுடைய உறக்கமும் உணர்ச்சியும் வேறுபட்டிருக்கும்; எங்ஙனேயென்னில்; ஆச்ரித ஸம்ரக்ஷணோபாயசிந்தைபண்ணுகை உறக்கம்; உணருகையாவது அவர்களுடைய ஆர்த்தநாதம் பொறுக்கமாட்டாமை. உணர்ந்தால் அவர்கள் விரோதியைப் போக்கி அவர்களோடே கலக்கை போகமாயிருக்கும்; இவர்களுக்கு உறங்கப் பண்ணுவதும் உணரப்பண்ணுவதும் உணர்ந்தால் மறக்கப்பண்ணுவதும் போய் அநுபவிக்கப்பண்ணுவதும் க்ருஷ்ண குணங்களே. *[1] சிந்நம் பிந்நம் * இத்யாதிப்படியே ஜ்ரும்பணாஸ்த்ரம் மோஹநாஸ்த்ரம் சில மோஹிக்கப்பண்ண சில துடிக்கப்பண்ணுமாபோலே.

மநோரதம் முடிந்து ஓலக்கம் கிளம்பினபோதே தொடங்கி ஒருவரையொருவர் எழுப்பத் தொடங்கினார்கள். ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானும் ஆஸுரப்ரக்ருதிகளாபத்து கண்டு பொறுக்கமாட்டாமே திருத்தப் பார்த்தார். இவர்கள் ராவணனாபத்து கண்டு பொறுக்கமாட்டாதே திருத்தப் பார்க்குமவர்கள்; தந்தாமாபத்து பொறுக்கவல்லவர்களோ?

'செய்யாதன செய்யோம்' என்று இவர்களுடைய ப்ரதிஜ்ஞைதான் ததீயர் முன்னிலையாக எம்பெருமான்பாடே செல்லுகையும் கூட அநுபவிக்கையும்; இது ஸ்வரூபமாகையாலும் அவச்யம் ஒருவரையொருவர் எழுப்பவேணும். பரதசைக்ககப்பட அநுபவிக்கக் குழாங்கள் வேண்டாநின்றது. திருவாய்ப்பாடி வ்ருத்தாந்தத்தில் தனி இழியப்போமோ? * வர்ஷாயுதைரித்யாதி, [2]சதுர்முகாயுரித்யாதி * 2575-இமையோர்தமக்கும் ....நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே * என்கிறபடியே நித்யஸூரிகளும் 'எத்திறம்' என்னுமத்தனை. * மயர்வறமதிநலம் பெற்றாரும் 'எத்திறம்' என்னுமத்தனை. தான் தன்னை அநுஸந்தித்தாலும் * ஜந்ம கர்மச மே திவ்யம் * (கீதா 4-9.) என்று 'எத்திறம்' என்னுமத்தனை.

* நாராயணனே நமக்கே பறைதருவான் * என்று முதலிலே திருமந்த்ரத்தை யெடுத்தாள். திருமந்த்ரத்தினுடைய மூன்று பதத்தாலும் மூன்றர்த்தம் சொல்லுகிறது; முதற்பதம் ஆத்மாவினுடைய ஸ்வாபாவிகசேஷத்வத்தைச் சொல்லுகிறது; இரண்டாம்பதம் அதுக்கெதிர்த்தட்டான அந்யசேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமும் அஸஹ்யமாம்படி சொல்லுகிறது. மூன்றாம் பதம் அந்த சேஷத்வத்தினுடைய வீமையாவது ததீய சேஷத்வ பர்யந்தமாயிருக்கை என்கிறது. முதற் பதத்திற் சொன்ன

1. ஸ்ரீ. யு. 94-12. 2. வ. பு. 73-94.



அர்த்தத்துக்கு த்ருஷ்டாந்த பூதர் இளையபெருமாள்; மத்யம பதத்தில் சொன்ன அர்த்தத்துக்கு திருஷ்டாந்த பூதர் ஸ்ரீபரதாழ்வான். மூன்றாம் பதத்திற் சொன்ன அர்த்தத்துக்கு த்ருஷ்டாந்த பூதர் ஸ்ரீசத்ருக்னாழ்வான். அவன்படி இவர்களது. *1740-உற்றது முன்னடியார்க்கடிமை, நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் கண்ணபுரத்துறையம்மானே * 3552-அவனடியார் நனி மாக்கலவியின்பமே நாளும்வாய்க்க * என்னுமவர்களுடைய பெண்பிள்ளையிறே; ஆகையால் ஒருவரையொழிய ஒருவர்க்குச் செல்லாமை உணர்ந்தவர்களடையச் சென்று உணராதார் வாசல்களைப்பற்றி எழுப்புகிறார்கள்.

(புள்ளும் சிலம்பினகாண்) பகவத் விஷயத்தில் புதியவளாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். 'விடிந்தமைக்கு ப்ரமாணமென்' என்ன, 'நாங்களுணர்ந்து வந்தது போராதோ' என்ன 'உறங்கினாரன்றோ உணருவார், அது வார்த்தையோ' என்ன, 'நாங்களேயல்லோம் நோன்பு முணர்ச்சியு மறியாதே காலமுணர்த்த பூவலருமா போலேயும், நாழிகை வட்டில் நீர் நிரம்பினால் விழுமாபோலேயும் இரையறுதியிலே உணரும் புள்ளும் சிலம்பிற்றின' என்கிறார்கள். மின்னாலே இடித்தாப்போலே உனக்கு முன்னே புள்ளும் உணர்ந்தன கிடாய் என்றுமாம். "இது திருவாய்ப்பாடியன்றோ? *3294 ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல் * 3279 மரங்களுமிரங்கும் வகை *[1] பக்ஷிணோபி ப்ரயாசந்தே ஸர்வபூதாநுகம்பிநம் *[2] மமத்வச்வா நிவ்ருத்தஸ்ய *[3] விஷயே தே மஹாராஜ *[4] ராமோ ராமோ ராமஇதி * *594 காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் மாலின்வரவு சொல்லி மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ *" ஆண்டாள்பிறந்த ஊரில் பக்ஷிகளுக்குத்தானுறக்கமுண்டோ" என்று ஆச்சான்பிள்ளை.

மற்றையடையாளம் சொல்லுங்கோளென்ன (புள்ளரையன்கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ) திருப்பள்ளியெழுச்சியில் சங்கத்வனி கேட்டிலையோ? திருவாய்ப்பாடியிலும் ஒரு திருமுற்றமுண்டோவென்ன, உண்டு; *[5] பாலா அபி க்ரீடமாநா: * இத்யாதி. 'ஒருதோளே, தோள்வளையே, ஒருவளையமே, முறுவலே, ஒருநோக்கமே என்று சக்ரவர்த்தித் திருமகன் பக்கலிலே பிள்ளைகளுமகப்பட ஈடுபட்டுச் செல்லாநிற்க, *[6] ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் * என்று அவன்தான் பெரியபெருமாளை ஆச்ரயிக்குமாபோலே, க்ருஷ்ண

1. ஸ்ரீ. அ. 45-31. 2. ஸ்ரீ. அ. 59-5 3. ஸ்ரீ. அ. 59.8. 4. ஸ்ரீ. யு. 131-97. 5. ஸ்ரீ. அ. 6.16. 6. ஸ்ரீ. அ. 6-1.

னையும் கும்பிடுகொள்வானொரு எம்பெருமானுண்டு. (புள்ளரையன்) அவனுக்கு நிரூபகதர்மம், *[1]ராமாநுஜம் லக்ஷ்மண பூர்வஜம்ச *[2] அகஸ்த்யப்ராதரம் *நாராயணன், என்னுமாபோலே. வழியே இழியுமவர்களாகையாலே பெரிய திருவடியை முன்னிடுகிறார்கள். *[3]அப்புள்ளின், பின்போன தனிநெஞ்சமே *என்னக்கடவதிறே.

(வெள்ளைவிளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ) சங்கு வெளுக்குங்காட்டில் போதுவிடியுமோ? அழைக்குங்காட்டில் நாமாகவேணுமோ? சங்குமுழங்குங்காட்டில் நமக்குப் புறப்படவேணுவோ? உங்களுக்கெப்போதும் பாவனை அதுவேயிறே. *[4] வெள்ளைவிளிசங்கிடங்கையில் கொண்டவிமலன் *[5] பூங்கொள் திருமுகத்து மடுத்தூதியசங் கொலியும் *(பேரரவம்) நீயுமுணருகைக்குப்போரும் சங்கின் த்வநி. 'மஹாராஜர் வாசலிலே சென்று இளையபெருமாள் சிறு நாணேற்றியெறிந்தார், என்ன, அநந்தாழ்வான் 'தாரையினுடைய ஸ்தநோஷ்மாவைப்பற்றிக் கிடந்த மஹாராஜர் ஆந்த்யமும் தீருகைக்குப் போரும் த்வநி, என்றான்.

(கேட்டிலையோ) 'இதுவும் கேளாதபடியே அங்குற்றையில் அந்யபரதை' என்று பழியிடுகிறார்கள் இவள் துணுக்கென்றெழுந்திருக்கைக்காக. 'போதுவிடிந்து சங்கூதுகிறார்களல்லர், பணிக்குக் கடவர்களை அழைக்கிறார்கள், என்ன, 'தூஷணங்கள் தேடிச்சொல்லிப் போதுவிடியப் பார்த்திருப்பதே' என்று இவர்கள் சொல்ல, 'அந்தியம்போதே உணரவேணுமோ? அவர்கள் போதறியாதே சங்கூதினாரத்தனை' என்ன, (பிள்ளாயெழுந்திராய்) "இன்னோன்புக்குப் புதியையாயிறே நீ உறங்குகிறது. உனக்கு இன்னும் இளமையிறே, அந்தியம் போதுதான் இக்கோஷ்டி உத்தேச்யமன்றோ, பகவத் ஸம்ச்லேஷத்துக்கும் பாகவதஸம்ச்லேஷத்துக்கும் வாசியறியாயீ" என்ன, "நீங்களன்றோ பிள்ளைகள், அவன்பாடு கார்யங்கொள்ளவிறே புகுகிறது, விடியவேணும், நீங்களுத்தேச்யைகளாகில் உங்கள் பேச்சேயமையும்" என்ன, அவளுக்கு இவர்கள்பேச்சே யமையாநின்றது, இவர்களுக்கு அவள்வடிவுகாணவேண்டாநின்றது. * 3552-இன்பமே நாளும் வாய்க்க, *1581-ஒருகாலும் பிரிகிலேனே *என்கிற இது ஆண்டாளுக்கு முதலிலே பிறந்து ப்ரகிருதியாயிருக்கிறது. இது காண்கைக்கு மேலே அவனோடே அநுபவிக்க வேண்டாவோ' என்ன, மாறிமாறி இரண்டு முத்தேச்யமாகக்கடவது. (பிள்ளாய்) எல்லாரும் *[6] குரவ: கிம் கரிஷ்யந்தி* என்று போகாநிற்க, சிந்தயந்தி குருதர்சநம் பண்ண 'ப்ரணயித்வத்தில் புதியள்' என்றாப்போலே இங்குமிவளை 'பிள்ளை.' என்கிறது.

1. ஸ்ரீ. ஸு. 28-10, 2. ஸ்ரீ.பா. 1-42. 3. 2480. 4. 546. 5. 595
6. வி.பு. 5.18-22



"நானோ புதியை? நீங்களன்றோ? காலமறியாதே எழுப்பினிகோள், உங்களை உணர்த்தினார்" என்ன, தங்களை உணர்த்தினவர்களைச் சொல்லுகிறார்கள். (பேய்முலையித்யாதி) "போதுவிடிந்தது, பெண்ணே எழுந்திரு" என்ன, இவள் துணுக்கென்று புறப்படுகைக்காக, "புகுந்த அபாயம் கேட்டிலையோ? பெரியாழ்வாரோடு குடல்துடக்குடையார்க்கு உறங்கவிரகுண்டோ?" என்கிறார்கள். பெற்றதாயுமுதவாத தனிமையிலே பாதிக்கவந்த பூதனையை முடித்துக் காவலாகவைத்த சகடம் அஸுராவேசத்தாலே தன்மேலே ஊரப்புக, அதுகட்டழிந்துசிதறும்படியாகத்திருவடிகளாலேஉதைத்து, கண்வளர்ந்தருளுகைக் கீடாம்படி பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே அக்கடல்போலேயாய் ஸர்ப்பஜாதிக்கஸாதாரணமான சைத்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய ப்ரசுரமான திருவநந்தாழ்வான் மேலே ஜகத்ரக்ஷண சிந்தாத்மகமான யோகநித்ரையிலே மிகவும் அவகாஹித்து, ராமக்ருஷ்ணாத்யவதாரகந்தமாய் அநிருத்தரூபியாய்க் கண்வளர்ந்தருளுகிற எம்பெருமானை ஸபரிகரமாக அடக்கவற்றான ஹ்ருதயங்களிலே கொண்டு. பகவத்குணங்கள் ஸ்ம மானால் ப்ரவ்ருத்திக்ஷமரன்றிக்கே சிதிலாந்த : கரணரான முநிவர்களும் அவனோடுசேர்ந்து கொண்டல்லது நிற்கமாட்டாதே க்ஷணமாத்ரவிச்லேஷத்திலே மாந்துமவரான யோகிகளும், தங்கள் திருவுள்ளத்திலே கண்வளர்ந்தருளுகிற எம்பெருமானைத் திருப்பள்ளியுணர்த்துகைக்காக அவனலசாதபடி ஸ்தநந்தயப்ரஜையை மார்பிலே ஏறிட்டுக்கொண்டு உறங்கும் மாதா அந்த ப்ரஜை உணராமல் க்ரமத்தாலே எழுந்திருக்குமாபோலேயும், ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானைப் பெரிய கற்களோடே கட்டி மலையில் நின்றும் கீழேதள்ளுகிறபோது அவன் தன்னுடைய நோவு பாராதே 'எம்பெருமானுக்கு என் புகுகிறதோ' என்னும் பயத்தாலே தன் கைகளாலே மார்வைப்புதைத்துக்கொண்டு 'பார்த்தருளீர்' என்றாப்போலேயும் அவஹிதராய்க்கொண்டு எழுந்திருந்து 'ஹரி: ஹரி:' என்று, எம்பெருமானுமுணர்ந்து கேட்டாரும் வாழும்படிபண்ணின திருநாமஸங்கீர்த்தநம், உறங்குவாருடைய படுக்கையிலே வெள்ளம்கோத்தாப்போலே க்ருஷ்ண விச்லேஷத்தாலே கமர்பிளந்த எங்கள் ஹ்ருதயங்களும் நனைந்து தேறி குளிரும்படி வெள்ளமிட்டது, அதுகாண் எங்களை எழுப்பிற்று என்கிறார்கள்.

(பேய்முலை நஞ்சுண்டு இத்யாதி) அவர்கள் பயப்படுகைக்குச் சொன்னார்கள், 'விரோதி போகப்பெற்றதே' என்று இவள் பயம் கெடுகைக்கு உடலாய்த்து. (கள்ளச்சகடம்) நம்மை முடிக்கவந்ததென்கை. பேயை ஆராய்ந்து கொள்ளலாம், நாம்

ரக்ஷகமாகவைத்த சகடங்கிடீர் என்றஞ்சுகை. (கலக்கழியக் காலோச்சி) அவனகப்பட்டுக்கொண்டு நின்றான். மூலை தாழ்த்த தென்று மூரி நிமிர்ந்த திருவடிகள் அத்தை முடித்ததென்கை. அவனபத்துக்கும் நம்மாபத்துக்கும் ரக்ஷை அவன் திருவடிகள். ஆகையாலே யன்றோ நம் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவார ணத்துக்கும் அவற்றையே பற்றுகிறது. (வெள்ளத்தரவில் துயி லமர்ந்த) 'ஏழேபிறந்த ஆபத்துக்குத் தப்பிப்போய் திருவநந் தாழ்வான் மேலே சாயப்பெறுவதே' என்கிறார்கள். (வெள்ளம்) திருமேனியில் ஸௌகுமார்யத்துக்குச்சேர குளிர்த்தியுண்டான படி (அரவு) *[1] ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி*. ஜ்ஞாநம் - இருவகையுமறிகை. விஜ்ஞாநம - எல்லா கைங்கர்யமும பண் ணுகை. எல்லாவடிமையாகிறது *2134-சென்றால் குடையாம்* இத்யாதி. ப்ரக்ருஷ்டம் - தன்னை மறக்கை. பலம் - பெரியபிராட் டியாரும் தானும் துகைக்கைக்குப் பாங்கான சக்தி. திருமேனிக்கு உறுத்தாமைக்குப்படுத்த பரிமளப்படுக்கை. பாம்புக்கு நாற்றம் குளிர்த்தி மென்மைகள் ஸ்வபாவம். இனி திருவிடையாட்டத் தில் பாம்புக்கு வாசிவைத்துக் கொள்ளுமத்தனை. இவன் மூச்சுப் பட்டு மதுகைடபர்கள் பொடிபட்டுப்போகையாலே இப்படுக்கை யுடையவனுக்கு பயப்படவேண்டாவென்கை. (அமர்ந்த) பிராட் டிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கினாலும் உணராமை. (வித் தினை) வித்தை விரைக்கைக்கு நீரிலே சேர்த்தாப்போலே யிருக்கை. காரணமிருக்கக்கார்யமுண்டாகச்சொல்லவேணுமோ வென்கை. இதுக்குமுன்புபிறந்த பிறவிகள் போராமை இனி பிறக்கைக்கடி யிட்டிருக்கிறபடி.

(உள்ளத்துக்கொண்டு) மதுகைடபர்களில்லாத விடம். பனிக்கடலில் விடாய்தீர மனக்கடலிலே கொண்டு. (முனிவர் களும் யோகிகளும்) *வைகுந்தத் தமரும் முனிவரும் போலே குணநிஷ்டரும் கைங்கர்யபரரும். இளையபெருமாளையும் ஸ்ரீ பரதாழ்வானையும்போலே யிருப்பார். உறங்குகிறவர்களையும் உணர்த்துகிறவர்களையும் போலேயிருப்பார். திருவாய்ப்பாடி யிலே முனிவர்களும் யோகிகளுமுண்டோ வென்னில், அவனிங்கே வந்தவதரிக்க, பின்பு இடையர் பசுநிரைக் கொட்டில்களிலே படுகாடு கிடப்பர்கள். (மெள்ள வெழுந்து) கர்ப்பிணிகளைப் போலே. *[2] ஹ்ருதயேநோத்வஹந்* (அரியென்ன பேரரவம்) ஹரிஹரி யென்கையாவது, *[3] ரக்ஷது த்வாமசேஷாணும் * என் னும்படியே உன்னைநீயே காத்துத்தரவேணும் என்று திருப்பல் லாண்டு பாடுகை. பேரரவமாவது ஒருவர் 'ஹரி' என்ன, பஞ்ச லக்ஷம் குடியிலும் ஒருத்வநியாயெழுகை. முந்துற, *[4] அதஸோப

ஆ. 39. 2. வி.பு. 1-19.12. 3. வி.பு. 5-5-14. 4. தை.ஆ. 7.2.



யம் கதோ பவதி * என்று இத்தலையில் பயம் கெட்டால் பின்னை அத்தலைக்கு பயப்பட்டுத் திருப்பல்லாண்டு பாடுமத்தனையிறே. பண்டு இழவுபேறுகள் தன்னளவிலே. இப்போது பேறிழவுகள் அவனளவிலே. ருஷிகளும் முந்துற, *[1] நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய* என்று தொடங்கி, *[2] கதஸ் ஸ்வம் ஸ்தாநமுத்தமம் *என்று பயம் கெடுவர்கள். ஸ்ரீ பரத்வாஜ பகவான் பெருமாள் எழுந்தரு ளின நாளே தொடங்கிமீண்டு தன் ஆச்ரமத்திலே எழுந்தருளுந் தனையும், *[3] வவந்தே நியதோ முநிம் * என்று வயிறெரிந்தபடியே இருந்தான். (உள்ளம் புகுந்து குளிர்ந்து) படுக்கைக்கீழே வெள் ளம் புகுந்தாப்போலே திருநாமம் செவிவழியே புக்கு உடம்பு வவ்வவிட உணர்ந்தோம். 6

கீசுகீசென்றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோபேய்ப்பெண்ணே!
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து
வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ
நாயகப்பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி
கேசவனைப்பாடவும்நீ கேட்டேகிடத்தியோ
தேசமுடையாய்! திறவேலோரெம்பாவாய். 7

ஏழாம்பாட்டு. சிலரைச்சிலர் எழுப்பினால் அவர்களைக் கொண்டு நோம்புக்குப்போமவர்களல்லரே இவர்கள்; பிறரு டைய நன்மையே தங்களுக்கு ப்ரயோஜந மென்றிருக்குமவர் களிறே; நாம், வைஷ்ணவர்கள் தந்தாமே சில நன்மைகள் ஸம் பாதித்துக்கொண்டாலும் பொறுக்கமாட்டோமே; பகவத்ஸம் பந்தம் மெய்யாகில் தன்வயிற்றில்பிறந்த ப்ரஜையினுடைய ஸம் ருத்தி தன்ன தென்றிருக்குமாபோலே யிருக்கவேணுமிறே. நாமிவ்வர்த்தம் சொல்லுகைபறையர் ஓத்துச்சொல்லுமாபோலே யிறே. ஆசாரத்திலும் சிறிதுண்டாகாவிடில் ஜ்ஞாநமில்லை யென்னு மத்தனை. ஆட்கொண்ட வில்லிஜீயர் அருளிச்செய்த வார்த்தைக்கு நஞ்சீயரருளிச்செய்த வார்த்தையை நினைப்பது. ஸ்ரீ தேவிமங்கலத்தில் கமுகிலே நஞ்சீயர் ஸ்ரீ பாதத்தையுடை யார் சிலர் இருப்போரையடைய அமுது செய்விக்கக்கண்டு பட் டர் பிடாத்தையிட்டுக்கொண்டிருந்து ப்ரீதராய் 'நம்முடைய கையிலே சில மெய்யுண்டாயன்று அடியிலே சில மெய்யருண் டாய் அவர்களுடைய மெய் இவ்வளவும வரப்பேசுகிறது; என்று அருளிச்செய்தார். *. அடியார் குழாங்களை—கூடுவது* என்றார். *[4] யதா க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய

1. ஹ. வி. 55-52. 2. ம. மௌ. 3. ஸ்ரீ. யு. 127.1. 4. சா. 3.14.1.

பவதி* என்கிற தத்க்ரது ந்யாயத்தாலே *3765 அந்தமில்பேரின் பத்தடியரோடிருந்தமை* யென்றார். இங்கே இக்குழாம் இனி தானுமிறே அக்குழாம் ஸித்திப்பது. கலியர் சோறுடையார் வாசலிலே சென்று கூப்பிடுமாபோலே சென்றெழுப்புகிறார்கள்.

கீழ் பகவத்விஷயத்தில் புதியாளொருத்தியை எழுப்பிற்று; இப்பாட்டில் பழையளாயிருந்து வைத்து புதுமை பாவித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறது.

(கீசுகீசு) 'போதுவிடிந்தது, எழுந்திராய்' என்ன 'விடிந்தமைக்கடையாளமென்' என்ன, 'ஆனைச்சாத்தன் பேசாநின்றது' என்கிறார்கள். (கீசு) அநக்ஷரரஸமாயிருக்கை. கீழிற்பாட்டில் *மெள்ளவெழுந்தரியென்ன பேரரவத்தோடு இவற்றினுடைய சப்தத்தோடு வாசியற்றிருக்கிறது. விவக்ஷித்தால், திருநாமம் சொன்னத்தோடு அநக்ஷரமான இவற்றின் த்வநியோடு வாசியற உத்தேச்யமாயிருக்கிறபடி. 'நாராயணாய' என்றத்தோடு 'நாராயண' என்றத்தோடு வாசிபற்றது அவனுக்கு உத்தேச்யமாயிருக்குமாபோலே. ஓரானைச்சாத்தன் பேசுங்காட்டில் விடியுமோவென்ன, எங்கும் பேசாநின்றதென்ன, நீங்கள் அங்கில்லையோவென்ன; எங்களாலன்று, தானே உணர்ந்தனவென்ன, அதுக்கடையாளமென்னென்ன, (கலந்து) கலந்து பேசுகிற பேச்சு கேட்டிலையோவென்ன, இராவெல்லாமுறங்கி விடியாநிற்கவோ கலப்பதென்ன, 'இரவெல்லாம் கலந்து இப்போது பிரிகிறோம்' என்று பகலெல்லாம் பிரிந்திருக்கைக்கு விலைநீரடைத்து 'பிரியப்புகுகிறோம்' என்று தளர்த்தி தோற்றப்பேசுகிற பேச்சு கேட்டிலையோ வென்ன, மரக்கல மேறுவார் ஆறுமாஸத்துக்குத் தண்ணீரும் சோறும் ஏற்றுமாபோலே இக்கலவியரவம் கேட்டிலையோ? கேளாமைக்கு மற்று ஆரவாரமுண்டோ செல்லுகிறது? *[1] நிஸ்வநம் சக்ரவாகாநாம் * இத்யாதி. இப்பேச்சைக் கேட்டு வைத்து க்ருஷ்ணன் முகத்திலே விழித்துக்கொண்டு நில்லாதே தரிக்கவல்லையாவதே! *[2] ஸௌமித்ரே ச்ருணு வந்யாநாம் வல்கு வ்யாஹரதாம் ஸ்வநம் * விடிவோறே பெருமாள் திருமாளிகையிலே சென்று எழுப்புவாரும் கவிபாடுவாரும் வம்சாவளி சொல்லி ஏத்துவாருமாக எழுந்திருக்கக்கடவ அவர்கள் பக்ஷிகளுக்கு முன்னே உணரும்படியாய், வேறேசிலரையும் 'இப்பேச்சும் உன் செவியில் பட்டதில்லையோ' என்றெழுப்புவதாய்த்தே! என்ன தர்மஹாநி, என்கிறான் ருஷி. பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து இடைச்சியாய் கண்ணுறங்காதே எழுப்பித்திரிகிறாப் போலே இவர்களும்.

(பேய்ப்பெண்ணே) அறிந்துவைத்து அறியாதார் பேச்சைச் சொல்லுகை. இவர்களாகில் இப்படி சொல்லுகை பணியென்று

1. ஸ்ரீ. கி. 30.10. 2, ஸ்ரீ. அ. 56.2.



பேசாதே கிடக்க, அறிந்து வைத்துக் காற்கடை கொள்ளுகையாலே 'பேய்ப் பெண்ணே' என்கிறார்கள். 'தத்விஷயத்திலும் ததீயவிஷயம் நன்று' என்று அறிந்து வைத்துப் பேசாதே கிடைக்கையால் சொல்லுகிறார்கள். என்னவறிவுதான்! 'மிதுநமாய்க்கலந்தால் அடியேன்' என்னிலும் என்பர், எதிர்த்தலையைத் தாழச் சொல்லிலும் சொல்லுவர். "பேய்ப் பெண்ணே" என்றத்தோடு "நாயகப் பெண்பிள்ளாய்" என்றத்தோடு வாசியில்லை அகவாயில் பாவமொன்றாகையால்.

'போது விடியாதிருக்க விடிந்ததென்கிற நீங்களோ நானோ பேய்ப் பெண்' என்ன, 'விடியச் செய்தே விடிந்ததில்லை' என்கிற நீயே பேய்ப் பெண்' என்ன, விடிந்தபடி எங்ஙனே, என்ன; 'தயிர்கடைகிற ஓசை கேட்டிலையோ' என்கிறார்கள். (காசும் பிறப்பும்) அச்சுத்தாலியும் முளைத்தாலியும். இடைச்சிகள் பூணுமாபரணம். ப்ராஹ்மணர் ஸந்த்யா வேளையில் பூணூலிடுமாபோலே, தங்கள் அநுஷ்டாந வேளையில் இவர்களுக்கு ஆபரணம் பூணவேணு மென்கை. (கலகலப்ப) *3371 அரவூறுசுலாய் மலை தேய்க்குமொலி * என்னுமாபோலே. (கைபேர்த்து) தயிரின் பெருமையாலும் இவர்கள் ஸௌகுமார்யத்தாலும் பேர்க்கப் போகாது, அதுக்குமேலே அவன் ஸந்நிதியிலும் கடையப் போகாது. அஸந்நிதியிலும் கடையப் போகாது; என்னென்னில், காணாவிடில் கை சோரும், காணில் 'தயிரை மோராக்க வொட்டேன்' என்று கையைப் பிடிக்கும். *2673 மோரார் குடமுருட்டி * என்னக்கடவதிறே.

(வாச நறுங்குழல்) தயிர் கடைகைக்கு நியமித்து முடிக்கும் மயிர் முடி கடைகிற ஆயாஸத்தாலே குலைந்து கடைந்த வேர்ப்பாலே அதிபரிமளமாய், முடைநாற்றம் தோற்றாதபடி, கிண்ணகவெள்ளம் கரையை யுடைத்துப் பரம்புமாபோலே எங்கும் சுழித்து வெள்ளமிடாநின்றது. *3612 தெருவெல்லாம் காவிகமழ் திருக்காட்கரை * என்னுமாபோலே. பரிமளம் ஊரை உறங்க வொட்டுகிறதில்லை. (ஆச்சியர்) ஊராகக் கிளர்ந்தது.

(மத்தினாலோசை படுத்த) ஒரு மந்தரத்தாலே கடலைப் படுத்துமாபோலே முழங்காநின்றது. * உத்காயதீநாமரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத் த்வநி: | தத்நச்ச நிர்மந்தந சப்தமிச்ரிதோ நிரஸ்யதே யேந திசாமமங்கலம்* ஸ்ரீ.பா. 10-46-47. அவன் கண்ணழகிலே தோற்றுப் பாடுகிற த்வநியும் இவர்கள் காலில் சிலம்பில் த்வநியும் குழலில் வண்டுகளினுடைய த்வநியும் ஆபரணங்கள் தன்னில் தான் கலகலவென்

கிற த்வநியும் கையில் வளையொலியும் கிளர்ந்து பரமபதத்
திலே சென்றுகிட்டி 'க்ருஷ்ண குணங்கள் திருவாய்ப்பாடி
யிலே பரிமாறுநிற்க, இவ்வுயரத்திலே என்ன விருப்பு
இருக்கிறிகோள்' என்று அங்குள்ளாரை வசைபாடுவா
ரைப் போலே யிருக்கிற த்வநியும் கேட்டிலையோ வென்கி
றார்கள். * விக்ரேதுகாமா கில கோபகந்யா முராரிபாதார்பிதசித்த
வ்ருத்தி: | தத்யாதிகம் மோஹவசாதவோசத் கோவிந்த தாமோதர
மாதவேதி. கர்ணு.* எம்பெருமான்பக்கலிலே பிச்சேறிக்கிடக்
கிற பெண்களை இவர்கள் அந்யபரதை தீர வேணுமென்று
பார்த்து 'தயிரும் பாலும் நெய்யும் விற்று வாருங்கோள்'
என்று கொடுத்துவிட, விற்கும்போது நெஞ்சில் நினைப்பது
க்ருஷ்ணனை யாகையாலே 'கோவிந்தனைக் கொள்ளுங்
கோள், க்ருஷ்ணனைக் கொள்ளுங்கோள், ச்ரிய: பதியைக்
கொள்ளுங்கோள்' என்று நிற்பர்கள். (அரவம் கேட்டி
லையோ) * 699 வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ வாண்
முகம் வேர்ப்பச் செவ்வாய் துடிப்ப தண்டயிர் நீ கடைந்திட்
டவண்ணம் தாமோதர மெய்யறிவன் நானே * என்று
சொல்லும்படி. ஆண்களான தேவஜாதிக்கு ஒரு கைபற்று
மவன் பெண்களைக் கைவிடானே, அக்கோலாஹலங்கள
டையக்காண எழுந்திரா யென்கிறார்கள். (தயிரரவம் கேட்
டிலையோ) இதுகேளாதபடி தயிர் கடையாநின்றதோ
வென்கை.

இதுக்கு இன்று இங்ஙனே கொடுமை சொல்லுகிறி
கோள். வந்த கார்யத்துக்குடலானவற்றைச் சொல்ல
மாட்டிகோளா வென்ன, நாங்கள் தவிருவோமோ நீ
பேசாதேகிடந்தாலென்ன ; விடிந்தமைக்கடையாளம் தயிர்
கடைகிற ஓசை கேட்டிலையோவென்பானென், பண்டு
போலே பசுக்களும் பால்களும் அளவுபட்டிருந்ததோ !
க்ருஷ்ணன் பிறந்து நல்லடிக்காலமாய் பசுக்களும் பாலும்
பெருத்து கறக்கும்போதறியாதே கடையும்போதறியாதே
செல்லுகிற ஊரிலே இதோரடையாளமாகமாட்டாது ;
வேறடையாளமுண்டாகில் சொல்லுங்கோள் என்று
பேசாதே கிடந்தாள். (நாயகப் பெண்பிள்ளாய்) சேஷிக்கு
சேஷபூதர்தான் சொல்லவிரகுண்டோ? அழகிதாக நிர்வா
ஹகையானாய்; 'உனக்கிது பரமன்றாகில் எங்களுக்கோ
பரம்' என்று * ததோ மௌநமுபாகமத் * என்கிறபடியே
பேசாதேகிடக்க, 'உங்களடியேனை இங்ஙனே சொல்லு
வதே' என்ன, 'நீ வாய்திறவாவிட்டால் நாங்கள் செய்வ
தென்' என்ன, ஆனால் திறக்கிறேனென்ன; இவள் துணுக்
கென்று எழுந்திருக்கைக்காகக் கேசிவத வ்ருத்தாந்தத்



தைச் சொல்லுகிறார்கள். (நாராயணன் மூர்த்தி) முகம்
தோற்றாதே வாத்ஸல்யத்தாலே விடாதேநின்று ரக்ஷிக்கக்
கடவஸர்வேச்வரனாயிருந்துவைத்து. (கேசவனை) கண்ணுக்
குத்தோற்றி நின்று நம் விரோதிகளைப் போக்குமவனை.
அவன் சேஷ்டிதங்கள் சிலரை அச்சங்கெடுக்கும்; (கேச
வனைப் பாடவும் நீகேட்டேகிடத்தியோ) ச்ரோத்ரஸுகமா
யிருந்ததுதானே நீர்வாய்ப்பாக உறங்குகிறாயோ ? கரவதத்
தினன்றுபோலே தழுவப்பாராய். * தம் த்ருஷ்ட்வா * ஸ்ரீ.
அ.30-39. இத்யாதி.

(தம் த்ருஷ்ட்வா) பண்டு மணக்கோலமிறே கண்டது ;
இப்போது வீரக்கோலத்தோடே காணப்பெற்றாள். (சத்ரு
ஹந்தாரம்) தமக்கொருவாட்டமின்றிக்கே எதிரிகளை அழியச்
செய்யப்பெற்றபடி. (மஹர்ஷீணும் ஸுகாவஹம்) ப்ரஜையினு
டைய ஆர்த்தி தீர்ந்து ஸுகிக்கக் காண்கையிறே தாய்க்கு
ஸுகம். பர்த்தாவானவன் பார்யைபக்கல் முகம்பெறாவிட்
டால் ப்ரஜையை எடுத்துக்கொண்டு வருமாபோலே,
பிராட்டிமுகம் பெறுகைக்காகப் பச்சையிடும்படி. (பபூவ)
சரணாகதருடைய ஆர்த்தியாலும் 'பெருமாளுக்கு என்புகு
கிறதோ' என்னும் பயத்தாலுமழிந்தஸ்வரூபம் அவர்களும்
அவரும் உளராகப் போருகையாலே இப்போதுண்டாய்த்
தது. இரண்டுதலையுமுண்டாக உண்டாய், இல்லையாகில்
இல்லையாமவளிறே (ஹ்ருஷ்டா) அதுக்குமேலே நிரதிசய
ப்ரீதியுண்டாயிற்று. (வைதேஹீ) அவதாரம் ஸப்ரயோஜந
மாய்த்து. [வைதேஹீ] வீரவாசி அறியும் குடியிலே பிறந்
தவள். ஒருவில் முறிக்க ஐயர் என்றும் உகந்தபடிக்கும்,
இன்று தனியே பதினாலாயிரம் ராக்ஷஸரைப் பொடிபடுத்தி
நின்ற பெரிய பராக்ரமம் காணப்பெற்றுதோம். [பர்த்தாரம்
பரிஷஸ்வஜே] பண்டுஐயர் கொடுத்தாரென்று அந்தமணக்
கோலத்தை தர்மத்துக்குத்தழுவினாள். இப்போது வீரக்
கோலங்கண்டு 'ஆண்' என்று தழுவினாள். அம்புவாய் தெரி
யாதபடி தனது ஸ்தநோஷ்மதையாலே வேதுகொண்டாள்.
இவர்க்கு ஸந்தாநகரணியும் விசல்யகரணியுமதுவே. ஜகத்
துக்குத் தாயும் தமப்பனும். (கேட்டேகிடத்தியோ) இப்ப்ர
மாதம் தப்பபெற்றுக்கிடக்கிறாயோ வென்ன; இவர்கள்
பேசின பேச்சிலே ஈடுபட்டுக்கிடக்கிற பெண்பிள்ளையைத்
திருஜாலகத்தாலே எட்டிப்பார்த்து, (தேசமுடையாய்திற)
என்கிறார்கள். இவளுடைய நிரவதிக தேஜஸ்ஸைக்கண்டு
உன்னைக் கண்டுவாழ 'தேசமுடையாய் திறவாய்' என்
கிறார்கள்.

கீழ்வானம்வெள்ளென்றெருமைசிறுவீடு
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும்
போவான்போகின்றாரைப் போகாமல்காத்து, உன்னைக்
கூவுவான்வந்துநின்றோம், கோதுகலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால்
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய். 8

எட்டாம்பாட்டு (கீழ்வானம்) இதுக்குமுன்பு சென்ற காலங்களுமெல்லாம் தப்பிக் கிழக்கு வெளுத்தது கிடாய் என்று உணர்ந்த பெண்பிள்ளைகளெல்லாரிலும் கொண்டாட்டமுடையாளொரு பெண்பிள்ளை வாசலிலே சென்று எழுப்புகிறார்கள்.

(கீழ்வானம்) இடிவிழுந்தாலும் கிடந்துறங்குமத்தனையோ! கிழக்குவெளுத்ததுகாண், எழுந்திருந்துகொள்ளாயென்கிறார்கள். ஆண்களும் வ்ருத்தர்களுமுணர்வதுக்கு முன்னே எழுந்திராயென்கிறார்களாகவுமாம். *305வெண்ணிறத்தோய் தயிர் * என்று தயிர் வெளுக்கத் தோய்ந்தவாறே விடிந்ததென்றறிகையாலே உறங்காதே பலகால் தயிரைப் பாராநிற்பகள். அத்தாலே கிழக்கு வெளுத்தது என்ன, இரவெல்லாம் கிழக்குநோக்கி விடிந்ததோ இல்லையோ என்று பார்க்கிற உங்கள் முகத்தினொளி கீழ்திக்கிலே சென்று தாக்கி உங்கள்முகத்திலே வந்து ப்ரவேசிக்கையாலே கிழக்கு வெளுத்தாயிருக்கிறது. அது அந்யதாஜ்ஞாநம்; மற்றடையாளங்களுண்டாகில் சொல்லுங்கோளென்ன, (எருமை சிறுவீடுமேய்வான் பரந்தனகாண்) சிறுவீடு- பனிப்புல்மேய காலத்திலே விட்டு வயல்களெங்கும் பரந்தனகாண் என்ன, ஸ்ரீநந்தகோபர்க்கு முத்திறமுண்டு, அவற்றின்பின்னே க்ருஷ்ணன் போம், பின்னையாரைக் காண்பது? எழுந்திராய் என்ன, நீங்கள் *திங்கள் திருமுகத்துச் சேயிழையாராகையாலே உங்கள் திருமுகத்திலொளியைக்கண்டு இருள்திரண்டு போகிறதித்தனை, அந்யதா ஜ்ஞாநம் அருணோதயத்துக்குஅஞ்சி இருள் சிதறிப்போகிற தென்னவுமாம் *920மேட்டிள மேதிகள் தளைவிடுமாயர்கள்* என்று இவள் தமப்பனார்எம்பெருமானைஎழுப்பினார்; இவர்கள் இவளை எழுப்புகிறார்கள். (சிறுவீடு) சிறுவீடு பெருவீடு என்று பெரியாழ்வார் வயிற்றில் பிறந்து அக்நிஹோத்ரத்தில் வாசியறிகைதவிர்ந்து இடைமுடியும் இடைநடையும் இடைப்பேச்சுமாய் இவற்றின் வாசியறிவதே! எருமை பரந்ததல்ல; ஆதித்ய கிரணங்களுக்கு உளைந்து



இருள் சிதறிப்போகிறபடிகாண் என்று இவர்களுக்குச் சொல்ல, நாங்கள் ப்ரமித்தோமாயிடுக, விடிந்ததில்லை என்று உன்னால் சொல்லலாவதுண்டோவென்ன, அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுக்கு நீங்களாயிரம் பெண்களிவ்வளவோ வுள்ளது? அல்லாதாரெல்லாம் உணராமையாலே விடிந்ததில்லையென்ன; அவர்களோ தவதவநாறுகிறார்கள், உன்னிலும் பிள்ளைகள் அவர்களாராயாதே போனார்கள், நீ எழுப்பக்கிடந்தாய். (போவான் போகின்றாரை) போகையேப்ரயோஜநமாகப் போனார்கள் என்ன, நானினி அங்குஎன் அவர்கள் போனார்களாகில்? என்ன; (போகாமல் காத்து) அவர்களைக் காவலிட்டோ செய்தது; ‘செய்யாதன செய்யோம்’ என்ற வார்த்தையை அறிந்திகொளோவென்று நம்முடைய வ்யவஸ்தையை உணர்த்தி நீவந்ததில்லையென்ன விலங்கிட்டாப்போலே நின்றார்கள், காலையொழிய நடக்கப்போமோ? நீங்கள் அவர்களை ஆணையிட்டுத் தடுத்திகொளோ வென்ன, * வாசம்செய் பூங்குழலாள் திருவாணை என்ன வேண்டாவே இவர்களுக்கு, நீவந்திலையென்னவமையும், கால் போகமாட்டார்கள். நீங்கள்தான் நின்றதென்னென்ன; (உன்னைக்கூவுவான்) இன்னார் வாசலிலே வந்து எழுப்பினார்களென்று தரம்பெற; எங்களுக்கிதுவே ப்ரயோஜநம் போரும். (வந்து) *உத்தரம் தீரமாஸாத்ய * (நின்றோம்) * கஸ்த ஏவ வ்யதிஷ்டத * ஸ்ரீ யு. 17-6.

(கோதுகலமுடைய) எங்கள் திறத்தாரோ இங்குத் தள்ளுண்டு நிற்பார். * 704. புள்ளுவம் பேசாதே போகு நம்பி, *3243. கழகமேறேல் நம்பி * என்னுமிங்குத்தைக்கு எங்களோடு அவனோடு வாசி என்? (கோதுகலமுடைய) இங்கே புகுந்துபோகவே எம்பெருமான் கைக்கொள்ள வேண்டும்படி அவனாலே கொண்டாடப்படுமவள். அவனிலும் ததீயரை உகக்கும் வேண்டப்பாடாகவுமாம். (பாவாய்) * நாரீணாமுத்தமா வதூ: ஸ்ரீ.பா 1-27 * நிருபாதிகஸ்த்ரீத்வமுடையளாகை. (எழுந்திராய்) நாங்கள் உன்னை உணர்த்த உணர்ந்தாய் என்கிற பெரியதரத்தை எங்களுக்குத்தாராய். * ஆத்மாநம் பூஜயந் ராமப்ருச்சஸ்யஸ்மாந் ஸுஹ்ருத்தயா *ஸ்ரீ யு. 17-35. இத்யாதிவத். பட்டர் போது விடியுந்தனையும் கண் வளர்ந்தருள சிஷ்டர்களெல்லாரும் கொண்டகோலங்களும் தாங்களுமாய் வந்து கிடக்குமாபோலே. எதுகார்யமாக நீங்கள் எழுப்புகிறதென்ன; (பாடிப்பறைகொண்டு) நாட்டார் நோன்புக்குப்பறை. தங்களுக்கு ஸேவிக்கை பலம். (பாடி) “ஹிரண்யாயநம:” இறே. பண்டு வாய் காவலிடுவர்கள்; இப்போது அது வேண்டாவே.

(மாவாய் பிளந்தானை) நாம் சென்றால் நம் அபேக்ஷிதம் செய்யுமோ வென்னில், நமக்காகக் கேசியைப்போக்கி நம்மையும் தன்னையுமுண்டாக்கித் தந்தவனன்றோ ? பிருந்தாவநத்தில் கேசியோடே வன்னியமறுத்துப் பின்னை பெண்ணுக்கும் பேதைக்கும் பயம் கெட்டு உலாவித்திரியலாய்த்து. (மல்லரை மாட்டிய தேவாதிதேவனை) அவன் பண்டன்றோ காணச்சிறையாய்க்கிடந்தது. அவனிப்போது பெரியனாய், * மதுராம் ப்ராப்ய வி.பு. 5-18-14.* இத்யாதிப்படியே நாகரிகனாய் நமக்கு வினைக்கொம்பாய்ப்போனான். நம் க்ருஷ்ணனை இப்போது ப்ராஹ்மணரடைய ஸர்வேச்வரன் தேவ் தேவனென்றுகாணும் சொல்லுகிறதென்ன ; (மல்லரை மாட்டிய) அங்குப்போயும் நம் கார்யமன்றோ செய்தது. *ஸக்ய: பச்யத வி.பு. 5-20-54.* என்கிறபடியே அவ்வூரில் பெண்களுக்கு உதவினதும் தங்களுக்கு உதவினதென்றிருக்கிறார்கள். * ஜாதோஸி தேவதேவேச வி.பு. 5-3-10., * *ஸோஹம் தேதேவதேவேச வி.பு. 5-7-70.* 2072* அவரை நாம் தேவரென்றஞ்சினோமே* என்றும். அவன் வேண்டப்பாட்டோடேயிருக்கிலோவென்னில்.

(சென்றுநாம் சேவித்தால்) அது ஆர்க்கழகு, நம் முறையை நாம் பெற்றோமாகிறோம். அவன் முறைகெடில் அலைந்திறே அவர்களிருப்பது. (சென்று)* உபஸ்தேயைருபஸ்தித: ஸ்ரீ.ஆ. 10-9. * சரண்யச்சரணாகதம் ஸ்ரீ.ஸு. 38-34. * பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்ரீ.அ. 50-40. * விபீஷணமுபஸ்திதம் ஸ்ரீ.யு. 17-15., * ஸம்ப்ராப்தம்* என்ன ; அவன்நெஞ்சு புண்படுகைக்காக அவனிருந்தவிடத்தே சென்று அவன் செய்வுத்தை நாம்செய்கிறோம். *ஏஹி பச்ய சரீராணி ஸ்ரீ.ஆ. 6-16. *விரஹம்தின்ன உடம்பைக்காட்டுகிறோம். *511. மாசுடையும்ட பொடுதலையுதறி * உபவாஸக்ருசாம் தீநாம் ஸ்ரீ.ஸு. 15-19. * (ஸேவித்தால்) ஸ்ரீபரதாழ்வான் படுத்து மத்தை நாம் படுத்துகிறோம். *சிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் நக்ருதம் மயா ஸ்ரீ.யு. 124-20. என்னப்பண்ணுகிறோம். *ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம் ஸ்ரீ.அ. 104-12. * பெருமாள் இரங்குகைக்காக ஆர்த்தர் பலரையும் திரட்டிக்கொண்டுபோனபடி. அவர்களுக்கு கைகேயி ஸம்பந்தமில்லையே. இரங்கவுமாமே. [சிரஸா யாசிதோ மயா] பசியர் வயிற்றைக்காட்டுமாபோலே திருவடிகளிலடிமை செய்யப் பெறாமையாலுறவின தலையைக் காட்டுகிறார். * யாவந் ந சரணௌ ஸ்ரீ அ. 98-8. * [ப்ராது :] உம்முடைய தம்பியல்லேனோ! [சிஷ்யஸ்ய] உம்மோடேயன்றோ நாம் மந்த்ரங்கள் கேட்டது. [தாஸஸ்ய] உமக்கு விற்கவும் ஒத்திவைக்கவும் அடியனல்லேனோ ? [ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி] கீழ்ச்சொன்னவை யொன்றுமில்லா விட்டாலும் ஆபத்து கண்டால் காகத்துக் கிரங்கினாப்போலேயாகிலு மிரங்கவேண்டாவோ ? (நாம் சேவித்தால்) அத்தலை இத்தலையானால் ஆர்க்கழகு; அவன் ப்ரணயித்வம் போனாலும் பொதுவான ஆர்த்தரக்ஷணம் போமோ?



(ஆவாவென்றாராய்ந்தருளும்) ப்ரணயித்வம் குடிபோனாலும் ஸத்தாப்ரயுக்தமான ஆர்த்தரக்ஷணம் போமோ ? * ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: ஸ்ரீ ஸு. 38-41.* என்று சொல்லிவைத்து அநுஷ்டியாதே பேசாதிருக்குமோ; அவன் பக்கல் ஒருதட்டில்லை. நம் குறையே; புறப்பட்டுக்கொள் என்கிறார்கள். 8

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய
தூபம்கமழத் துயிலணைமேல்கண்வளரும்
மாமான்மகளே! மணிக்கதவம்தாள்திறவாய்
மாமீர்! அவளையெழுப்பீரோ?, உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய். 9

ஒன்பதாம் பாட்டு. கீழில் பாட்டில் முக்தர்போலேயிருப்பாளொருத்தியை எழுப்பிற்று. இப்பாட்டில் நித்யர்படியையும் மைத்துன முறைமையையும் உடையாளொருத்தியை யெழுப்புகிறது. தொடர்ந்தடிமை செய்யும் இளைய பெருமாளையும் இட்டிடத்தே கிடக்கும் ஸ்ரீ பரதாழ்வானையும் போலே இருவரும்.

(தூமணி மாடத்து) * 3271. துவளின்மாமணிமாடம்* என்னுமாபோலே. குற்றமுண்டாய் எடுத்துக் கழிக்க வேண்டாத நன்மையையுடைய மணியாலே செய்த மாடம். அது ஜீவாத்மாவினுடைய அபஹதபாப்மத்வாதிகள் போலே. இது அவனுடைய அபஹதபாப்மத்வாதிகள் போலே. திருத்துலைவில்லிமங்கலத்துக்கு இங்கு கழித்தவற்றோடு செய்தது. ரஸிகராயிருப்பார் அந்தப்புரத்துக்கு நல்ல திட்டுச்செய்து அங்கு கழித்ததிட்டிறே தந்தாமுக்குச்செய்வது. நிர்தோஷமாயுள்ளுள்ள தெல்லாம் தெரியும்படியிருக்கிற ரத்நமயமான மாடத்திலே. (சுற்றும் விளக்கெரிய) மாணிக்கங்களினொளியாலே பகல் விளக்குப் பட்டிருக்கச் செய்தேயும் மங்களார்த்தமாக விளக்கெரிகிறது. புறம்பே நிற்கிறவர்களுக்கு உள்ளுள்ளதெல்லாம் தெரியும்படி எங்ஙனேயென்ன; மாணிக்கக்குப்பி போலேபுறம்பே நிற்க உள்ளுள்ள தெல்லாம் தோற்றா நின்றதென்கை. ‘சுற்றும்’

என்கிறது இதஸ்தத: க்ருஷ்ணன் இவளைக் கையைப் பிடித்துக் கொண்டு உலாவுமிடமெல்லா மெரிகை. ‘எரிய’ என்கிறது எங்களகங்கள் இருட்டிக் கிடக்க இங்கு விளக்கெரிகிறது வெறுமனன்று என்கை. புறம்புள்ள விளக்குகள் புகையாகிற்க உள்ளுள்ள விளக்கு எரியா நின்றதென்கை.

(தூபங்கமழ) உணர்ந்த போதைக்குக் கண்ணுக்கிலக்கன்றியே க்ராணேந்த்ரியத்தாலே அநுபவிக்கும்படி யிருக்கிற புகை. (கமழ) பரிமளம் ஸஹ்யமானபடி எங்ஙனே இவளுக்கு. * 3651 சீருற்றவகில் புகை* இத்யாதியேயிறே அவர்களுக்குச் செல்லுகிறது. (கமழ) புகையுள்ளிட்டன வன்றிக்கே கந்தமே கமழ. (துயிலணைமேல்) க்ருஷ்ண விரஹத்தையும் மாற்றவற்றான படுக்கையிலே. க்ருஷ்ணன் வரிலும் இடம் போரும்படியான படுக்கை. * 3648 மென் மலர்ப் பள்ளிவெம் பள்ளியிறே இவர்களது. இருவர்க்குப் படுத்த படுக்கையிலே ஒருவர்க்குக் கண்ணுறங்குமோ? ப்ரஹ்மசாரி படுக்கையில் உறங்க மாட்டார்களே. (கண் வளரும்) இளைய பெருமாளைப் போலே உறங்காமைக்கு நாங்களுண்டு. உறங்குகைக்கு நீயுமாயிற்றென்கிறார்கள். ஆர் தொடைகுத்த உறங்குகிறது. அங்குத்தைக்குத் தாங்கள் ஒலியல் கொண்டு பரிசர்யை பண்ண ஆசைப்படுகிறார்கள். (கண் வளரும்) இங்ஙனேயாகாதே வைஷ்ணவர்கள் சொல்லுவது. * 9. படுத்தபைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்கு* என்று தமப்பனார் அவ்விஷயத்தில் சொல்லுமதெல்லாம் இவளுக்குத்ததீய விஷயத்திலேயிறே. ‘தொண்டனூர் நம்பி திருவடிச்சார்ந்தார்’ என்று பட்டருக்கு விண்ணப்பம் செய்ய, “ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவரடிமை செய்து போந்தபடியாலே ‘திருநாட்டுக்கு நடந்தார்’ என்னுங்கோள்” என்றாப்போலே, நஞ்சீயர், பிள்ளையேறு திருவுடையார்தாஸரையுமப்படியே யருளிச்செய்தருளினார்.

(மாமான் மகளே) ஸ்வாமினியாயும் தோழியாயும் அநுபவித்ததொழிய இட்டீடு கொள்ளுகைக்கு விடவொண்ணாத உறவு ஸம்பாதிக்கிறார்கள். பெரியாழ்வார் பெண்பிள்ளை திருவாய்ப் பாடியில் தனக்கு உஜ்ஜீவநமாக ஒரு ப்ராக்ருத ஸம்பந்தமும் உண்டாக்கிக் கொள்ளுகிறாள். (மாமான்) வைஷ்ணவர்களோடு எல்லா வுறவும் ச்லாக்யமாயிருக்கிறபடி. * 538. மாடமாளிகை சூழ்மதுரைப் பதிநாடி நம் தெருவின் நடுவே வந்திட்டு * என்று ஸ்ரீமதுரையிலேயும் ஒருறவும் ஒரு மாளிகையும் ஸம்பாதித்தாளிறே. அங்குத்தைக்கு உறவு ஸ்ரீமாலாகாரர். தானுமொரு மாலாகாரர்



மகளிறே. * க்ருஷ்ணராமௌ முதா யுக்தௌ மாலாகாரக்ருஹம் கதௌ வி.பு. 5-19-17. * (மாமான் மகளே) தங்கள் ஸம்பந்தம் சொல்லாதே தங்கள் ப்ராதாந்யத்தைச் சொல்லி இவளை ஸேவிக்கிறார்கள். * ஹேக்ருஷ்ண ஹேயாதவ ஹேஸகேதி கீதா 11-41. * என்னுமாப் போலே. அர்ஜுனனுக்கு க்ருஷ்ணனோட்டை மைத்துனமை போலே இவர்களுக்கு மைத்துனமை யகப்படச் சொன்னவாறே ‘உணர்ந்து நீங்களே திறந்து புகுருங்கோள்’ என்ன, ‘அது மாணிக்கக்கதவு காண், அப்யாஸமில்லாதார்க்குத் தெரியாது காண், என்று இவர்கள் சொல்ல, (மணிக்கதவம் தாள் திறவாய்) ‘துர்யோதனன் நீருக்கும் பளிங்கு மண்டபத்துக்கும் வாசியறியாதே அகப்பட்டாப் போலே அகப்பட வொண்ணாது, எங்களைச் சிரிக்கவோ பார்க்கிறது; எங்களுக்குக் கதவும் சுவரும் தெரிகிறதில்லை. நீ திறவாய்’ என்கிறார்கள். தேசிகர்க்கல்லது தாள் திறக்கத் தெரியாதென்கை.

இப்படி சொல்லவும் இவள் பேசாதே கிடந்தவாறே, இவள் திருத்தாயார் ‘இக்காலத்திலே வந்த பெண்பிள்ளைகளுக்கு இவள் வாய் திறவாதே கிடப்பதே’ என்று நொந்தமைதோற்ற, அவளுணர்ந்தமையை யறிந்த பெண்பிள்ளைகள் (மாமீரவளை யெழுப்பீரோ) என்கிறார்கள். * 2972. அடியாரடியார் என்றும், * 3545. தொண்டர் தொண்டர் * என்றும் ஆழ்வாருடைய பாகவத சேஷத்துவம் போலே, ‘ஒரு மாதுலனும் ஒரு மாமியாருமே’ என்று இவள் ஸம்பந்த ஸம்பந்தம் சொல்லுகிறார்கள். அவள் தம்படி * 1214. அன்னையு மத்தனுமென்றடியோமுக்கிரங் கிற்றிலள் * என்று பொகட்டுப் போவள். “தாய்” என்று பழியிட்டுப் போகவேணுமோ; அடியேனா யிருக்கிற என்னை” என்னும் திருமங்கை யாழ்வாரை ‘வெட்டிமையர்’ என்றும் எம்பெருமானாரை ‘கோயிலண்ணன்’ என்றும் ஆண்டாளருளிச் செய்யும். அத்தை எம்பெருமானார் கேட்டருளி, ‘நானடியேனல்லேனோ? என்னை இப்படி அருளிச் செய்வதே’ என்றாப் போலே இத்திருவாய்ப் பாடியும்.

(அவளை எழுப்பீரோ) இவர்கள் தன் வாசலிலே நின்று அழைத்து நோவுபட இவள் பேசாதே கிடப்பதே என்று இவள் நெஞ்சில் கிடக்கிறது முகத்திலே தோற்றினபடியைக் கண்டு நீராகிலும் அவளை எழுப்பீரோ என்கிறார்கள். அவளை இவர்களுக்குத் தோற்றுமோ வென்னில், மாளிகையில் தெளிவாலே தோற்றும். தாயார்தான் எழுப்பினாலோ வென்னில், பாவஜ்ஞையாகையாலே எழுப்பாள். இவர்களாற்றாமைக்கு உணராத இவள் இவளுடைய

ஆந்ருசம்ஸ்யத்துக்குணருமோ! ‘ஆர்த்தத்வநி கேளாதவள்
மத்யஸ்தர் வார்த்தையோ கேழ்க்கப் புகுகிறாள், என்னவு
மாம்.

பின்னையும் உணரக்காணாமையாலே சிவட்கென்று
(உன்மகள் தானூமையோ) என்கிறார்கள். வ்யவஹார
யோக்யையன்றோ என்றபடி. (அன்றிச் செவிடோ) நாங்
கள் சொன்ன வார்த்தை கேளாதபடி அந்யபரதையோ
வென்கை (அநந்தலோ) இராவெல்லாம் க்ருஷ்ணனுக்கு
ஆடல் கொடுத்து இப்போதோ உறங்குவது. (ஏமப்
பெருந்துயில் மந்திரப்பட்டாளோ) ஆர்த்த நாதம் கேளாத
படி காவலிட்டுக்கொண்டு உணராதே உறங்குகைக்கு ஆரே
னும் சவித்தாருண்டோ? மந்திரம் இவளுக்கு ப்ரஸித்தம்.
*517 உன்முகம் மாயமந்திரந்தான் கொலோ* என்று
அம்மான்பொடி தூவினாருண்டோ வென்கை.

திருத்தாயார், ‘நீங்கள் இவளை எழுப்பும்படி அறிந்
திலிகோள்; திருநாமத்தைச் சொல்லுங்கோள் உணரும்
படி’ என்ன, நாங்கள் சொல்லாத ஸ்ரீஸஹஸ்ரநாம
முண்டோ வென்கிறார்கள். (மாமாயன்) பெண்களுக்குக்
காணச்சிறையாய்க் கிடக்குமவன். (மாதவன்) அதுக்கு
குருகுலவாஸம்பண்ணின விடம். லக்ஷ்மீபதி꞉. (வைகுந்தன்)
பெண்களோடொக்க ஆண்களை அடிமை கொள்ளுமவன்.
அப்பெரிய மேன்மையுடையவனாய் ச்ரிய꞉ பதியாயிருக்கு
மவன் கிடீர் பெண்களுக்கு எளியனாயிருக்கிறான்.

(என்றென்று நாமம் பலவும் நவின்று) மேன்மைக்கு
ஏகாந்தமான திருநாமங்களையும் நீர்மைக்கு ஏகாந்தமான
திருநாமங்களையும் ச்ரிய꞉ பதித்வத்துக்கு ஏகாந்தமான திரு
நாமங்களையும் சொன்னோம். எழுந்திராதாரை எங்களால்
செய்யலாவதுண்டோ வென்கிறார்கள், ‘உணராதாரை
நீரைச் சொரிந்து உணர்த்துங்கோள்’ என்னுமாபோலே.
[நாமம் பலவும் நவின்று மாமீரவளை எழுப்பீரோ] என்று
க்ரியையாகவுமாம். 9

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றஅம்மனாய் !
மாற்றமும்தாராரோ வாசல்திறவாதார்
நாற்றத்துழாய்முடி நாராயணன், நம்மால்
போற்றப்பறைதரும்புண்ணியனால், பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும்
தோற்றுமுனக்கே பெருந்துயில்தான் தந்தானோ
ஆற்றஅனந்தலுடையாய் ! அருங்கலமே !
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய். 10



பத்தாம் பாட்டு. (நோற்று) க்ருஷ்ணன் அசலகமாய்
இடைச்சுவர் தள்ளிப்பொகட்டு ஒரு போகியாக அநுபவ
விக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

(நோற்று) நோற்கக்கடவ நோன்பும் இவ்விரவிலே
நோற்று, நோன்பின் பலமான க்ருஷ்ணனாகிற ஸ்வர்க்கம்
உன் கை புகுந்ததாகாதே செல்லுகிறது. *க்ருஷ்ணம் தர்மம்
ஸநாதனம் ம. ஆ. 86-26* என்னுமாபோலே. ஆயாஸதர்
மங்கள் இவளுக்கு அஞ்சி கைவிட்டதித்தனையிறே. இவ
ளுக்கு ஸாதனமான தர்மம் எம்பெருமானேயிறே. ஸாத
நாநுஷ்டாநம் பண்ணாதே இவனே உபாயமென்று அறுதி
யிட்டால் பலத்தில் அந்வயிக்கு மத்தனையிறே. அவனுடைய
ஸ்வரூபத்தை உணர்ந்தார்க்கு யத்நம் பண்ண ப்ராப்தி
யில்லை. தன்ஸ்வரூபமுணர்ந்தார்க்கு யத்நம் பண்ணப்
ராப்தியில்லை. விரோதியினுடைய ப்ராபல்யத்தை உணர்ந்
தார்க்கும் யத்நம்பண்ண ஸித்தியில்லை. ப்ராப்யத்தி
னுடைய சீர்மையை யுணர்ந்தார்க்கும் யத்நம்பண்ண ப்ராப்
தியில்லை. இதரோபாயங்களுக்கும் அவனே வேண்டுகை
யாலே யத்நம்பண்ண ப்ராப்தியில்லை என்றிருந்தாள்.* விது :
க்ருஷ்ணம் ப்ராஹ்மணஸ் தத்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ்
ஸமாப்தா:* செய்தவேள்வியர்* யேச வேதவிதோ விப்ரா꞉* (ஸஸர்வ
வித்பஜதிமாம் ஸர்வபாவேந பாரத கீதா. 15-19 *க்ருதக்ருத்யா:
ப்ரதீக்ஷந்தே* இ. ஸ 6-40 ரக்ஷ்யரக்ஷகபாவம் வ்யவஸிதமா
னால் ஜ்ஞானமேயிறே வேண்டுவது. *நாராயணனே நமக்கே
பறைதருவான்* என்கிறபடியே அவன்தலைக்கே பரம்
பொகட்டோமாகில் நமக்கு நீரிலேபுக்கு முழுக வேணுமோ
என்றிருக்கிறாளிவள். இவர்களுக்கு உபாயமென்கிற சப்
தத்தைக் கொண்டு உஜ்ஜீவிக்கலாமோ? உபேயத்துக்
கன்றோ உபாயம், ஸித்தோபாய நிஷ்டருக்கு விலம்பஹேது
இல்லாமை யால் ப்ராப்யத்திலே த்வரையில்லாதார் சேத
நரன்றென்று இருக்கிறார்களிவர்கள். ஸித்தோபாய நிஷ்
டர்க்குக் கர்மம் கைங்கர்யத்திலே புக்குப்போம். ஜ்ஞானம்
ஸ்வரூபத்திலே புக்குப்போம். பக்தி ப்ராப்யருசியிலே
புக்குப் போம். பேசாதேயிருக்க உபாயமுண்டோ?
சிலர் முழுகி நோற்கவும் சிலர் பலம் அனுபவிப்பதாயோ
யிருப்பது. அழகிதாயிருந்தது உன்படி யென்கிறார்கள்.
அவர்கள் க்ருஷ்ணனோடே பலம் புக்கிருக்கிலும், இக்கோஷ்
டியிலுள்ளார்க்குத்தனியே அநுபவிக்கை கைவல்யத்தோ
பாதி குடிப்படி. (அம்மனாய்) ரக்ஷ்ய ரக்ஷகபாவம் மாறி
நிற்கவோ பார்க்கிறது. அழகிதாக நிர்வாஹகையானாய்.
(சுவர்க்கம் புகுகின்ற) ஸுகமநுபவிக்கை. *யஸ்த்வயா ஸஹ

ஸஸ்வர்க்க: ஸ்ரீ.அ 30-18.* நிர்வாஹகையாயிருப்பார்க்குக்
கண்ணுறங்க விரகுண்டோ. அநுபவிப்பாரநுபவிப்பது
இடையும் முலையுமொழியவோ. இவர்கள் பேச்சு கேட்டிடு
பட்டுப்பேசாதே கிடந்தாள். *ஸம்ச்ரவே மதுரம் வாக்யம் ஸ்ரீ.
ஸு. 31-1.* பழியிடுவதே என்று பேசாதேயிருக்கிறாளா
கவுமாம்.

இவர்கள் பாடாற்றமாட்டாமை (மாற்றமும் தாராரோ
வாசல் திறவாதார்) என்கிறார்கள். ஏதேனுமொருபடியான
பேச்சேயாகிலு மமையுமிவர்களுக்கு; படுகுலையடித்தால்
நாக்கு நினைக்கத்துளிதண்ணீரிடவுமாகாதோ? வாசலைச்
செம்மினால் வாயையும் செம்மவேணுமோ? *துளம்படுமுறு
வல் இவர்கள் ஜீவநம். *ஆசயா யதிவா ராம: புநச்சப்தாபயே
திதி ஸ்ரீ அ. 59-3.* இவர்களுக்குப்புகுருங்கோளென்னவு
மாம். போங்கோளென்னவுமாம். தர்மபுத்திரன் 'எம்
பெருமானுக்கும் அர்ஜுநனுக்கும் என்புகுகிறதோ'
என்று அஞ்சுகிற யுத்த மத்யத்திலே, ஸ்ரீபாஞ்சசன்யத்வநி
கேட்டு தரித்தாப்போலே இவர்களுக்கு மிவள்பேச்சு.
உடம்பை கிருஷ்ணனுக்குக் கொடுத்தால் எங்களுக்குப்
பேச்சாகிலும் தரலாகாதோ! *மதுரா மதுராலாபா கிமாஹ மம
பாமிநீ ஸ்ரீ. ஸு. 66-14 யிறே இங்கு செல்லுகிறது. நீயும
வனும் வாழ்ந்து எங்களுக்குப் பரியட்டம் தருகிறபடியோ
இது. நாங்கள் செய்தபடி செய்ய உன் ப்ரீதிக்குப் போக்கு
விட்டு தரிக்க வேண்டாவோ? * ஸுகமாஸ்ஸ்வ * ரமஸ்வச*
கண்ணின் பட்டினி தீராதாகில் செவியின் பட்டினி தீர்த்
தாலாகாதோ?

நீங்கள் பழியிடுகிறதென், இங்கு அவனுண்டோ
வென்ன; (நாற்றத்துழாய்முடி) உன்னைப்போலே புறப்
படாத தத்வமோ அவன்சூடின தத்வம்.* 3728 விரைகுழுவு
நறுந்துளபம். மாளிகைச்சாந்து உன்னாலே ஒளிக்கப்
போமோ என்ன; அந்தியம் போதே வாசலைக் கைக்
கொண்டிகோள், அவனுக்குப் புகுரவழியுண்டோ வென்ன,
(நாராயணன்) அவனுக்கு எங்களைப்போலே கதவு திறக்கப்
பார்த்திருக்கவேணுமோ; புகுகிறவழி தேடவேணுமோ,
புறப்படுகைக்கு வழிதேடுமத்தனையன்றே? விடாதார்க்குப்
பேரன்றேவிது. உகவாதாரையும் விடாதவன், உகந்த
உன்னை விடுமோ? நீ விலக்கிடாய். *பதிம் விச்வஸ்ய* என்று
அவன் அழகிதாகப்பொதுவாயிருந்தான். நாராயணதத்வத்
துக்கு இன்று தொடங்கி நமஸ்காரம். *கௌஸல்யா லோகபர்த்
தாரம் ஸ்ரீ. ஸு. 38-56. * நாராயணனே நமக்கே பறைதரு



வான்* என்று துணிந்தார்க்கு இப்படியோ? ரக்ஷகனை
வேண்டாவோ? 'பறைதரும்' என்று க்ஷேபம்.

(நம்மால்) வெறுமையே பச்சையாகவுடைய நம்மாலே
(போற்ற) குடிப்பிறப்பாலே வந்தது. உபாயமல்ல. (பறை
தரும்) இப்படி பெரியவன் பறைதருமோவென்னில்; நாரா
யணனன்றே? போற்றுதார் பாடும் புக்கிருக்கிறவனன்
றே? தருமென்னவுமாம். (புண்ணியன்) *க்ருஷ்ணம் தர்மம்
ஸநாதநம் ம.ஆ. 88-26. *புண்ணியனாகையாவது, ஸர்வ விஷ
யத்திலும் தண்ணீர்போலே பொதுவாயிருக்கையாய்த்து.
உன்படிகளழகிதாயிருந்ததென்ன; பின்னையுமவன் பாசு
ரமாக ஒன்று பிறக்கக்காணாமையாலே அவனைவிட்டு, இவள்
நம்மிலே ஒருத்தியாய் ஒக்க நோன்பு நோற்று ஒக்க அநுப
விக்கவிருந்து, நம் திறத்தில் செய்தபடி சொல்லாதே. மாற்
றாராய்ச் செல்லுவதே? என்று அவளைத்திரியவெழுப்ப;
திரியவும் நம்மைப் பிரித்தார்களாகில், நாம் பேசாதே கிடப்
போமென்று அவள் வாய்திறவாதே கிடக்க, உறக்கத்
துக்கு கும்பகர்ணனையும் ஜயித்தாயாயிருந்ததீ என்கிறார்
கள். (நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியன்) இடைப்
பெண்களுக்கும் சென்று ஆச்ரயிக்கலாம்படியான தார்
மிகன். இவர்கள் அர்த்திகளாகையாவது - போற்றுகை
போலே. (புண்ணியனால் பண்டொரு நாள் கூற்றத்தின்
வாய்வீழ்ந்த) எல்லாரும் தண்ணீர் குடித்து உஜ்ஜீவிக்கிற
ஏரியிலே கல்லைகட்டிக்கொண்டு விழுந்து சாவாரைப்போ
லேயும், விளக்கு விட்டில் போலேயும் சாவுகை. (பண்
டொருநாள்) முன்பு உன்னைப்போலே ஒருத்தனுண்டு காண்
உணராதேபடுத்தினானென்கை. (புண்ணியனால் கூற்றத்தின
வாய்வீழ்ந்த. * 3577 கொடுவினைப்படைகள்வல்லையாய் *
ததோ ராமோ மஹாதேஜா:* என்று நீரிலே நெருப்பு எழுந்தாப்
போலே சீறுகைக்குள்ள வருமை. (கும்பகரணனும்) பிராட்
டியைப் பிரித்த ராஜத்ரோஹியோடு கூட்டுகிறார்கள்.
அவனொருத்தியைப் பிரித்து உறங்கினான். நீ ஊராரைப்
பிரித்தன்றே உறங்குகிறாய். (தோற்று முனக்கே பெருந்
துயில்தான் தந்தானோ) ஸ்ரீபரசுராமாழ்வான் கையில்
வில்லை சக்ரவர்த்தி திருமகன் வென்று வாங்கினாப் போலே,
அவன் நித்ரையையும் வென்றுவாங்கிக் கொண்டாயோ?

(ஆற்றவநந்தலுடையாய்) 'இனி கிடக்கில் த்ரோஹிக
ளாவுதோம்' என்றஞ்சிப் புறப்பட்டு, 'முகம் காட்டுவோம்'
என்று தான் உணர்ந்தபடி தெரிய, 'க்ருஷ்ண க்ருஷ்ண'
என்றாள். எங்களுக்கு அங்கேபோய் துயிலிடைபாடவே
ணுமோ? நீ உணரும்படி கண்டுவாழ அமையாதோ? (அருங்

கலமே) இனிதெளிவு கண்டநுபவிக்கவேணும். 'ஹாரத்தைப் பண்ணினுல் அதுக்குக கல்லழுத்தவேண்டாவோ? இக்கோஷ்ட்டியை ஸநாதமாக்காய்' என்றவாறே, பதறிப்புறப்படப்புக (தேற்றமாய் வந்துதிற) மேலில் நிலங்களிலே நின்றும் தள்ளம் பாறிவிழாதே தெளிந்துவந்து திற. ஊராகத்திரண்டுவந்துகிடக்கிறது. படுக்கையிலே கிடந்தபடியே வாராதே, ஸதஸ்யையாய்த் திறவென்றுமாம். (அருங்கலமே) எம்பெருமானைப்போலே. * மஹதா தபஸா பெறலாமவளல்லள். தானே தன்னைப்பெறுமத்தனை, ஸ்ரீஜநகராஜன் திருமகளைப்போலே. (தேற்றம்) * ஸாப்ரஸ்க்கலந்தீ * ஸ்ரீ.கி. 33-37. இத்யாதி. 10

கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும்
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே!
புற்றரவல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து, நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி!, நீ
எற்றுக்குறங்கும் பொருளேலோரெம்பாவாய். 11

பதினோராம் பாட்டு—க்ருஷ்ணன் ஊருக்கு ஒரு பிள்ளையானுப்போலே ஆபிஜாத்யமுடையாளாய் ஊருக்கொரு பெண்பிள்ளையாயிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள். (அரியதைச் செய்யவல்ல குடியிலே பிறந்துவைத்து அரியதைச் செய்யாதேகொள், என்கிறார்கள்; எளியராக வேண்டுமிடத்திலே அரியராக வொண்ணாதே?

(கற்றுக் கறவை) கன்றுநாகுகள். நித்யஸூரிகள். பஞ்சவிம்சதிவார்ஷிகராயிருக்குமாபோலே. அவர்கள் இப்படியிருக்கிறது எம்பெருமானை அநுஸந்தித்தன்றோ? க்ருஷ்ணஸ்பர்சத்தால் வந்த தன்னேற்றம் பார்த்துக்கொள்ளுவது. கீழ்நோக்கி வயஸ்ஸூப்புகுமத்தனை. திருவாய்ப்பாடியில் கன்றுகளுக்கும் வாசி தெரியாது, பசுக்களுக்கும் வாசி தெரியாது. (கற்றுக்கறவை) *பவாமி த்ருஷ்ட்வாச புநர்யுவேவ ஸ்ரீ.அ. 12-105. *ப்ரணயித்வத்துக்கு மூலைபட்டாராகாதாப்போலே. கன்றுகளையே ரக்ஷிக்கவேணுமென்றொரு வ்யவஸ்தையுண்டோவென்னில், * கன்று மேய்த்தினிதுகந்த காளா *என்னுமாபோலே. * திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி* நித்யஸூரிகளிலும் பசு மேய்க்க உகக்கும்; கன்றுமேய்க்கப்போனல் பசுக்களும் நித்யஸூரிகளோ டொக்கத்தள்ளுண்ணு மத்தனை. பசுமேய்க்க உகக்கும்; கன்றுமேய்க்க இனிதுகக்கும். அதாவது ஸ்வ ரக்ஷணத்தில் அந்வயமில்லாதாரை உகக்குமென்றபடி. [காளா] அவை இளகிப் பதிக்கத்தானுமிளகிப்பதிக்கும். *யஃ பூர்வ்யாய வேதஸே நவீயஸே ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே ததாசதி யோஜாதமஸ்ய மஹதோ மஹிப்ரவாத் ஸேதுச்ரவோபியுஜ்யம் சிதப்யஸத் * * மைந்தனை மலராள் மணவாளனை." அவன் சரணகதவத்ஸலனுல் சரணுகதவத்ஸல மாமித்தனையிறே. *யதா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம்* *சாயாவாஸத்வ மநுகச்சேத் * 1548 கறவாமடநாகு தன் கன்றுள்ளினப்போல் மறவாதடியேனுன்னையேயழைக்கின்றேன் * அபித்வா சூரநோநுமே துக்தா இவ தேநவ: *சரணுகதவத்ஸல: ஸ்ரீ.ஸு. 21-20. *கன்றிடுகிற முன்னுள் கோமூத்ரமாதல் சாணமாதல் புல்விலேபடில் மோந்துபார்த்துக் காற்கடைகொள்ளும், பிற்றைநாள் கன்றிடில் அக்கன்று சாணத்திலும் கோமூத்ரத்திலும் புரண்டாலும் அதுதன்னையே போக்யமாகக் கொண்டு நக்காநிற்கும். முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலே சூடும். *த்வயி. கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம ஸ்ரீ.யு. 41-4. *அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி ஸ்ரீ.யு. 18-33.

(கணங்கள்பல) (நாரா:) என்னுமாபோலே ஸமூஹங்கள் பல வென்னுமத்தனை. (பல)நாரசப்தத்தில் நாரங்களினுடைய ஸமூஹங்களையும் அஸங்க்யாதமான பகவத்குணங்களையும் அவற்றையுங்கூட வெல்லும்படி மலிவான நம்முடைய அநாத்மகுணங்களையும் எண்ணிலும் எண்ணப்போகாது; சொல்லும்போது,* ரதகுஞ்ஜரவாஜிமான் ஸ்ரீ.ஸு. 31-2. என்றாப்போலே பலவென்னுமத்தனை. * கழியாரும் கனசங்கமித்யாதி." (பல கறந்து) ஈச்வரன் ஒருவனே ஸர்வாத்மாக்களுக்கும் நியமநாதிகளைப் பண்ணுமாபோலே ஜாதியினுடைய மெய்ப்பாட்டாலே செய்யவல்ல ஸாமர்த்த்யம்.

(செற்றார்) * சத்ரோஸ் ஸகாசாத் ஸம்ப்ராப்த: ஸ்ரீ.யு. 17-39.* என்ற அங்கதப்பெருமாள்போலே இவ்வைச்வர்யம் காணவேண்டாதார் தனக்கு சத்ருக்களாயிருக்கிறபடி. (திறலழிய) 'சுடுகாட்டுச் சாம்பலைப்பூசி எலும்பைப்பூண்டு திரியும் ருத்ரனும் ஒத்துப்போம் ப்ரஹ்மாவும் அந்யபரனுயிருக்கிற எம்பெருமானும் ஸாது இந்த்ரனும் எனக்கு எதிரோ' என்றிருக்கும் கம்ஸாதிகள் மறுமுட்டுப் பெறுதபடி கிழங்கெடுக்கைக்கு மிடுக்குடையார் இவ்வூராரென்கை. (சென்று செறுச்செய்யும்) எதிரிகள்வந்தால் பொருகையன்றிக்கே இருந்தவிடங்களிலே சென்று பொருகை. *அபியாதா ப்ரஹர்தாச. ஸ்ரீ. அ. 1-29. *(சென்று) சக்ரவர்த்தித் திருமகனைப்போலே. ஊராக சக்ரவர்த்தித் திருமகனே டொப்பர்கள்

வீரத்துக்கு. சென்று செறுச்செய்கை எங்கே கண்டோ மென்னில், 'பசுமேய்க்கிறார் இரண்டிடையர் குவலயாபீடத்தின் கொம்பைப் பிடுங்கி விளையாடா நின்றார்கள்' என்று கண்டோமிறே.

(குற்றமொன்றில்லாத) எடுத்து வரப்பார்த்திருக்கும் குற்றமில்லை. எதிரிகையில் ஆயுதம் பொகட்டால் எதிரியையும் ரக்ஷியாத குற்றமில்லை என்னவுமாம். 'இப்படி அழியச் செய்தார்கள்' என்று எம்பெருமானுக்கு முறைப்பட்டால் *செய்தாரேல் நன்று செய்தார் *என்னும்படி பிறந்தவர்களென்னவுமாம். *ஸாதுரேவ ஸ மந்தவ்ய: *கீதா. 9-30. *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸ்ரீ.யு. 18-3* *குன்றனைய குற்றம் செய்யினும் குணங்கொள்ளும்* பகவதநுபவமே தேஹயாத்ரையாயிருப்பார்க்கு அநீதிக்குப் பெரு நிலை நிற்கும்; வஸ்த்ராந்நபாநாதிகளோடொக்க பகவத்குணங்களும் கலசி தாரகமாயிருப்பார்க்கு அநீதி பொறுக்கும்; அல்லாதார் அநீதி எம்பெருமானுக்கு அஸஹ்யமாயிருக்கும்; * நிர்தோஷம் வித்தி தம் ஜந்தும் ப்ரபாவாத் பரமாத்மந: ஸா. ஸம். 16-24* பகவத்விஷயத்தில் ஓரடி புகுர நிற்கையிறே ஒருவனுக்கு சுத்தியாவதென்கை. ஆச்ரிதருடைய தோஷத்தை, கடலுக்குத்தொடுத்தவம்பை மருகாந்தாரத்திலே விட்டாப்போலே அசல் பிளந்தேற்றல். பகதத்தனுடைய அம்பை மார்விலே ஏற்றாப்போலே தானநுபவித்தல் அதுதன்னையே புண்ணியமாகக் கொள்ளுதல் செய்யுமவன். (குற்றமொன்றில்லாத) * அத்யைவ த்வாம் ஹநிஷ்யாமி* ஹந்யா மஹமிமாம் பாபாம் ஸ்ரீ. அ. 78-22* என்று சொல்லுகிறபடியே பகவத்பாகவத விஷயங்களில் குற்றம் செய்தாரை அக்நீஷோமீய ஹிம்ஸைபோலே கண்பாராதே கொல்லவல்லவர் காணென்னுமாம். (கோவலர் தம் பொற்கொடியே) *ஜநநாநாம் குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா ஸ்ரீ. பா. 67-21* என்னுமாபோலே ஊருக்கொரு பெண்பிள்ளை. (பொற்கொடியே) தர்சநீயமாயிருக்கையும் கொள்கொம்பையொழிய ஜீவியாமையும். கொடி தரையிலே கிடக்கலாமோ? ஒருதாரகம் வேண்டாவோ? பெண்களோடு கூடிக்கொண்டு நில்லாயென்கை. * 3768. ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்யான்*.

(புற்றரவல்குல்) பிடியுண்டு புழுதிபடைத்த அரவுபோலன்றியே தன்னிலத்திலே வாழும் பாம்பின் படமும் கழுத்தும் போலேயிருக்கை. இவர்கள் இத்தனை சொல்லலாமோவென்னில்? பெண்களைப் பெண்கள் சொல்லுகிறதன்றோ? *யாஸ்ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸா யயு:*



அவன், *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் ஸ்ரீ. அ. 3-29* என்கிறபடியே ஆண்களைப் பெண்களாக்கும், இவள் பெண்களை ஆண்களாக்கும். (புனமயில்) தன்னிலத்தில் மயில். கண்ணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளகபாரத்தையுடையளாயிருக்கை. (போதராய்) *சோபயந் தண்டகாரண்யம் ஸ்ரீ. ஆ. 38-15 *என்கிறபடியே எங்களைவந்து உள்தளிர்க்கப் பண்ணுயென்கை. (போதராய்) உன்னுடைய அழகைக்கண்டு எங்களை உண்டாக்காய். இத்தால் சொல்லிற்றாய்த்து-பகவத்ஸ்பர்ச முடையாருடைய தேஹகுணத்தோடு ஆத்ம குணத்தோடு வாசியற எல்லாம் ஆகர்ஷகமாயிருக்கிறதென்கிறது.

நான் புறப்படுகைக்கு நீங்கள் எல்லாரும் வந்திகோளோவென்ன (சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து நின் முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட) *உத்தரம் தீரமாஸாத்ய* என்னும்படி எல்லாருமே ப்ராப்யதேசமான உன்முற்றத்திலேபுகுந்தது. *1926 முற்றம்புகுந்து முறுவல் செய்து நின்றீர்* என்றும், *முற்றத்தூடுபுகுந்து நின் முகங்காட்டிப்பொன்முறுவல்செய்து 522* என்றும் சேஷியானவனுக்கு ப்ராப்யமான முற்றம் சேஷபூதைகளான எங்களுக்குப்ராப்யமென்று சொல்ல வேணுமோ? புகுந்து கொள்ளப்புகுகிறகார்யமென்னென்ன; (முகில் வண்ணன் பேர்பாட) நீ உகக்கும் திருநாமங்களைப்பாட, நாங்கள் உன் பக்ஷத்திலே நின்று கூட ஏற்ற, நீ அவனழகிலே ஈடுபட்டுப் பாடவும் நீ பாடும் பாட்டுகண்டு நாங்கள் ஈடுபட்டுப்பாட.

(சிற்றாதே) முகில்வண்ணன், என்றவாறே வடிவை நினைத்து விடாய் கெடப்பேசாதே கிடந்தாள். (சிற்றாதே) சேஷ்டியாதே. அவர்கள் ஜீவனம். எங்கள் கண்ணையும் செவியையும் பட்டினிவிடுவியா நின்றாய். (செல்வப்பெண்டாட்டி நீ) உன்னை நீ பிரிந்தறியாயே? உன் கைங்கர்யம் கூடு பூரித்ததென்னவுமாம் (எற்றுக்குறங்கும் பொருள்) *அடியார் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ* என்றிருப்பார் செய்வதோ இது? இவ்வளவும் வந்தார்க்குத் தனித்து பகவதநுபவம் பண்ணுவது குடிப்பழி. எனக்கு இங்கே கூடு பூரித்திருந்ததோ என்ன, இல்லையாகில் எங்கள் பாடு புறப்படாதே கைவல்யமோக்ஷம்போலே தனிக்கிடக்கிற கார்யமென்னென்கிறார்களென்னுமாம். 11

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிறங்கி
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன் தங்காய் !
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி

சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய்
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம்
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோரேம்பாவாய். 12

பன்னிரண்டாம் பாட்டு. க்ருஷ்ணன் வளரவளரத் தீம்பிலே கைவளரப் புக்கவாறே ஸ்ரீ நந்தகோபர் வ்ருத்தராகையாலும் நம்பிமூத்தபிரான் விலக்கமாட்டாதே அவன் வழியே போகையாலும் இவனைக்காக்க இளையபெருமாளைப் போலே அவனைப்பிரியாதே போகிறான் ஒருத்தன் தங்கையை எழுப்புகிறார்கள்.

(கனைத்து) இளையபெருமாள் அக்நிகார்யத்துக்கு உறுப்பாமன்றிறே இவன் எருமைகளை விட்டுக்கறப்பது. தவிர்ந்தவனோடு செய்கிறவனோடு வாசியில்லை. இரண்டும் உபாயமன்று. யாதொன்று பேற்றை ஸாதித்துத்தருவது, அதுவே உபாயம். அபிசாரத்தைப்பற்ற காம்யகர்மம் புண்யம்; ஜ்யோதிஷ்டோமாதிக்கு பக்தி தன்னேற்றம். 'எல்லாத்தையும் விட்டு என்னைப்பற்று' என்றவனுடைய த்யாஜ்யமாம். ஜீயர் பிள்ளைதிருநறையூரரையர்க்கு அருளிச்செய்த வார்த்தை: 'விடுகையும் உபாயமல்ல பற்றுகையும் உபாயமல்ல; விடுவித்துப் பற்றுவிக்குமவனே உபாயம்' என்று. *நதேவலோகாக்ரமணம் ஸ்ரீ.அ. 31-5. *பரித்யக்தா ஸ்ரீ.யு. 19-5. *இத்யாதியிற்படியே ப்ராப்யவிரோதிகளில் நசையற்றபடியாகவுமாம். (கனைத்து) கறப்பாரில்லாமையாலே இவ்வகத்து 'நாம்கன்று காலியாய்ப்பட்டதோ' என்று கூப்பிடா நிற்கும். (இளங்கற்றெருமை) இளங்கன்றாகையால் பாடு ஆற்றமாட்டாமை. (கன்றுக்கிரங்கி) எம்பெருமான் ஆச்ரிதவிஷயத்தில் இருக்குமாபோலே காணும் அவன் எருமை கறவாவிட்டால் அவைபடும் பாட்டை நாங்கள் உன்னாலே படாநின்றோம்.

(நினைத்து) கன்றை நினைத்து பாவநாப்ரகர்ஷத்தாலே முலையிலே வாய் வைத்ததாய்க் கொண்டு பால் சொரியாநிற்கும். நினைவு மாறிலிறே பால் மாறுவது. (முலைவழியே) கன்றின் வாய் வழியாதல் கறக்கிறார் கைவழி யாதலன்றிக்கே முலைவழியே. (நின்று பால்சோர) கேட்பாரின்றிக்கே யிருக்குமிவ் விம்மலாலே பகவத் குணங்களைச் சொல்லுவாரைப் போலே. மேகத்துக்குக் கடலிலே முகந்து கொண்டு வரவேணும். இவற்றுக்கு அது வேண்டா. (நனைத்தில்லம் சேறாக்கும்) பாலின் மிகுதியாலே அகமெல்லாம் வெள்ளமிடும்; அவற்றின் காலாலே பின்னைத்துகை யுண்டு சேறாம். சேறால் புகுர வொண்கிற



தில்லை என்ன, அளற்றுப் பொடியிட்டுப் புகுருங்கோள் அவ்வளவின்றிக்கே மேலே மேலே வெள்ளமிட்டதாகில் ஓட மேறிப்புகுருங்கோள்.

(நற்செல்வன்) *லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந: * தோற்றி மறையும் நற்செல்வமல்ல, நிலைநின்ற ஸம்பத்து. [ஸம்பந்ந:] *3294 ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல் * 2929 வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழ * என்னும்படியே அவனுடைய வைஷ்ணவ ஸ்ரீயாலே ஜகத்துக்களடைய வைஷ்ணவத்வமுண்டாம்படியிருக்கை. * ஸௌமித்ரே புங்க்ஷ்வ போகாம் ஸ்த்வம் ஸ்ரீ.அ. 4-43 *யத் விநா பரதம் த்வாஞ்ச சத்ருக்நம் சாபி மாநத ஸ்ரீ.அ. 97-8. *(தங்காய்) குணஹாநிக்கு. *ராவணஸ்யாநுஜோ ப்ராதா ஸ்ரீ.யு. 17-19. *என்னுமாபோலே குணத்துக்கு அவனில் இவளுக்குத் தன்னேற்ற முமற்றனை போரும். *அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந் ஸ்ரீ.யு. 16-17.* என்ன ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு மகளான த்ரிஜடை போலே. ஸ்ரீ விபீஷணாழ்வானைப் போலன்றியே இவள் பிராட்டிக் கடிமை செய்யப் பெற்றாளிறே. அப்படியே இங்கு தமையன் க்ருஷ்ணனுக்குத் துணையாய்த் திரிய. இவள் நப்பின்னைப் பிராட்டிக்கு அடிமை செய்யப் பிறந்தவள். (பனித்தலை வீழ) மேல் பனி வெள்ளமிட, கீழ் பால் வெள்ளமிட, நடுவே மால் வெள்ளமிட நின்றமை இது. (வாசல் கடைபற்றி) மேலைப் படியையும் தண்டியத்தையும் பற்றி நாலா நின்றோம். இத் தர்மஹாநியை அறியகின்றிலை யென்கிறார்கள். 'இவர்கள் படும் அலமாப்புக் காண்போம்' என்று பேசாதே கிடக்க. தீரா மாற்றமாக நெஞ்சாறல் பண்ணி முகம் காட்டாத க்ருஷ்ணனென்றால், பெண்கள் சிவட்கென்று, 'இதொரு பித்து' என்பர்களென்று பார்த்து க்ருஷ்ணனால் பட்ட நெஞ்சாறலடையத் தீர்ந்து நெஞ்சுகள் குளிரும்படி பெண் பிறந்தார்கருத் தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனைச்சொல்லுவோம், இவளெழுந்திருக்கவென்கிறார்கள்.

(சினத்தினால்) ஆச்ரிதர் கார்யம் செய்யாதானாயிரான் க்ருஷ்ணனைப் போலே. இவன் தன் கார்யந்தானா யிருக்கும். * 3266. தான் தன் சீற்றத்தினை முடிக்கும்*. *த்விஷந்நம் ந போக்தவ்யம் * ஆச்ரிதருடைய சத்ருக்களே தனக்கு சத்ருக்கள். பகவதபசாரம் என்று இரண்டில்லை போலே இருந்தது. * மம மத்பக்த பக்தேஷு ப்ரீதிரப்யதிகா ந்ருப * என்று, 'ஆச்ரிதர்க்கு நல்லவர்கள் தனக்கு நல்லவர்கள்' என்றிருக்கும். மஹாராஜர்க்கு சீற்றம் பிறந்த போது வாலியை எய்தார்; அவர் அழுதபோது கூட அழுதார். * ஸஞ்ஜாத பாஷ்ப: ஸ்ரீ.கி. 24-24. (தென்னிலங்கை) அவன்

செய்த அநீதியை நினைத்து பறைச்சேரி யென்பாரைப் போலே அத்திக்குங்காண் வேண்டாதே யிருக்கிறபடி. ஒரு ப்ராணனை இரண்டாக்கினாப் போலே தாயையும் தமப்பனையும் பிரித்த படுகொலைக் காரனிருக்கிற விடமிறே. (கோமான்) *யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர: | ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா ஸ்ரீ. ஸு. 49-18* என்று திருவடி மதித்த ஐச்வர்யம். (செற்ற) ஓரம்பாலே தலையைத் தள்ளிவிடாதே மொட்டும் நெம்பும் பாறும் கலங்கும்படி தேரை அழித்து, வில்லை முறித்து, படையைக் கொன்று, ஆயுதங்களை அறுத்து,* 1283. தான் போலு மென்றெழுந்தான் தரணியாளன் * என்று கிளர்ந்து வந்த அபிமானத்தையும் அழித்து, நெஞ்சாறல் படுத்தி * கச்சாநுஜாநாமி ஸ்ரீ யு. 59-144. * என்கிறபடியே படையைச் சிரைத்துவிட்டபடியான எளிவரவு மூதலிக்கைக்கு ஆளில்லையாம் என்று கொல்லாதே விட்டார். *யோ வஜ்ரபாதாசநி ஸ்ரீ யு. 59-140. *மாதங்க இவ, ப்ரஹ்மதண்டப்ரகாசநாம் ஸ்ரீ யு 60-2,3. *என்று, *தஸ்யாபி ஸங்க்ரம்ய ரதம் ஸசக்ரம் ஸாச்வத்வஜச்சத்ர மஹாபதாகம், ஸஸாரதிம் ஸாசநி சூலகட்கம் ராம: ப்ரசிச்சேத சரைஸ்ஸுபுங்கை: * ஸஏவமுக்தோ ஹததர்பஹர்ஷ: நிக்ருத்த சாபோ நிஹதாச்வஸூத:, சரார்தித: க்ருத்த மஹாகிரீட: விவேச லங்காம் ஸஹஸா ஸ்ம ராஜா || ஸ்ரீ யு, 59-138, 145.

(மனத்துக்கினியானை) வேண்டிற்றுப் பெறாவிட்டால், 'சொல்லாய் சீமானே' என்றாப்போலே. *633. வேம்பேயாக வளர்த்தாள் * என்னும் க்ருஷ்ணனல்லவே. பெண்களைக்கொன்று துடிக்கவிட்டுவைத்துத் துளிகண்ணநீரும் விழவிடாதே நிற்கும் க்ருஷ்ணனையொழிய; *ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ஸ்ரீ கி. 24-24. *என்று சத்ருக்களுக்கும் கண்ணநீர் பாய்ந்து. * 613. உண்ணாதுறங்காதொலிகடலையூடறுத்து* தன்னைப்பிரிந்து நாம் படுவுற்றை நம்மைப் பிரிந்து தான் படவல்லன். (பாடவும் நீவாய்திறவாய்) * ம்ருதஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம் ஸு.பா.* என்றத்தைக் கேட்டும் உனக்கு உறங்குகைக்கு உறுப்பாயிற்றோ? (வாய்திறவாய்) ப்ரீதிக்குப் போக்குவிடவேண்டாவோ? தாங்கள் ஒரு தலைப்பற்றவேண்டியிருக்கிறார்கள்.

(இனித்தானெழுந்திராய்) எங்களுக்காக உணராவிட்டால் உனக்காக உணரவுமாகாதோ? எங்களாற்றாமை அறிவித்த பின்பும் உறங்கவல்லையாவதே. அகம்பநன் சூர்ப்பநகையுள்ளிட்டார்க்குள்ள இரக்கமும் உன்பக்கல் கண்டிலோம். (ஈதென்னபேருறக்கம்) எம்பெருமான் பாரார்த்தமாக உணரும்; ஸம்ஸாரிகள் ஸ்வார்த்தமாக



உணருவர்கள். இது இரண்டுபடியுமன்று; ஆர்த்தி கேட்டுமுணராதொழிவதே. *475 பையத்துயின்றபரமன்* பகவதஸ்த்வராயை நம: ஸ்ரீரங். 2-57. * ஆர்த்தி கேட்டால் அப்படி புறப்படும் அவனோடொக்கப்பழகிவைத்து இங்ஙனே கிடப்பதே! அக்குணங்கள் தானே உன்னை உறக்குகிறதோ?

(அனைத்தில்லத்தாருமறிந்து) 'உன் வாசலிலே எல்லாரும் வந்து எழுப்ப நீஎழுந்திராதொழிந்தாய்' என்கிற வேண்டப்பாடு எல்லாருமறிய வேண்டியிருந்தாயாகில், அதுவும் செய்ததுகாண். இனி உணராய் என்ன; க்ருஷ்ணனையும் நம்மையும் சேரவொட்டாத ஊரிலே பதினைந்து நாழிகையிலே வந்து எல்லாரும் கேட்க 'மனத்துக்கினியான்' என்பதும் 'க்ருஷ்ணன்' என்பதும் 'எழுந்திராய்' என்பதாய் கூப்பிட்டால் நம்மை என் சொல்வார்களென்ன; நீ நீயாக, நாங்கள் நாங்களாக வந்துபோய் ப்ரஸித்தமாயிற்று; இனி அத்தை விடாய் என்கிறார்கள். 'ரஹஸ்யமாக பகவத் விஷயமநுபவிக்குமத்தனை யொழிய, புறம்பிதுக்காளுண்டோ' என்றிருந்தாயாகில் நீ பிறந்தபின்பு இதொரு வ்யவஸ்தையுண்டோ? எல்லாரும் உன்னைப்போலேயாம்படி அதுபோய் ப்ரஸித்தமாயிற்றுக் கிடாய் என்னுமாம். எம்பெருமானார் திருவவதரித்தாப்போலேகாணும் இந் நாச்சியார் அவதரித்த பின்பு எல்லாரும் பகவத் விஷயமறிந்தது. 12

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாவரக்கனை
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று
புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்!
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே
பள்ளிக்கிடத்தியோபாவாய்! நீநன்னாளால்
கள்ளம்தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய். 13

பதின்மூன்றாம் பாட்டு.—இவளை எழுப்புகிறது அசலகத்திலே கேட்டுக்கிடந்தாளொருத்தி தன்னபராதத்தைத் தீர உணர்ந்தாளாய், 'பெண்காள்! இங்கும் ராமவ்ருத்தாந்தம் சொல்லி எழுப்பினீகோளோ' என்ன, 'ராமவ்ருத்தாந்தமும் சொன்னோம், க்ருஷ்ணவ்ருத்தாந்தமும் சொன்னோம், ஸ்ரீ ராமாயண மஹாபாரதங்களிரண்டும் சொன்னோம்' என்று கண்ணழகியாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

(புள்ளின் வாய்கீண்டானை) கொக்கின் வடிவு கொண்டு வந்த அஸுரனைப்பிளந்தபடி. *165. பள்ளத்தின் மேயும்*. இத்தலைக்கு இசைவேயிறேவேண்டுவது. விரோதி போக்குகை அவன்படியென்றிருக்கை. நம்முடைய அநீதிகளுக்கு

ஈச்வரன் பண்ணும் அநுமதி, வைஷம்ய நைர்க்ருண்யத்தில்
புகாதாப்போலே இவ்வநுமதி உபாயத்தில் புகாது. இரு
வர்க்கும் இரண்டநுமதிகளும் ஸ்வரூபத்திலே, கிடக்குமத்
தனை. (பொல்லாவரக்கனை) தாயையும் தமப்பனையும் பிரித்த
நிர்க்ருணனை. *1414 சுரிகுழல் கனிவாய்த்திரு வினைப்
பிரித்த கொடுமையில் கடுவிசையரக்கன்*. (பொல்லா)
*2046. முன்பொலாவிராவணன் தன் முது மதிளிலங்கை
வேவித்து *பிராட்டி, *த்வம் நீச சசவத் ஸ்ம்ருத : ஸ்ரீ ஸு.
22-16. *என்றாள். இவள்தானும், * 540. அன்றின்னதனை
சிசுபாலன்* என்றாள். * விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸ
சேஷ்டித : ஸ்ரீ. ஆ. 17-24. *என்று நல்லவரக்கனுமுண்
டென்கை. *ஸீதாயாச்சரிதம் மஹத் ஸ்ரீ. பா. 4-6.* என்கிற
பிராட்டிவ்ருத்தாந்தம் ஸ்ரீராமாயணமானபடி யென்னென்
னில், 'குணவாந்' என்றது அவனையும் அவளையும் கூட்டி
வாழ நினைக்குமவர்களோடு பரிமாறினபடி. 'வீர்யவான்'
என்றது பிரிக்க நினைத்தார் முடியும்படி. 'தர்மஜ்ஞ:' *ஸ்ரீ.
பா. 1-2.* என்றது அவர்கள் ஸ்வரூபமுணர்ந்திருக்கும்படி.

(கிள்ளிக்களைந்தானை) மறுவலிடாதபடி கிழங்கோடே
வாங்கினபடி. திருவிளையாடு சூழலில் புழுத்தவிடம் கிள்ளிப்
பொகடுமாபோலே ஆச்ரிதர் குடியில் தோஷாம்சத்தை
வாங்கிப்பொகட்டபடி. (கீர்த்திமை) எதிரிகள் நெஞ்சு
உளுக்கும்படி. * சத்ரோ : ப்ரக்யாதவீர்யஸ்ய* ஸ்ரீ. யு. 106-6.
என்னும்படியிருக்கும் வீரம். சத்ருக்களும் மேலெழுத்திட்
டுக் கொடுக்கும் வீரம். * க இதி ப்ரஹ்மணோ நாம *என்ற
பரரானவர்கள் பகவத்பரத்வத்துக்கு மேலெழுத்திட்டுக்
கொடுக்குமாபோலே ஆத்மாபஹாரிகள் எதிரம்பு கோக்கை
தவிர்ந்து, நமோநாராயணாய என்று அவனுடைய சேஷத்வத்
துக்குமேலெழுத்திட்டுக்கொடுக்குமாபோலே. (ரஞ்ஜநீயஸ்ய)
தோளாலே நெருக்குண்ட பிராட்டியார் சொல்லுமாபோலே
சொல்லுவதே. உகவாதார்க்கும் விடவொண்ணாத வீரம்
உகந்த பெண்களுக்கு விடைவொண்ணாமைக்குச் சொல்ல
வேணுமோ? ராவணன் பெருமாள் வீரத்துக்கிலக்கானான்;
தங்கை அழகுக்கிலக்கானாள்; தம்பி சீலத்துக்கிலக்கானான்.
தாங்கள் அபலைகளாகையாலே தங்களுக்கு பலமாக அவன்
விஜயத்தை அநுஸந்திக்கிறபடி. கர்மஜ்ஞானபக்திகள்
உபாயமாமிடத்தில் இவனும் கூடவேணும். பரமசேதநனான
இவன்தானே உபாயமாமிடத்தில், *பாபீயஸோபித்யாதி; த்வஜ்
ஜ்ஞானசக்திகருணாஸு ஸதீஷு அதிமா. 61. *என்று ஜ்ஞாந
சக்திக்ருபையே ஸஹகாரமாகையாலே அவற்றை அநு
ஸந்தித்து மார்விலே கைவைத்துக்கொண்டு உறங்குவார்



களிவர்கள். (பாடிப்போய்) இவர்களுக்கு கால்நடைதரு
கைக்கு மிடுக்குக்கால் கொண்டுபோகை. ஸுகுமாரரான
பிள்ளைகள், 'உண்டுண்டுவழிபோய்' என்னுமாபோலே. *பரஸ்
பரம் தத்குணவாதசீது பீயூஷ நிர்பாபிததேஹயாத்ரா:* பாதேயமித்
யாதி.*போழ்துபோக உள்ளகிற்கும் புன்மையில்லாதவர்களி
வர்கள். அவர்களுக்கு *3564 வாழ்துணையா வடமதுரைப்
பிறந்தவனன்றோ? இவர்களுக்குச் சொல்ல வேணுமோ?

(பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்) 'இன்ன
முணர்ந்தும் உணராத சிறுபிள்ளைகளையு மெழுப்பிக்
கொண்டு விடிந்தவாறே போகிறோம்' என்ன; அவர்கள்
உனக்கு முன்னே உணர்ந்து க்ருஷ்ணன் மெய்காட்டுக்
கொள்ளுமிடம் புக்காரென்கிறார்கள். (பாவைக்களம்)
போர்க்களம் நெற்களம் என்னுமாபோலே. (எல்லாரும்)
நாம் சென்றெழுப்பவேண்டும்படியான பாலைகளும்.
(பாவைக்களம்) ஸங்கேதஸ்தலம். அவர்கள் போனார்களா
கிலும் அகாலத்திலே போகவொண்ணாது; வெள்ளி யெழுந்
ததோ பாருங்கோளென்ன, (வெள்ளியெழுந்து வியாழ
முறங்கிற்று) நீ நினைக்கிறவளவு தப்பி வெள்ளி உச்சிபட்டு,
வியாழம் அஸ்தமித்தது.

'நக்ஷத்ரம் கண்டதெல்லாம் வெள்ளியாயும் வியாழமாயு
மன்றோ உங்களுக்குத் தோற்றுவது; அவை புனர்பூசம்
பூசங்களாகக் கொள்ளீர்; மற்றடையாளமுண்டோ' என்ன,
'நாங்கள் திரண்ட தொன்றுமல்லவோ' என்ன, 'நீங்கள்
பிரியிலன்றோ திரளவேண்டுவது, மற்றடையாளமுண்டோ'
என்ன; (புள்ளும் சிலம்பினகாண்) அதுப்ரமாணமன்றாகில்
புள்ளும் சிதறிப்போயிற்றின. பண்டு ஒருகால் (புள்ளும்
சிலம்பின) என்றது—அப்போது கூட்டிலேயிருந்து சிலம்
பிற்று, இப்போது பறந்துபோகத்தொடங்கிற்று யென்கை.
(போதரிக்கண்ணினாய்) 'உங்கள் வார்த்தை பழகிறிலேன்'
என்று பேசாதே கிடக்க, 'இக்கண்ணுடைய எனக்கு ஓரி
டத்திலே புறப்படவேணுமோ? எல்லாரும் என்காலிலே
வந்து விழுகிறார்கள்' என்று கிடக்கிறாயோ. (போது அரி)
பூவும் மானும் போன்றகண்; பூவிலே வண்டிருந்தாப்போலே
என்னுமாம்; பூவோடே சீறுபாறென்னுமாம். அஸிதே
க்ஷணையாகையாலே புண்டரீகாக்ஷன்பக்கல் போகவேணு
மோவென்னும். தான், *3302 நெடுங்கணிளமான்*. அவன்,
3302 அனைத்துலகமுடைய வரவிந்தலோசநன்; அவனும்
அவன் விபூதியும் இக்கண்ணிலே ஒரு மூலைக்குப்போராது.
(போதரிக்கண்ணினாயித்யாதி) இக்கண்ணிலே அவனைக்கு
மிழிநீரூட்டி அவன்கண்ணிலே நாம் குமிழிநீருண்ணப்பாரா

யென்கை. (குள்ளக்குளிர) ஆதித்யகிரணத்தாலே நீர் வெதும்புவதற்கு முன்னே புறப்பட்டு. பெண்களும் புறப்பட்டு நீர் வெதும்புவதற்கு முன்னே யென்னவுமாம். (குடைந்து நீராடாதே) தாங்களாகையாலே உள்ளே குடைந்தாடும் தங்கள் ஸம்பந்தத்தாலே கொதிக்குமென்றறிகிலள்.

(பள்ளிக் கிடத்தியோ) பிள்ளைகள் படுக்கையிலே விட்டுப் போகா நிற்க, நீ படுக்கையிலே கிடப்பதே, அவன் கிடந்துபோன படுக்கையை மோந்து கொண்டு. பயிர் விளைந்து கிடக்க, கதிர் பொறுக்கி ஜீவிக்கிறாயோ! (பாவாய் நீ) தனிக்கிடக்க வல்லளோ நீ. (நன்னாள்) அடிக் கழஞ்சு பெற்ற நாளிறே. இந்நாலு நாளும் போனவாறே பெண்களும் கிருஷ்ணனும் என்று புகுகிறார்கள் கிடாய். இந்நாலுநாளும் போனவாறே மேல் நாள்கள் ராவணனைப் போலே பிரிக்கும் நாட்கள். ஆண்டாள் திருவேகாதசி பட்டினிவிட்டு பட்டரை 'தீர்த்தம் தாரும்' என்ன, 'இப்பெரிய திருநாளிலே இதொரு திருவேகாதசி எங்ஙனே தேடி எடுத்துக் கொண்டிகோள்' என்றருளிச் செய்தார்.

(கள்ளம் தவிர்ந்து) *சோரேணாத்மாபஹாரிணா ம.உ. 41-34* என்ற தத்வஸ்துவிலும் ததீயவஸ்துவை அபஹரிக்கையன்றோ பெருங்களவு. * என்னுடை நாயகனே * என்னும்படியே ஸ்வாமித்வத்தைச்சொல்லி, சேஷபூதனுக்கு சேஷத்வத்தை அபஹரித்தால் சேஷியை க்ஷமை கொள்ளலாம். சேஷிக்கு தன் சேஷித்வத்தை அபஹரித்தால் க்ஷமை கொள்ளுகைக்குப் பொறுத்தோ மென்பாரு மில்லையே; குற்றம் நின்றேபோ மித்தனை. 'கலந்து குள்ளக் குளிரக்குடைந்து நீராடாதே பாவாய் பள்ளிக்கிடத்தியோ' என்று க்ரியை. * தஸ்யோபவந ஷண்டேஷு ஸ்ரீ. ஸு. 38-14.* இத்யாதி. 13

உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள்
செங்கழுநீர்வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண்
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர்
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான்போதந்தார்
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்
சங்கொடுசக்கரம் ஏந்தும்தடக்கையன்
பங்கயக்கண்ணனைப் பாடேலோரெம்பாவாய். 14

பதினாலாம் பாட்டு. இதுக்கெல்லாம் கடவளாய், எல்லார்க்கும் முன்னே தானு முணர்ந்து, எல்லாரையு முணர்த்தக் கடவளாக ப்ரதிஜ்ஞை பண்ணின ளொருத்தியை எழுப்புகிறது.



(உங்கள் புழக்கடைத் தோட்டத்துவாவியுள் செங்கழுநீர்வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்) இவள் வாசலிலே வந்து 'போது விடிந்ததுகாண், எழுந்திராய்' என்ன, 'விடிந்தமைக்கடையாளமென்' என்ன, 'பஞ்சலக்ஷம் குடியில் பெண்களும் வாய்பேசுவரும், பேசாதிருப்பாருமாய்வந்து நிற்கிறது விடிந்தமைக்கடையாள மன்றோ' என்று செங்கழுநீர் அலர்ந்தாப்போலேயும் ஆம்பல் மொட்டித்தாப்போலேயும் என்று தங்கள் வாயைச்சொல்ல, 'உங்கள்வாய் நீங்கள் வேண்டினபோதலர்ந்து மொட்டியாதோ' என்ன, 'வயலிலவையுமப்படியே' என்ன, 'நீங்கள்போய் அலர்த்தியும் மொட்டிக்கப்பண்ணியும் வந்திகோள்' என்ன, 'தோட்டத்துவாயுவிமப்படியே' என்ன, 'வயலிலணித்தன்றோ உங்களுக்குத்தோட்டத்துவாவி' என்ன, 'புழைக்கடைத் தோட்டத்து வாவியும் அலர்ந்து மொட்டித்தது' என்ன, 'அது உங்களுக்குக் கைவந்ததன்றோ' என்ன, 'அஸூர்யம்பச்யமாய் க்ருஷ்ணனுக்கும் புகுரவொண்ணாத புழைக்கடையில் தோட்டத்து வாவியில் செங்கழுநீரலர்ந்து ஆம்பல் மொட்டித்தது' என்ன;

'அலரப்புக்கமாத்ரத்திலே கழிய அலர்ந்ததென்றும், மொட்டிக்கப்புக்க மாத்ரத்திலே முட்டமொட்டித்ததென்றும் சொல்லுகிறீர்கள். இதுவொழிய வேறடையாளமுண்டோ சொல்லுங்கோள்' என்ன, ஸாத்விகரோடு தமோபிபூதரோடு வாசியற உணர்ந்தது பாரென்கிறார்கள். (செங்கல் பொடிக்கூறை இத்யாதி) அளற்றுப்பொடியிலே புடவையைப்புரட்டி ப்ரஹ்மசர்யம் தோற்ற பல்லைவிளக்கி, 'ஸபையார் பொடிகிறார்; கோழுற்றவன் தண்டம் கொள்ளுகிறான்' என்று போதுவைகித்தென்றுபோம் அசுசிகளுமகப்பட உணர்ந்தார்கள். (தங்கள்திருக்கோயில்) அவர்கள் சொல்லும் ப்ரகாரம். சிறுபதத்தூற்றத்துறையிலே ஒரு தபசி பரிசிலிலேறி ஆற்றினுள்ளே புக்கு காவேரிதேவிக்கு சங்கூதுகிறேனென்று அங்கே ஊத, பரிசிலிலே போகிற குதிரை மிதித்து அதிலேறின மனிச்சரடைய செற்றுப்போச்சுதென்று எம்பாரருளிச் செய்தவார்த்தை. சங்கு என்று குச்சியைச் சொல்லிற்றாகவுமாம். வெள்ளை தவிர்ந்து காஷாயத்தை உடுத்து போக்ய போகோபகரணங்களைத் தவிர்ந்து தபச்சர்யையை உடையராயிருக்குமவர்கள், ஸந்த்யாவந்தநாதிகளைச்சமைந்து அகங்களிலே திருமுற்றத் தெம்பெருமானை ஆராதிக்குங்கால மாயிற்றென்னுமாம். சங்கு ஸமாராதநத்துக்கு உபலக்ஷணம். தம: ப்ரசுரர் லக்ஷணத்தையோ ஸத்வஸ்த்தரான நமக்குச்

சொல்லுவது. *தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாச்ச ஆ-ஸூ.* என்று ஸத்வஸ்த்தர்படியைச் சொல்லவேண்டாவோ என்ன, ஸத்வஸ்த்தைகளான நாங்கள் சொன்னபடியையும் செய்கிறிலையென்கிறார்கள்.

நான் செய்ததென்னென்ன (எங்களை முன்னமெழுப்புவான்வாய் பேசும்) நேற்றே எங்களை எழுப்புகிறேனென்றும் க்ருஷ்ணன் பாடே கொண்டு போகிறேனென்றும் சொன்னது கண்டிலோமே என்கிறார்கள். (வாய்பேசும்) பொய்சொல்லத்தகும் க்ருஷ்ணனோடேயிறே பழகுகிறது; பொய்யே நினைத்து அதுக்குமேலே பிறரறியவேணுமோ? (நங்காய்) சொன்னத்தோடே செயல்கூடாதே யிருப்பார்க்கு ஒருபூர்த்தியும் வேணுமோவென்கை. (எழுந்திராய்) இவர்கள் பேச்சேயமைந்தது இவளுக்கு; உன் பூர்த்தியாலே எங்கள் குறையையும் தீராய். ‘இப்படி சொல்லிவைத்து செய்யப்பெற்றிலோம்’ என்றும் லஜ்ஜையும் கூடவின்றிக்கேயிருப்பதே? (நாணாதாய்) நீயிருந்த ஊரில் பூசினியும் காயாதோவென்கை. (நாவுடையாய்) வாயேயிறே உனக்குள்ளதென்கை. *நாந்ருக்வேதவிநீதஸ்ய ஸ்ரீ. கி. 3-28* இத்யாதி இவளெல்லாம் படுத்தினாலும் விடவொண்ணாத நாவீறுடைமை. விண்ணப்பம் செய்வார் எல்லா அநீதிகள் செய்யிலும் ஸத்துக்கள் தலையாலே சுமக்கிறது நாவீறன்றோ.

நான் உங்களுக்குச் செய்யவேண்டுவதென்னென்ன, (சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணனைப்பாட) இவர்களிவெல்லாம் சொல்லுகிறது தங்களார்த்தியிறேயென்று பார்த்து, இவர்களை தரிப்பிக்கைக்காக, நாவாலுள்ள கார்யம் கொள்ளுங்கோளென்ன, அவன் திருநாமங்களைப் பாடென்கிறார்கள். (ஏந்துந்தடக்கையன்) பூவேந்தினாப்போலே திருவாழியையும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் ஏந்தி அந்த ஸ்பர்சத்தாலே வளர்ந்த திருக்கைமலர்களை யுடையவனாயிருக்கை. *1950 இன்னாரென்றறியேன்* என்று மதிகெடுக்கும் கையில் திருவாழியையும் சொல்லுகிறது. (பங்கயக்கண்ணனை)* ஜிதம் தே புண்டரீகாக்ஷ* 2842 தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை என்னப்பண்ணும் கண்ணையுடையவனை. *2348 ஆங்குமலருமித்யாதி ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை சந்த்ரனென்னும் திருவாழி யாழ்வானை ஆதித்யனென்றும், திருநாபீகமலம் மொட்டிப்பதும் அலருவதாமாபோலே கண்ணாகிற தாமரையும் மொட்டிப்பது அலருவதாமென்கை. சந்த்ர ஸூர்யர்களையும் தாமரைப்பூவையும் ஒரு கலம்பகமாலையா



கத் தொடுத்தாப்போலே இருக்கும்படியைச் சொல்லுகை. (பங்கயக்கண்ணனை) கண்ணாலே நமக்கெழுத்துவாங்கி நம்மை யெழுத்துவாங்குவித்துக்கொள்ளுமவன். *3653 தூது செய்கண்கள் *இளவாய்ச்சியர்கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்பிரான் 2745* (பாட) உன்னுடைய ப்ரீதிக்குப் போக்குவிட்டு எங்கள் வறள்கேட்டைத்தீராய். 14

எல்லே! இளங்கிளியே! இன்னமுறங்குதியோ?
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்
வல்லைஉன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும்
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக
ஒல்லைநீபோதாய் உனக்கேன்னவேறுடையை
எல்லாரும்போந்தாரோ போந்தார்போந்தெண்ணிக்கொள்
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை, மாயனைப் பாடேலோரெம்பாவாய். 15

பதினைந்தாம் பாட்டு.—பெண்க ளெல்லாருடையவும் திரளைக்காணவேண்டியிருப்பா ளொருத்தியை யெழுப்புகிறார்கள்.

இவர்கள் தங்களிலேகூடி பாடின பாட்டான ‘சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன் பங்கயக்கண்ணனைப் பாட’ என்று பாட்டைக்கேட்டு அசல் திருமாளிகையிலே கிடந்தாளொருபெண்பிள்ளை தன்னிலே கிடந்து நுடங்கிப்பாடுகிறபடியைக்கேட்டு (எல்லேயிளங்கிளியே) திருவான பேச்சிருந்தபடி என்னென்று கொண்டாடுகிறார்கள். யாழிலேயிட்டுப்பாடி இனிதானவாறே மிடற்றிலே யிட்டுப்பாடுவாரைப்போலே முந்துற பெண்கள் பாடக்கேட்டு இவள் பாடுகிறாள். (இளங்கிளியே இன்னமுறங்குதியோ) ‘எல்லே’ என்றது என்ன ஆச்சர்யமென்றபடி. ஸம்போதநமாகவுமாம். (இளங்கிளியே) கிளியை வ்யாவர்த்தித்தபடி. தாங்கள் கிளிகள்; இவள் இளங்கிளி; பாட்டில் இனிமையாலே உறங்கி இவள்பேச்சுக்கிடையாதென்னும்படியிருக்கை. ‘இதொருபேச்சு’ என்று கொண்டாடினார்கள். இவர்கள் பேச்சைக்கேட்டுக் கொண்டாடிச் சென்னத்தை தன்பயத்தாலே தங்களுடைய உடம்பும் வாயும் வெளித்திருக்க, க்ருஷ்ணஸம்ச்லேஷத்தாலே நம்முடைய உடம்பு பசுமையுண்டாய், வாயும் சிவந்திருக்கிறதென்கிறார்கள்; இவ்வளவிலே வாய்திறக்கில் பழியிடுவார்களென்று நினைத்து ’நானிங்ஙனே பசுகுபசுகென்று சிறகுகளும் தானுமாயிருந்தேனோ என்றுபேசாதே கிடந்தாள். (இன்னமுறங்குதியோ) உத்தேச்யம்கைபுகுந்தால் உறங்குவாருண்டோ? எங்களுக்கு க்ருஷ்ணவிரஹத்தாலே தளர்வதுக்கு மேலே

உறக்கமில்லை; அதுக்கு உன்கடாக்ஷமும் பெறுதொழி வதே; உன்பாட்டுக்கேட்கப் பெறுதொழிவதாய் உயிர்க் கொலையாக்கியிட்டு வைத்தால் தரிக்க வொண்ணுமோ?

(சில்லென்றழையேல் மின்) பிராட்டிமாரோடேகூட எழுந்தருளி யிருந்தாலும் படிக்கத்தோபாதி அந்தரங்கனை யிருக்கக்கடவ ஸ்ரீநாரதபகவானை ச்வேதத்வீபத்துக்கெழுந் தருளினபோது உள்ளே புகப்புக்கவாறே, இவன் வெட்டத் தனம் அவர்களுக்குப் பொறுதென்று 'நீ இங்கே நில்லு' என்று எழுந்தருளினப்போலே தான் அநுஸந்திக்கிற அநு ஸந்தானத்துக்கு இவர்கள் அழைக்கிற சொல் விக்நமா கையாலே சிலுகிடாதே கொள்ளுங்கோ ளென்கிருள். இவர்கள் வார்த்தை அஸஹ்யமோ வென்னில்; திருப்புன் னைக்கீழே திருவாய்மொழி பாடாநின்ருல், செல்வர் எழுந் தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. (நங்கைமீர் போ தருகின்றேன்) இவர்கள் சிவிட்கென்று, 'நாங்களுமெங்கள் சொல்லுமாகாதபடி உன் குறைவறு கையிருந்தபடியென்' என்ன, 'நீங்களன்றோ குறைவற்றிகோள்? என்னைப்படுத் தாதே கொள்ளுங்கோள் புறப்படா நின்றேன்' என்ன; (வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன்வாய் அறிதும்) நங் கைமீரென்ற உறைவற்ற சொல்லாலே நீ சொல்லிற்றைச் சொல்லி, எங்கள் திறத்தே குற்றமாம்படி வார்த்தைசொல்ல வல்லை என்னுமிடம், இன்றேயல்ல; எத்தனைகாலமுண்டு உன்னோடே பழகுகிற தென்ருர்கள்.

(வல்லீர்கள் நீங்களே) 'இன்னமுறங்குதியோ; வல் லேயுன் கட்டுரைகள்' என்னும் வெட்டிமை உங்களதே. நான் உங்கள் வாசலிலேவந்து படாததுண்டோவென்ன; அது ஸாத்யம்; இது ஸித்தமன்றோ, ப்ரத்யக்ஷத்துக்கு அநுமாநம் வேணுமோவென்கிருர்கள். (நானே தானுயிடுக) பதகம் மூட்டினவாறே சிறிது போதாகிலும் பேசாதே யிருப்பார்களிறே என்று 'நானே தானுயிடுக' என்கிருள். 'ஒருவனுக்கு வைஷ்ணவத்வமாவது ஸ்வதோஷத்தையில்லை செய்யாதே, இல்லாதத்தையும் சிலருண்டென்ருல் அத்தை இசைகையே ஸ்வரூபமென்னும் வேதார்த்தம் சொல்லிற் ருகிறது. ஸ்ரீ பரதாழ்வான், *மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்* என்ருன். பரஸ்துதியோடொக்கும் ஸ்வநிகர்ஷம். அத்தோ ஷமென்தலையிலேகிடக்கிறது. 'உங்களுக்கிப்போதுசெய் யவேண்டுவதென்' என்ன; அரைக்ஷணம் தங்களுக்கவளை யொழியச் செல்லாமையாலும் அவளுக்குத் தங்களையொழி யச் செல்லாமையாலும் சடக்கெனப் புறப்பட்டுக்கொண்டு நில்லென்கிருர்கள். (ஒல்லை நீ போதாய்) உன்படுக்கையில்



கிடக்கிற க்ருஷ்ணனையிட்டு வைத்து நீ கடுகப்போராய்; அரைக்ஷணம் வைஷ்ணவ கோஷ்டியைப்பிரிய நின்று வரும் மாத்யஸ்த்யம் எனக்கென்செய்ய வென்கிற ஸுப்ர ஹ்மண்யபட்டர் வார்த்தையை ஸ்மரிப்பது. (உனக் கென்ன வேறுடையை) அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுக் குள்ளதொழிய உனக்குவேறே சிலஉண்டோ? உன்ஸ்வயம் பாகம் இன்னம் தவிர்ந்திலையோ எங்கள் பெரும்பானை கண்டபின்பும்? அதாவது - மத்யமபதமும் உத்தரபதமும் *ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணு விபச்சிதா தை. ஆ. 1-2* என்னக்கடவதிறே. 1419. கோதில் வாய்மையினுயொடு முடனே யுண்பன் நான் *என்னுமாபோலே. இளையபெரு மாள் கைகேயியின் மகன் வருகிருனென்று ஸ்ரீபரதாழ் வானைச் சீறி, வில்லையோட்டிக் கொல்ல வென்ன, பெருமா ளுக்கு அது அஸஹ்யமாய் 'பிள்ளைக்குச் சொல்லிக்கொள்ளு கிறோம், நீ இங்ஙன் அலமாக்கிறது ராஜ்யத்தை ஆசைப்பட் டன்றோ, நீ ராஜ்யத்தை பண்ணு' என்று சொன்ன வார்த் தையைக் கேட்டு இளையபெருமாள் தரைப்பட்டாப் போலே இவளும் 'உனக்கென்ன வேறுடையை' என்ன அப்படிப் பட்டாள். * ஸஸைந்யம் பரதம் கத்வா ஹநிஷ்யாமி ந ஸம்ச ய: ஸ்ரீ. அ. 96-30. *ராஜ்யமஸ்மை ப்ரதீயதாம், ஸ்வாநி காத்ராணி லஜ்ஜயா ஸ்ரீ. அ. 97-17, 19. * *285 சாது கோட்டியுட் கொள்ளப்படுவார் * என்று புருஷார்த்தமான இக்கோஷ் டிக்குப் புறம்பாயிருக்கைக்கு மேற்பட்டவநர்த்தமுண்டோ? விஷயங்களைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம். ஈச்வரனைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம். ஆத்மாவைப்பற்றிப் புறம் பாயிருக்கவுமாம்.

(எல்லாரும் போந்தாரோ) உங்களை யொழிய எனக் கொரு ஸுகமுண்டோ? உணரவறியாத சிறு பெண்களும கப்பட இழக்க வொண்ணுதென்று பார்த்து, அவர்களு முணர்ந்தால் புறப்பட வேணுமென்று கிடந்தேனித்தனை; எல்லாரும் போந்தார்களாகில் புறப்படுகிறேனென்ருள். (போந்தார் போந்தெண்ணிக் கொள்) மெய்க் காட்டுக்கு ப்ரயோஜநம் தொட்டெண்ணுகையும் தனித்தனியே எல்லா ரையும் தழுவுகையும்.

எல்லாரும் வந்தாராகில் இனி உங்களுக்குச் செய்ய வேண்டுவ தென்னென்ன; வேறுவேண்டா! உன்னுடைய அழகிய மிடற்ருலே ஒரு கால் 'வல்லானை கொன்ருனை' என்னுயென்கிருர்கள். (வல்லானை கொன்ருனை) ஒரு நாள் செய்த உபகாரமமையாதோ நமக்கென்று கொண்டாடுகி ருர்கள். * 1493. புகுவாய் நின்ற போதகம் வீழப் பொரு

தான் * என்று வாசலிலே யானையை நிறுத்தி பிள்ளையை யானை நலிந்ததாகாதே கேட்போமிறே என்று கம்ஸன் அம்மானாய் முறைகேடாக்கி யிருக்கப் பார்க்க, அதனைக் கொன்று அவ்வூரில் பெண்களையும் நம்மையும் உளோமாம்படி பண்ணி, நம் ஜீவநாத்ருஷ்டமான தன்னை நோக்கித் தந்தவன். (மாற்றாரை மாற்றழிக்க வல்லானை) சக்ரவர்த்தி திருமகனாரைப் போலே, நாளை வாவென்று விடாதே அக்ஷணத்திலே கம்ஸாதிகள் நினைத்த நினைவை அவர்கள் தங்கள் நினைவோடே போக்கி, தாய் தமப்பன் கால் விலங்கைப் போக்கி வாழ்வித்தவனை.

(மாயனை) தன் கையில் சத்ருக்கள் படுமவற்றைப் பெண்கள் கையிலே படுமவன். (பாட) நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப் பாட. இவ்விஷயத்தில் விஜயம் ப்ரணயித்வத்துக்குக் கொற்றையாய் தோற்க, அத்தோல்விக்கு அவனைப் பாடவேணும். 15

††நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே!, கொடித்தோன்றும்தோரண
வாசல்காப்பானே!, மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர்சிறுமியரோமுக்கு, அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான்
வாயால்முன்னம்முன்னம் மாற்றாதேஅம்மா! நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய். 16

பதினாறாம் பாட்டு.—கீழ்ப்பத்துப் பாட்டாலாக அஞ்சு லக்ஷம் குடியில் பெண்களும் ஒருவரை யொருவர் எழுப்பினமைக்கு உபலக்ஷணம்; ஆகையாலே எல்லாரும் கூடிவந்து ஸ்ரீநந்தகோபர் திருமாளிகை வாசலிலே சென்று ஸ்ரீநந்தகோபருள்ளிட்டாரை எழுப்பி 'செய்யாதன செய்யோம்' என்கிறபடியே முறை தப்பாமே முதலிகளையும் பிராட்டியையும் முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானைப் பெறப் பார்க்கிறார்கள்.

* 3069. வேதம் வல்லார்களைக் கொண்டு இத்யாதி. * 2570. காலை நன்ஞானத் துறைபடிந்தாடி. துறையாகிறதித்துறை; இத்துறை தப்பினால் சூர்ப்பணகி பட்டது படுமத்தனை. * சீதைக்கு நேராவனென்றாளிறே. உகந்தருளின நிலங்களில் புகுவார்க்கு திருவாசலில் முதலிகளை அநுமதி கொண்டு புகவேணுமென்று சாஸ்த்ரங்களிலே சொல்லுமது-பருவம் நிரம்பாமையாலே இவர்களுக்கு இரந்து புக வேண்டுகையாலே கோல்விழுக்காட்டிலே அநுஷ்டித்தாராய் விட்டார்கள். * **யேஷாம் த்ரீண்யபதாநாநி யோநிர் வித்யா**



**ச கர்மச, தே ஸேவ்யாஸ் தைஸ்ஸமாயுக்த: சாஸ்த்ரேப்யோபி விசிஷ்யதே** * வைஷ்ணவர்களாசாரத்தை சாஸ்த்ரங்கள் பின் செல்லுமத்தனை. *வைதிகாஸ்த்வதீயகம்பீரமநோநுஸாரிண: ஆ. 20 சாஸ்த்ரத்தை வரியடைவே கற்றாலும் அதில் அர்த்த நிர்ணயத்துக்கும் அநுஷ்டாநத்துக்கும் நெடுங்காலம் செல்லும். அவர்கள் அதின் தாத்பர்யத்தை அரைச் சந்தையாலே சொல்லி விடுவர்கள்; அநந்தரத்திலே அநுஷ்டிக்கலாயிருக்கும்; 'கட்டின குளிகையைக் கையிலே கொடுத்தால் அப்போதே இரும்பைப் பொன்னாக்கிவிடுமா போலே' என்று ஜீயரருளிச் செய்த வார்த்தை. ஸ்ரீராமாயணம் சரணாகதவத்ஸலனென்கிறது. மஹாபாரதம் சரணாகத பக்ஷபாதி யென்கிறது. அது சிறையிருந்தவள் நீர்மை சொல்லுகிறது; இது தூதுபோனவன் நீர்மை சொல்லுகிறது. திருவநந்தபுரத்திலே ஒரு பாகவதரோடே மூன்று பிள்ளைகள் ஸ்ரீராமாயணம் அதிகரித்துச் சொன்ன வார்த்தையை நினைப்பது. உபநிஷத்தும், * முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே * என்று நின்றது; அதுக்கு உபப்ருஹ்மணமான அபயப்ரதாநத்துக்கு வாசி, அவனைப்பற்றுமிடத்தில் ததீயரை முன்னிட்டுக்கொண்டு பற்றுவதென்கை. *நிவேதயத மாம் க்ஷிப்ரம் ஸ்ரீ யு. 17-15 *ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட ஸ்ரீ.யு. 18-34. *

(நாயகனாய்) நாயகனாய் நின்ற கோயில்காப்பானே யென்னவுமாம். எங்களுக்கு நாயகனான நந்தகோபனுடைய கோயில் காப்பானே யென்னவுமாம். இவர்களால் லபிக்கும் எம்பெருமான் பக்கலிலன்று நாயகத்வம். இவர்கள்தங்கள் பக்கலிலே. *பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா ஆ. 65.* என்றார் ஆளவந்தார். ஸர்வ சாஸ்த்ரங்களையும் ஆராய்ந்தவராகையாலே பெருப் பெருத்த உபாயங்களைப் பார்த்தவிடத்தில் 'தன்தலையால் அவனைப் பெறலாயிருந்ததில்லை, பகவத்ஸம்பந்தமுடையாரோட்டை ஸம்பந்தமே பகவத்கடாக்ஷத்துக்கு உறுப்பு' என்றார். அதாகிறது—இவன் அத்யவஸாயப் போட்கனாயிருக்கும்; புருஷகாரம் வலிதாக, அதுவே கார்யகரமாமென்கை. * 606 வல்லபரிசு வருவிப்பரேல் என்று பெரியாழ்வாராலே பெறுமத்தனையே யென்று அறுதியிட்டாப் போலே. *பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச்ச புண்டரீகச்ச புண்யக்ருத் | ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதாசார்யவாந் பவேத் *என்றுமா போலேயும், பட்டர் நஞ்சீயருக்கு 'பெருமாளே உமக்குத் தஞ்சமென்றிரும், பெருமாள் தஞ்சமென்று சொல்லுகையாலே நானும் உமக்குத் தஞ்சம்' என்றருளிச்செய்தார்.

ஆகையால் ஆசார்யர்களை உபகாரகரென்றிட்டு 'நாயகனாய்
நின்ற' என்கிறார்கள். (நந்தகோபனுடைய கோயில்) எம்
பெருமான் பரதந்த்ரனாகையாலே ஸ்ரீ நந்தகோபருடைய
கோவில் என்கிறார்கள். பரமபதத்திலுமப்படியே. * அடி
யார்நிலாகின்றவைகுந்தமிறே. *277 வானிளவரசிறே ஸ்ரீ
ஸேநாபதியாழ்வான்பிரம்பின்கீழும் திருவநந்தாழ்வான் மடி
யிலும் திருவடி சிறகின்கீழும் வளருமித்தனை, இத்தத்வம்.
* யுவராஜமமந்யத ஸ்ரீ அ. 1-42 * என்று சக்ரவர்த்தி பாரித்
துப்போனான்; ஸ்ரீ நந்தகோபர் பெற்றார். *619 நந்தகோபா
லன் கடைத்தலைக்கே ஒரு தண்ணீர்பந்தலைக்கண்டால், 'இது
வைத்த ஸ்ரீமாந் ஆர்' என்னக்கடவதிறே. *3674 நயரதன்
பெற்ற மரதகமணித்தடமிறே. தங்களை சேஷியாகவைக்க
இசைவாரோடே பரிமாறவிறே இங்கு வருகிறது. இங்குத்
தைக்கு ஸ்ரீ ஸத்யபாமைப் பிராட்டியை நாடாளவிட்டு
தான் பாண்டவர்களுக்குச் சொல்லிற்றுச் செய்து திரியும்.
(கோயில்-காப்பானே) சேஷத்வப்ரயுக்தமானபேரே ஆத்
மாவுக்கு நிலைநின்றபேர். *யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:
ஆ. 40. * சிறு பெண்களாகையாலே அவன் தொழிலை
யிட்டுப் பேசுகிறார்கள்; இன்னது பிடிப்பானென்னுமா
போலே அவனுக்கும் பேராலே சொல்லிற்றாகவுமாம்.

இவர்களிப்படி தன்னை ஸ்தோத்ரம் பண்ணினவாறே,
கண்ணாலே 'உள்ளே புகுருங்கோள்' என்றான், (கொடித்
தோன்றும் தோரணவாசல் காப்பானே) கோயில் காப்பா
னென்று இங்குற்றைக்குமாய் அவன் தன்னையே வாசல்
காப்பானென்றதாகவுமாம்; அன்றிக்கே, க்ஷேத்ராதிபதி
களை 'கோயில்காப்பானே' என்று சொல்லி, வேறே திரு
வாசல்காப்பானைச் சொல்லிற்றாகவுமாம் ஆர் விக்நம்
பண்ணுகிறாரோ வென்று பயப்பட்டு, எல்லார் காலிலும்
விழுகிறார்கள். திருத் தோரணவாசல் காக்குமவன்பக்க
லிலே சென்று, ஆர்த்தத்ராணத்துக்காக தோரணமும்
கொடியும் நட்டுவைத்தாப்போலே, பெண்கள் தடுமாற்றம்
தீர முகம்தருகைக்கன்றோ உன்னை இங்கு வைத்தது.
(மணிக்கதவம் தாள்திறவாய்) என்கிறார்கள். (மணிக்கத
வம்) கதவிலழகு உள்ளுபுகுவாரை வழிபறிக்கும். *2674
பொன்னியலுமாடக்கவாடங்கலந்து புக்கு * ஸ ததந்த:
புத்வாரம் ஸமதீத்ய ஜநாகுலம் ஸ்ரீ. அ. 16-1* ஒரு வண்ணம்
சென்று புக்கு திருவாசல் உள்ளே புகுவாரைப் புகாதபடி
கால்கட்டும்; அவன் புக்காரைப் புறப்படாதபடி கால்கட்டும்.

(ஆயர் சிறுமியரோமுக்கு) 'கோயில் காப்பானே
கொடித்தோன்றும் தோரண வாசல்காப்பானே' என்று



'நம்மை மத்யராத்ரத்திலே வந்து திறக்கவழைக்க நீங்களார்,
பயம் மிக்கிருக்கிறதேசத்திலே' என்ன, பயமென்னென்ன;
காலமும் நல்லடிக்காலமாய், தமப்பனாரும் சக்ரவர்த்தியாய்,
தாங்களும் ஆண்புலிகளாய், ஊரும் திருவயோத்யையாய்
அதுவேயன்றிக்கே, தாங்களும் தீம்பராவது, ஊரிடைச்சேரி
யாவது, அதுக்குமேல் கம்ஸன் சத்ருவாவது, எழும்பூண்
டெல்லாம் அஸுரப்பூண்டாவது, ஆனபின்பு பயம் கெட்டி
ருக்கலாமோவென்ன, 'எங்களுக்கு பயப்படவேணுமோ,
நாங்கள் இடைஜாதியன்றோ' என்ன; சுகசாரணர்கள்
ஸ்ரீ ஸேனையோடே கலந்து புகுந்தாப்போலே, இடையரோ
டே அஸுரர்கள் கலந்து புகுரிலும் தெரியவொண்ணா
தென்ன, அதுவுண்டோ நாங்கள் பெண்களன்றோவென்ன;
சூர்ப்பநகை பெண்பெண்டாட்டியன்றோவென்ன, 'அவள்
ராக்ஷஸி, நாங்கள் இவனுக்கென்வருகிறதோ என்று வயிறு
பிடிக்குமிடையர்க்குப் பிறந்த இடைச்சிகளன்றோ' என்ன,
பூதனைக்குப்பின்பு இடைச்சிகளுக்கன்றோ மிகவும் பயப்பட
வேண்டுவதென்ன, 'நாங்களுமங்ஙனே ஒரு க்ருத்ரிமமறி
யாத கன்யகைகளன்றோ, எங்கள் பருவத்தைப்பாராய்'
என்ன, 'பின்னைப்பருவம் பார்க்கிறோம், வார்த்தையிலே
யறியலாம், நீங்கள் வந்த கார்யத்தைச் சொல்லுங்கோள்'
என்ன, (அறைபறை) நாங்கள் நோன்புக்கு உபகரண
மான பறை வேண்டிவந்தோமென்ன;

அதுவாகில் திருப்பள்ளியுணர்ந்தவாறே விண்ணப்பஞ்
செய்து கேழ்விகொள்ளுகிறோமென்ன, (மாயன்மணிவண்
ணன் நென்னலே வாய்நேர்ந்தான்) அதுவேண்டா, நேற்
றே கேட்டு அவனும் தருகிறோமென்றானென்கிறார்கள்.
(மாயன்) எங்கள் கோஷ்டியிலே தாழநின்று கையைக்
காலைப்பிடித்தபடி. (மணிவண்ணன்) தாழநின்றானாகிலும்
விடவொண்ணாத வடிவே போருமென்கை. (நென்னலே
வாய்நேர்ந்தான்) பூவலரும்போது பிறக்கும்செவ்விபோலே,
வார்த்தையருளிச் செய்யும்போதை அழகு. *வாக்மீ ஸ்ரீமாந்*
ஸ்ரீ. பா. 1-9 என்னக்கடவதிறே. (நென்னலே) திருமுளை
யினன்று நென்னேற்றை. *கையார் சக்கரமிருக்கும்படி
யென்னென்னுமாபோலே. உன்கால் பிடிக்கிற இன்று
போலேயோ? அவன் காலைக்கையைப் பிடிக்கவிருந்த
நேற்றைநாளுமொருநாளே யென்கிறார்கள். (வாய்நேர்ந்
தான்) 'ஓலக்கத்தே ஒருவார்த்தை சொன்னானாகில் இத்தை
மெய்யென்றிருக்கவோ? எங்களுக்கு அந்தரங்கமாகச்
சொல்லவேண்டாவோ' என்ன, *ராமோ த்விர் நாபிபாஷதே*
ஸ்ரீ. அ. 18-30 என்றும்,* அந்ருதம் நோக்த பூர்வம் மே* ஸ்ரீ. கி.

7-22. என்றும், *க்ருஷ்ணே நமே மோகம் வசோ பவேத்* என்றும், சொல்லாதெழிந்தவன்று செய்யலாவதிலே, சொன்ன பின்பு அவன் வார்த்தையிலே பழுதுண்டோ, என்ன ;

(தூயோமாய்வந்தோம்) பத்தெட்டுத்திருமுகம் மறுக்கப்பெற்றுடையோம், எங்கள் பணிக்கு அவனே கடவன். நாங்கள் ஆராயக்கடவோமென்ன ; உனக்கு ஆராயவேண்டும் பயமில்லை. நாங்கள் தூயோமாய் வந்தோமென்கிறார்கள். 'தூய்மை' அவனுடைய ரக்ஷையும் அவன்ப்ரயோஜநமுமொழிய, ஸ்வயத்நமாதல் ஸ்வப்ரயோஜநமாதலின்றிக்கேயிருக்கை. திருவடி, திருவாழிமோதிரத்தையும் தன் வடிவையும் காட்டாதே, தன் மிடற்றோசையைக் காட்டி விச்வஸிப்பித்தாப்போலே தங்களுடைய ஆர்த்தத்வநியைக் காட்டுகிறார்கள். *ப்ரஹ்ருதச்ச மஹாநேஷ: 14, 34* என்ற ஆர்த்த நாதம், *ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட ஸ்ரீ யு. 1-18 என்னப்பண்ணிற்றிறே. பண்டுசொன்ன தூயோமில்வார்த்தையடைய இவ்விடத்துக்காகரம். (வந்தோம்) இங்கு வர்த்திக்கிற உனக்கு அடைவு தெரியாமை இல்லை; அவன் செய்யக்கடவதை நாங்கள் செய்தோமென்கை. 'இப்படி ப்ரமாணமென்' என்று அவன்கேட்க, துயிலெழ பாடுவான்வந்தோம் என்கிறார்கள். உங்களாற்றாமை பறையினளவல்ல, இன்னும் சொல்லுங் கோளென்ன, *உறகலுறகலென்று உணர்ந் திருப்பாரையும் அசிர்க்கும் பெரியாழ்வார் பெண்பிள்ளைகள் ; உன்னையும் அசிர்ப்போம் சிலர்' என்கிறார்கள். பிராட்டி, *ஸ மயா போதித: ஸ்ரீ ஸு. 38-14 என்று அவன் உறங்குகிறபடி கண்டு உகந்தாள். இவர்கள் உணரும்படி காண ஆசைப்படுகிறார்கள். *9 படுத்தபைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்கு *3473 மடியாதின்னே நீதுயில் மேவி மகிழ்ந்ததுதான் *917 அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே* என்னுமவர்கள் பெண்பிள்ளையிறே இவர்கள் ;

ஆகில் விடிந்தவாறே பார்த்துக்கொள்ளுகிறோம் ; இப்போது போங்கோளென்கிறான். (வாயால் முன்னமுன்னம் மாற்றுதேயம்மா) மநஸ்ஸிலே நினைத்தாயாகிலும் வாயாலே நெருப்பைச் சொரியாதே கொள் ; இவர்களுக்கு இவன் வாயதிறேவாணாள். (அம்மா) அவன் வாய்நேர்ந்தாலும், இவன் காட்டித்தாராவிடில் கார்யமாகாதே. *வத்யதாம் ஸ்ரீ யு. 17-29. *என்றவர்தாமே, *அஸ்மாபிஸ்துல்யோ பவது ஸ்ரீ யு. 18-38. *என்னக்கடவதிறே. *தாநஹம் த்விஷத: *கீதா 16-19.* என்றவனே, *ததாமி கீதா. 10-10. *என்றாலும் இவர்களுக்கு வேண்டாவிடில், *நக்ஷமாமி கதாசந என்னுமத்தனை. *பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத ஆ.65.* (கோயில் காப்பானே) *ஏஷ ஸர்ப்தேஷு ஜாகர்தி ஸ்ரீ யு. 107-23. *என்கிறபடியே இவனிசைவதற்கு முன்பு அவனுணர்ந்து இவனை நோக்கும். இவனிசைந்தபின்பு இவனுணர்ந்து அவனை நோக்க, அவனுறங்கும்.



(நீ நேசநிலைக்கதவம் நீக்கு) 'உள்ளிருக்கிறவனே எங்களுக்கு நாதன் ; நாங்கள் த்வாரசேஷியை யொழிய பரசேஷியை யுடையோமல்லோம். நீயன்றோ எங்களுக்கு நிர்வாஹகன், ஆனபின்பு *வாசா தர்மமவாப்நுஹி ஸ்ரீ ஸு. 39-10. * பண்ணாயோ? என்று இவர்கள் அர்த்திக்க ; தாளையுருவி கதவைத்தள்ளிக்கொண்டு புகுருங்கோளென்ன ; அது உன்னிலும் பரிவுடைய கதவு, அதுதான் எங்களால் தள்ளப்போகாது நீயே திறவென்கிறார்கள். (நேசநிலைக்கதவம்) கதவும் நிலையும் செறிந்த செறிவாகவுமாம். கம்ஸன் படைவீட்டில் சேதநாசேதநங்களடைய ப்ரதிகூலமாயிருக்குமாபோலே இங்கும் அடைய அநுகூலங்களாயிருக்கும். *685. படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேன் * என்னுமாபோலே. 16

அம்பரமேதண்ணீரே சோறேஅறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்
கோம்பனார்க்கெல்லாம் கொழுந்தேகுலவிளக்கே
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்
அம்பரமூடறுத் தோங்கிஉலகளந்த
உம்பர்கோமானே! உறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய். 17

பதினேழாம்பாட்டு—கருந்தாளையுருவி திருவாசல்காப்பான், 'நீங்கள் உள்ளே புகுங்கோள்' என்ன, உள்ளே புக்கவாறே பிள்ளைக்குக் காவலாக 'பெண்கள் களவு காண்பர்கள்' என்று வாசலிலே நோக்கிக் கிடக்கிற ஸ்ரீ நந்தகோபரை யெழுப்புகிறார்கள். 'பேரனை அநிருத்தாழ்வானை யகப்பட களவுகாணக் கடவ அவர்கள் ஸாக்ஷாந்மந்மத மந்மதனாய் அழகுக்கு வாய்த்தலையான இவனை விடுவர்களோ' என்று காத்துக்கொண்டு கிடந்தார்.

(அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்) புடவையோடு தண்ணீரோடு சோற்றோடு வாசியற வேண்டுவார்க்கு வேண்டுவற்றை யடையக்கொடுக்குமவனே யென்கிறார்கள். ஏவகாரத்தாலே இதுவேயோ இவன் கற்றதென்னும்படி யிருக்கை. (அறம் செய்யும்) பலாபிஸந்திரஹிதமாக ஆந்ருசம்ஸ்யத்தாலே கொடுக்கை. சக்ரவர்த்தியைப் போலே, *மஹதா தபஸா ராம ஸ்ரீ ஆ. 66-3. *என்னவேண்டு

வதில்லையே. *வைத்தமாநிதி. ‘இவன்’ *எடுத்த பேராளனிறே. ‘எங்கள் தாரகத்ரவ்யத்தையும் தாராய்’ என்கிறார்கள். (எம்பெருமான்) பெண்களுக்கு க்ருஷ்ணனைப் பெற்றுத் தந்த ஸ்வாமியாயுள்ளவனே என்றார்கள். *ஏகைகபலலாபாய ஸர்வலாபாய கேசவ: *என்றும், *3293 உண்ணும் சோறு பருகுநீர்தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான் *என்றும் ஒன்றே எல்லாமென்றிருக்குமவர்களுக்கு அவ்வொன்றையும் தாராய். (நந்தகோபாலா வெழுந்திராய்) ‘நந்தகோபன் குமரன்’ என்று உம்முடைய ஆந்ருசம்ஸ்யத்தைக்கண்டு உம்முடைய பிள்ளையென்றன்றோ நாங்களாசைப்பட்டது *குணைர்தசரதோபம: ஸ்ரீ.அ. 1-9. * பெற்றுத்தந்த நீர், குறையும் நாங்கள் பெறும்படி பாரீரென்கிறார்கள். ஹிதபுத்தி பிதாக்கள்பாடே யுண்டாகையாலே புகுருங்கோளென்றாரிறே.

உணர்ந்து அவரும் அநுமதி பண்ணினபடி தோற்றக் கிடந்தார். அவரை விட்டு உள்ளே புகுந்து அசோதைப் பிராட்டியை யெழுப்புகிறார்கள். (கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே எம்பெருமாட்டி யசோதா யறிவுறாய்). நாங்கள் வருந்தனையுமன்றோ காப்பதென்கை. அசோதைப் பிராட்டியை யெழுப்பி ஸ்ரீநந்தகோபரை யெழுப்பாமலொழிவானென்னென்னில், பிள்ளைமேல் ஸங்கத்தால் அவனுக் கணித்தாகவும் பர்த்ருஸம்ச்லேஷத்துக்காகவும் இரண்டுக்கும் நடுவாக உள்கட்டிலே கிடக்கையாலே பிற்பட அசோதைப் பிராட்டியை யெழுப்புகிறார்கள். (கொம்பனாரித்யாதி) *நாரீணாமுத்தமா வதூ: ஸ்ரீ. பா. 1-27* என்று பெண்களாய் பிறந்தார்க்கெல்லாம் தலையாகப் பிறந்தவளே. கொம்பு அனார்-வஞ்சிக் கொம்பு போன்றவளே. (குலவிளக்கே) பெண்ணாய் பிறந்தார்க் கெல்லாம் த்ருஷ்டியான விளக்கென்கை. இக்குடிக்கு மங்களதீபமென்னவுமாம். (எம்பெருமாட்டி) க்ருஷ்ணனைப் பெற்றுத் தந்து எங்களுக்கு ஸ்வாமியானவளே. (அசோதாய் பெண்களுக்கும் ‘க்ருஷ்ணனுக்கும் சேர்த்தி கண்டு உகக்குமவளன்றோ நீ. *532 அஞ்சவுரப்பாளசோதை’ என்றது பற்றாசாக வன்றோ நாங்கள் வந்தது. (அறிவுறாய்) நீ அறிந்தவன்று எங்களுக்கு ஒரு குறையுண்டோ வென்கிறார்கள். இவர்கள் வந்தது தங்களாற்றாமையிறே.

‘உள்ளே புகுருங்கோள்; என்று அவளநுமதி பண்ண, அவள் ஸம்மாநத்தோட உள்ளேபுக்கு க்ருஷ்ணனை எழுப்புகிறார்கள். (அம்பர மூடறுத் தோங்கியுலகளந்த உம்பர் கோமானே யுறங்காதெழுந்திராய்) என்கிறார்கள். (உம்



பர் கோமானே) அச்செயலாலே தேவர்களை யெழுதிக் கொண்டபடி. நித்யஸூரிகளை யென்னவுமாம். ‘ஐயரு மாய்ச்சியும் சொல்ல வேண்டாவோ’ என்ன ‘பரதந்த்ரன் என்று கண்ணழிவு சொல்ல வொண்ணாது. அவர்களை அநுமதி கொண்டோம் எழுந்திராய்’ என்கிறார்கள். அநந்ய ப்ரயோஜநராய் அணையவந்தார்க்கு முகம் கொடுக்கலாகாதோ? ஆண்களுமாய் ப்ரயோஜநாந்தர பரருமாய் இருப்பார்க்கோ கார்யம் செய்யலாவது; தேவர்களுக்குக் குடியிருப்பு கொடுத்த நீர், எங்கள் குடியிருப்பை அழிக்கவோ பார்த்தது. உறங்குவாரைத் தழுவக்கடவ உனக்கு உணர்ந்து வந்தவர்களைத் தழுவலாகாதோ? மண்ணைத் தழுவுவது பெண்ணைத் தழுவலாகாதோ?

அண்ணரை எழுப்பிற்றிலர்களோ வென்ன, ‘நம்பி மூத்த பிரானை எழுப்ப மறந்தோம்; இதொரு தப்புப் பிறந்தது’ என்று நம்பிமூத்தபிரானை யெழுப்புகிறார்கள். (செம்பொற்கழலடிச்செல்வா பலதேவா உம்பியும் நீயுமுறங்கேல்) பொற்கால் பொலியவிட்டுப்பிறந்த சீமானே யெழுந்திரா யென்கிறார்கள். ‘பலதேவன்’ என்று திருநாமம். *பலேகதாமநி ஆ. 39*. அவன் பாரதந்தர்யத்தாலே கட்டிக் கொண்டு கிடக்கும். இவன் ஆற்றாமையாலே கட்டிக் கொண்டு கிடக்குமென்கை. *ஸந்தேசைஸ்ஸாமமதுரை: ப்ரேமகர்பைரகர்விதை:, ராமேணாச்வாஸிதா கோப்ய: ஹரிணா ஹ்ருதசேதஸ:. வி.பு. 5-24-20. * என்கிறபடியே எங்களையும் அவனையும் பொருந்தவிடுமவனல்லையோ வென்கிறார்கள். வெறும் படுக்கையைக் கட்டுக் கொண்டு கிடக்கவமையுமோ! திருவநந்தாழ்வானிறே தமையனாய்ப் பிறந்தான். *2134 சென்றால்குடையாம். உன்படுக்கையை நீ விடாதாப்போலே, எங்கள் படுக்கையும் எங்களுக்குத் தாராய் என்கிறார்கள். 17

††உந்துமதகளிற்றன் ஓடாததோள்வலியன்
நந்தகோபாலன்மருமகளே! நப்பின்னாய்!
கந்தம்கமழும்குழலீ! கடை திறவாய்
வந்தெங்கும் கோழிஅழைத்தனகாண், மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள் கூவினகாண்
பந்தார்விரலி! உன்மைத்துனன் பேர்பாட
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். 18

பதினெட்டாம் பாட்டு:—பெண்பிள்ளைகளெல்லாரையுமெழுப்பி திருவாசல் முதலிகளையும் நந்தகோபருள்ளிட்டாரையுமெழுப்பினார்கள். இன்னோர்த்தி யெல்லாம் பிராட்

டியை யெழுப்பி அவனோடே கூட அவளையும் முன்னிட்டு எம்பெருமானைப் பற்றுவிட்டால் பலவ்யாப்த மாகமாட்டாமையாலே, இனி மூன்று பாட்டாலே நப்பின்னைப் பிராட்டியை யெழுப்பி, அவ்வழியாலே எம்பெருமானைப் பற்றுகிறது. பிராட்டியை யொழிந்தால் பலவ்யாப்த மாகாதோ வென்னில், ஆகாது. எங்ஙனே யென்னில், இளையபெருமாளை நில்லுமென்ன, பிராட்டியைப் பற்றி அவன் ஸங்கல்பத்தை யழித்துப் பெருமாளோடு கூடப் போனார். காகம், அபராதத்தி னெல்லையிலே நின்று வைத்து இவள் ஸந்நிதியுண்டாகையாலே ப்ரபந்நர் பெறும் பேற்றைப் பெற்றது. ராவணனுக்கு அத்தனை அபராதமின்றி யிருக்க பிராட்டி ஸந்நிதி யில்லாமையாலே தலையறுப்புண்டு போனான். பிராட்டி ராவணனைக் குறித்தருளிச் செய்த ஹிதம்—சிம்சுபாவ்ருக்ஷத்திலே மறைந்திருந்த திருவடிக்கும் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கும், அவன் பரிகரத்துக்கு முடலாய் பிராட்டியை முன்னிட்டு பெருமாளைப் பற்றுகைக்கு உடலாயிற்று. எம்பெருமான் அர்ஜுநனை நோக்கியருளிச்செய்த ஹிதம் நம்ஆழ்வார்கள் கொண்டுபோய் விட்டாப் போலே. திருவடி பிராட்டியைக் காண்பதற்கு முன்பு *வாநரோஹம்* ஸ்ரீ.ஸு. 36-2 என்றான். பிராட்டியைத் திருவடி தொழுதவநந்தரம் *தாஸோஹம் ஸ்ரீ.ஸு. 42-34.* என்றான்.

மற்றும் பலபர்யந்தமான விடங்களெல்லா மாராய்ந்தால் இப்படியே யாயிருக்கும் எம்பெருமானார் கத்யத்திலே தமக்கு த்வய நிஷ்டை உண்டாகைக்காக முதலிலே பிராட்டியைச் சரணம்புக்கார். இவர்களும் ஒரு பாட்டாலே அவள்தனக்கு அடிமை புக்கு, ஒரு பாட்டாலே உபாயத்துக்கு உடலாக அவனைப் பற்றி ஒரு பாட்டாலே உபேயத்துக்கு உடலாக அவளையும் அவனையும், பற்றுகிறார்கள். * 2851 மாசதிரிது பெற்று நம்முடைய வாழ்வு வாய்க்கின்றவா * என்னக்கடவதிறே. தன்னுடைய கர்மாத்யுபாயங்களாலே எம்பெருமானைப் பெறப்பார்க்கை இளிம்பு. அவற்றைப் பொகட்டு எம்பெருமானுடைய க்ருபையாலே எம்பெருமானைப் பெறப் புகுகிறது சதிர். அந்த க்ருபைக்கு மடியான பிராட்டி ஸம்பந்தங் கொண்டு அவனைப் பெறவிருக்கை மாசதிர். * 2856. எனக்கே யருள்கள் செய்ய விதி சூழ்ந்ததால் * என்றார். அதுக்கடியாக 'மாதவன்' என்றார். உபாயத்திலே வந்தவாறே உக்திமாத்திரமே அமைந்தது. பலத்தில் வந்தவாறே ஸம்பந்த ஸம்பந்திகளும் வாழ்ந்து போயிற்று என்றார். அவருடைய பெண்பிள்ளையன்றே முறை தப்பாமல் எம்பெருமானைப் பற்றுகிறாள். எம்பெரு



மானை முறைதப்பிப் பற்றின சூர்ப்பணகை அந்தரப்பட்டாள். பிராட்டியை முறைதப்பிப் பற்றின ராவணன் அந்தரப்பட்டான். இருவரையும் முறையாலே பற்றின ஸ்ரீ விபீஷணாழ்வான் வாழ்ந்துபோனான்.

(உந்து மதகளிற்றன்) மத்தகஜம்போலே யிருந்துள்ள பலத்தை யுடையவன். மதமுதிதமான களிற்றை யுடையவனென்னுமாம். உந்துகை-தள்ளுகையாய் ஊர்ப்படுகை. மிடுக்கையும் மதத்தையும் உந்துகளி றென்னவுமாம். களிறுண்டோ இவர்க்கென்னில், ஸ்ரீவஸுதேவரும் ஸ்ரீநந்தகோபரும் ஒரு மிடறாயிருக்கையாலே அங்குள்ளது மொன்றாய்ப் மரிமாறும். * 556. வாரணமாயிரம் சூழவலமித்யாதி. திருவாய்ப்பாடியில் பசுக்களும் ஆனைகளும் ஒக்கத்திரியுமத்தனை. தத்தபுத்திரனுக்கு இரண்டிடத்திலும் கூறுண்டாகக்கடவதன்றே. ஆகையாலேயன்றே பிள்ளைகள் போய் ஆனைகளோடே போருற்றது. *குணைர்தசரதோபம: ஸ்ரீ.அ 1-9* என்றெல்லாவற்றுக்கும் அவரையொப்பாகச் சொல்ல வேண்டுகை. (ஓடாத தோள்வலியன்) ப்ரதிபக்ஷம் காணப் பணைக்கும் தோள்வலியையுடையவன். * யுத்தேசாப்யபலாயநம். கீதா 18-43 * என்கிறபடியே எதிரிகளைக் கண்டு பிற்காலியாதே கொல்லவல்ல மிடுக்கு. இப்போது இவர் மிடுக்குச் சொல்லுகிறது தங்கள் பயம் கெடுகைக்காக. கம்ஸனுக்குக் குடிமக்களாயிருந்தே அவனுக்கஞ்சார்கள். பசு மேய்க்கிற கோலாலே தகர்க்கிலும் தகர்த்து விடுவார்கள். * 3264 அங்கோராய்க்குலம் * என்று அஞ்சினான் புகலிடம். ஸ்ரீமதுரையை நினைத்தஞ்சினார்க்கு அச்சம் கெடுக்குமூர். (தோள்வலியன்) * நபிபேதி குதச்சந * என்று நம்முடைய அநீதியை நினைத்தால் எம்பெருமான் தோளை நினைத்து பயம் கெடுமாபோலே க்ருஷ்ணனுடைய தீம்புகளை நினைத்தால் அவருடைய தோளை நினைத்து பயம் கெடலாயிருக்கை. நம்முடைய தனத்துக்குக் காவலுண்டென்கிறார்கள்.

(நந்தகோபாலன் மருமகளே) * ஸ்நுஷா தசரதஸ்யாஹம் சத்ருஸைந்யப்ரதாபிந: ஸ்ரீ.ஸு. 33-14 * என்று பிராட்டி அருளிச்செய்தாப்போலே ஸ்ரீ கும்பர்மகளென்னுமதிலும் மாமனாரையிட்டுச் சொல்லுகை அவளுக்கும் ப்ரியமாயிருக்கையாலே மருமகளென்று சொல்லுகிறார்கள். இங்கே மைத்துனமையாடி வளர்ந்து வாழ்க்கைப்படுகையாலே ஸ்ரீநந்தகோபர் ஸம்பந்தமல்லது இன்னான் மகளென்றால் அறியார்கள். இப்படி சொன்னவாறே திருவாய்ப்பாடியில் கம்புக்கற்றையு மகப்பட ஸ்ரீநந்தகோபர் மருமகளல்லாதா

ருண்டோ? நமக்கென்னென்று பேசாதேகிடந்தாள். (நப்பின்னாய்) என்று விசேஷிக்கிறார்கள்.

(கந்தங்கமழுங் குழலீ) முன்பு க்ரமமறியாதே அவனை யெழுப்பினமை தாழ்க்கைக்கடி யென்று முறையாலே எழுப்புகிறார்கள். என்னை நீங்கள் சொல்லுகிற தென்னென்ன, எங்களையும் க்ருஷ்ணனையும் கூட்டிவிடாயென்ன, இங்கவனுண்டோவென்ன பூநாறாநின்றது. வ்யாவ்ருத்த பரிமளமும் ஸமுதாய பரிமளமும் அறியோமோ வென்ன, அவன் * ஸர்வகந்தஸ் ஸர்வரஸ: * என்று பூவுக்கு நாற்றம் கொடுக்குமாபோலே அவனுக்கு நாற்றங்கொடுக்கவல்ல குழல் இவளதென்கை. உன் பரிமள போகத்திலே அவனழுந்திகிடக்கும். அநுபவிக்கைக்கு நாங்கள் வேண்டாவோ? (கடைதிறவாய்) கிண்ணகவெள்ளத்தைக் கரைகட்டினாப்போலே யடைத்துக்கொண்டு கிடவாதே, எல்லாரும் அந்வயிக்கும்படி வெட்டிவிடாய். இவர்கள் அவளுக்கு அவயவத்தோபாதி யாகையாலும், ஸ்ரக்சந்தநாதிகளோபாதி யாகையாலும், போகோபகரணமாகையாலும், அவர்களோடே புஜிக்கும்போது தன் திருமுலைத் தடத்தாலே நெருக்கினவோபாதி அவளுக்கு ப்ரியமாயிருக்கையாலும் அவளை யெழுப்புகிறார்கள். * 3697. உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க வின்புறுதும் * என்னக்கடவதிறே.

மத்யராத்ரத்திலே வந்து எழுப்புகிறதென், போது விடியவேண்டாவோ; போதுவிடிந்ததென்ன, விடிந்தமைக்கடையாளம் சொல்லுங்கோளென்ன, கோழிகூவா நின்றதென்ன, அது சாமக்கோழிகாணென்றாள். என்ன வொண்ணாது (வந்தெங்கும் கோழியழைத்தனகாண்) என்கிறார்கள். உணர்ந்தவையெல்லாம் கூடக்கூப்பிட பின்னையுறங்கப் புகும். அதடையாளமாகமாட்டாது; வேறடையாள முண்டாகில் சொல்லுங்கோளென்று பேசாதேகிடந்தாள். (மாதவிப் பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்) இப் பூம்படுக்கையில் நின்றும் இவையுணரும்போது விடிந்ததாகவேண்டாவோ? 'உன்னுடைய ஸ்பர்சமும் நோக்கும் தாரகமாயிருக்கிற குயில்கள், விடிந்தபின்பும் உன்னைக் காணப் பெறாமையாலே நாக்கொட்டிப்பலகால் கூப்பிட்டு நின்றனகாண்' என்கிறார்கள். அவையும் மேலேகூவ நாங்கள் கீழே கூவாநின்றோம். (மாதவிப்பந்தல்மேல்) ஸுக ஸ்பர்சத்தாலே * நோபஜநம் ஸ்மரந் * என்கிற படுக்கையிலே உறங்குகிறவை.



(பந்தார் விரலி) பந்தும்கையும் பொருந்தினபடி. க்ருஷ்ணனை ஒருகையாலும் பந்தை ஒருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்க, செண்டை ஒருகையாலும் அவனை ஒருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்கும். அந்தப்பந்து நாமாகில் எங்களைக் கைவிடவேண்டாவென்கிறார்கள். இவன் இவளுக்கு போகோபகரணம். பந்து-லீலோபகரணம். ஒருகையிலே நாரமாயிற்று. ஒருகையிலே அயநமாயிற்று. ஒருகையிலே விபூதியாயிற்று ஒருகையிலே விபூதி மானாயிற்று. இப்போது பந்துப்ரஸங்கமென்னென்ன, க்ருஷ்ணனோடே பந்தடித்து அவனைத்தோற்பித்த கர்வமோ வாய்திறவாதொழுகிற தென்னுமத்தாலே. திறந்தால் நீங்கள் செய்யக்கடவதென்னென்ன; (உன்மைத்துனன் பேர்பாட) நீயுமவனும் மைத்துனமை கொண்டாடி ஒன்றுக் கொன்பது சொல்லி யிட்டீடு கொள்ளும்போது மத்யஸ்த்தராய் நில்லாதே உன்பக்ஷத்திலே நின்று அவன்தோல்விக்குக்கவி பாடக்கடவோமென்கிறார்கள். இருவருமொன்றாய்ச்செல்லுமன்று செல்லவும், பிரிந்தவன்றும், தாய் பக்ஷத்திலே ப்ரஜைகள் நிற்பது. * அஸ்மிந் மயா ஸார்த்தம் ஸ்ரீ. ஆ. 63-12. * என்கிறபடியே இளையபெருமாள் பிராட்டி பக்ஷத்திலே நின்றாப்போலே (பேர்பாட) * 1925. நாம்மபலவுமுடை நாரணநம்பி* என்று அவனுக்குள்ளன வெல்லாம் சொல்லிக் கொடுக்கைக்கு.

(செந்தாமரைக்கையால்) அவனுமாசைப்படும் கை. அவனுடைய தாமரைக் கையிறே. * ததௌபஹூ* எங்களை மாசுச: என்னும் கை. * பவேயம் சரணம் ஹி வ: ஸ்ரீ. ஸு. 58-59 என்னும் கை. நீங்கள் பண்ணுகிற பாபங்களுக்கு நீங்களஞ்ச வேண்டா. நானுளனென்கிறது பெருமாளுடைய அஞ்சலென்ற கை. ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்துக்கு நீங்களஞ்சவேண்டா வென்கிறது, பெரியபிராட்டியாரஞ்ச லென்ற கை. (சீரார்வளையொலிப்ப) வளையையேறக்கடுக்கித் திறக்கப்புக்காள். அங்ஙனொண்ணாது. நாங்களும் அவனும் த்வநி கேட்டுவாழவேணும். *808 சங்குதங்கு முன்கை இவளது. * 2075 இருகையில்சங்கிவைநில்லாவிறே இவர்களுக்கு. கலியர் சோற்றை வர்ணிக்குமாபோலே வர்ணிக்கிறார்கள். *சூடகமே தோள்வளையேயென்று அவர்கள் பூட்டினவிறே இவர்களுக்குள்ளது. எம்பெருமானார் விசேஷித்துகந்த பாட்டு.

(வந்து திறவாய்) யந்த்ரத்தாலே கண்வளர்ந்தருளின படியே கிடந்து திறக்கப்புக்காள்; அதுவொண்ணாது அவனும் நாங்களும் நடையழகு கண்டு வாழும்படியாக வேணும்.

(மகிழ்ந்து) பேறு உன்னதாகவேணும். தர்மத்துக்குத் திறக்கவொண்ணாது. வழியே பிடித்து *பவேயம் சரணம் ஹிவ: ஸ்ரீ.ஸு. 58-89. என்னவேணும். 18

சத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி
கொத்தலர்பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங்கண்ணினாய்! நீஉன்மணாளனை
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். 19

பத்தொன்பதாம் பாட்டு:— இவள் திறக்கப்புக நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாக வொண்ணாது; இவளைத் திறக்க வொட்டாதே மல்கட்டாகக்கட்டிப் படுக்கையிலே விழவிட்டுக்கட்டிக் கொண்டுகிடக்க மறுமாற்றம் கேளாமையாலே பின்னையும் க்ருஷ்ணனை உணர்த்துகைக்காக நீ திறக்கவேணு மென்கிறார்கள். இத்தால் ஆச்ரிதர்க்கு மாறிமாறிப்பரிகைக்கு இருவருமுண்டென்கை. *413 என்னடியாரது செய்யார்*என்னுமவன். இவள் *நகச்சிந் நாபராத்யதி *ஸ்ரீ. யு. 116-44 என்னும். அவர்கள் உள்ளு பிறந்த வ்யாபாரம் அறிந்தபடி யெங்ஙனேயென்னில்; ஸகோத்ரிகளாகையாலே அறிவர்களிறே.

(குத்துவிளக் கெரிய) நாம் புறம்பே பனியிலே தரையிலே நிற்க ஊராரிசைவும் வேண்டாதே, கீழ்வானம் வெள்ளென்றதென்கிறபயமுமின்றிக்கே இருட்டுத் தேடவும்வேண்டாதே, பகலையும் இரவாக்கிக்கொண்டு விளக்கெரிய படுக்கையிலே கிடக்கப் பெறுவதே? இவள்தன்னை விளக்காகக் கொண்டு ப்ரகாசிப்பதொரு நிலைவிளக்குண்டாவதென்னுமாம். அப்போது எம்பெருமானுக்குங்கூட அவள் விளக்காயிருக்கிறபடி. *அதீவ ராமச் சுசுபே* (கோட்டுக்கால்) குவலயாபீடத்தைக் கொன்று அதின் கொம்பாலே செய்த கட்டில். வீரபத்நியாகையாலே மற்றையவற்றில் கண்ணுறங்காது. மாணிக்கத்தாலே செய்யிலும் பள்ளிக்கட்டிலென்னுமத்தனையிறே. *நாஹாரயதி ஸந்த்ராஸம் ஸ்ரீ.அ. 60-20 *ஆனையுள் விட்டன காட்டிலே கண்டால் முகவிகாஸம் பிறக்குமத்தனை. ஸ்த்ரீத்வப்ரயுக்தமான அச்சமில்லை. அதுக்கடிதனக்கென்னத்தோள் படைக்கையாலே. இத்தால் *பதிம் விச்வஸ்ய இத்யாதியில் ஓதிக்கிடக்கிறபடியே அவனுக்கும் தங்களுக்குமுண்டான முறையை உணர்ந்திருப்பார்க்கு ஸ்வரூபப்ரயுக்தமான பயமில்லை யென்கை. வீரபத்நி



களுக்குத் தோளில் சரசரப்புக்காணவிடில் தங்களோட்டைப்பெண்களைத் தழுவினத்தோடொக்கும். *ஜ்யாகிண கர்கசை: ஆ. 33. *உபதாய புஜம் தஸ்ய லோகநாதஸ்ய ஸத்க்ருதம் ஸ்ரீ. ஸு. 21-16* *பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா ஸ்ரீ. அ. 60-20 உயிரோடே பிடித்துக்கொம்பை வாங்கும் வீரனுடைய பத்நியிறே. வீரபத்நிகள்படி ப்ரங்கர்படி. *ஆர்த்தோ வா யதிவா த்ருப்த: ஸ்ரீ. யு. 18-28 என்னும்போது அவன்பலமே உபாயமாகவேண்டாவோ? புத்திபூர்வகமாகப்பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு அபுத்திபூர்வமாகப்பண்ணின ப்ரபத்தி ப்ராயச்சித்தமாம்போது சரண்யன் நீர்மையே பலிக்கிறதத்தனை. பலத்தோடே ஸந்திப்பிக்கு மதன்றோ உபாயமாவது. அங்ஙனன்றேயாகில் ப்ரத்திவேண்டுவானென்னென்னில்; சைதந்யகார்யம் வேண்டுகையாலே. ப்ரபந்நனுக்கும் தத்ஸ்வீகாராதிகளடைய உபாயமாக வேணுமோ? அங்ஙனன்றேயாகில் இவன்தன்னுடைய ஸத்தை உபாயமாகவேணுமே? ஸர்வஸ்வதாநமும் தூற்றிலே நெருப்பிடுகையும் ஒத்தாப்போலே இங்கும், *ஆர்த்தோ வா யதிவா த்ருப்த: என்கிறது. கட்டில் - ஜாதிப்பேச்சு.

(மெத்தென்ற) நாங்கள் ஆர்த்தைகளாய் வந்துகிடக்க படுக்கையில் உள்மானம் புறமானம் கொண்டாடி கண்ணுறங்குவதேயென்கிறார்கள். இவர்களுக்கு *3648 மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியிறே. அவளுக்கு நெருப்புநீராம் ஔஷதமுண்டிறே. (மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி) பஞ்சவிதமான சயநத்தின் மேலேறி அதாவது - உஷ்ணபரிஹாரமும், சீதபரிஹாரமும், தர்சநீயமாகையும், மெத்தென்றிருக்கையும், பரம்பியிருக்கையும். அஞ்சுருவிட்டுப்பண்ணின படுக்கையென்னுமாம். அழகு, குளிர்ச்சி, மார்தவம், பரிமளம், தாவள்யம். பஞ்சாலே செய்தவென்னுமாம். (மேலேறி) பாதேநாத்யாரோஹதி*என்று நாங்கள் மிதித்தேறினாலன்றோ நீ அப்படுக்கையை யேறுவதென்கை. அங்கேறினால் அவன், 'கோஸி' என்னில் இவன், *அஹம் ப்ரஹ்மாஸ்மி என்னக்கடவன். ப்ராஹ்மம் நானென்னப் போருமோ வென்னில் *பரவாநஸ்மி * ஸ்ரீ. ஆ. 15-7 என்னுமாபோலே ப்ரகாரமான ப்ரஹ்மமென்கை. *ரமமாணா வநே த்ரய: ஸ்ரீ. பா. 1-31* என்று ஆசைப்படுகிறார்கள். *யஸ்ய ஸ்ரீருபர்ஹணம் * என்று பர்யங்கவித்யையிலே சொல்லுகிறபடியே குறையற்றது. இனி மிதித்தேறுவார் குறை.

(கொத்தலர் பூங்குழல்நப்பின்னை) இவளோட்டை ஸ்பர்சத்தாலே கொத்துக் கொத்தாக அலருகிற பூவையும் குழ

லையுமுடைய நப்பின்னைப் பிராட்டி. (கொத்தலர் பூங்குழல்) பெரிய திருநாளாய்ச் சொல்லாநிற்கக் குறி யழியாதிரா திறே. ஒரு மஹாபாரதத்திலே அலருகை. காலம் அலர்த்து மாபோலே அவனுடைய ஸ்பர்சத்தாலே அலருகையென்ன வுமாம். இங்குத்தைக்குத்திருப் பூமண்டபம் செய்வானும் தானேயிறே. * மலரிட்டு நாமுடியோம் என்றத்தை மறந் தாயோ ? இழவுசொல்லும்போது தங்களோடே கூட்டுவர் கள். பேறு சொல்லும்போது அவனோடு கூட்டுவர்கள். அவ ளுக்கிரண்டு தலையையும் விடவொண்ணாது. (கொத்தலர் பூங்குழல்) * 3767 வாசம்செய்பூங்குழலாள் என்னுமா போலே.

(கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா) கொங் கையைத் தன்மேலே வைத்துக்கிடந்த வென்னுதல், கொங் கைமேலே தன்னைவைத்துக்கிடந்த வென்னுதல். *நசாஸ்த் ரம் நைவச க்ரம: காம. ஸூ. *பர்யாயேண ப்ரஸுப்தச்ச ஸ்ரீ. ஸு. 38-21. *2284. மலராள் தனத்துள்ளான்* மலைப்பார்சவத் தைப்பற்றி ஜீவிப்பாரைப்போலே. (மலர்மார்பா) அவ ளுக்கு ஜீவநம். த்வந்த்வம் பரஸ்பராச்ரயம் (மலர்மார்பா) திருமுலைத் தடங்களுறுத்துகையாலே அகன்றிருந்துள்ள மார்பு. அப்போது *ஸதைகரூபரூபாய வி.பு. 1-2-1. * என்ப துக்குக் குற்றமன்றோ வென்னில், ஹேயகுணங்களில்லை யென்கை. இது கல்யாணகுணங்களிலே புகும். (வாய்திற வாய்) *ஆர்த்தோவா யதிவா த்ருப்த: * என்று சொல்லிவைத் துப் பேசாதேகிடக்கு மத்தனையோ ? அவன் ஊமத்தங் காய் தின்று கிடக்க இவர்கள் ஆரை யெழுப்புகிறது ? (வாய் திறவாய்) இருவரும் கூடினபின்பு த்வயத்தில் உத்தரார்த் தம்போலே அநுபவிக்கப் புகுருங்கோளென்னு மித்தனை. நம்மைப் புறப்படாயென்னில் ராவணனைப்போலே யாவீர் கள். *3335. அலர்மேல் மங்கையுறை மார்பா*

அங்கொன்றும் காணாமையாலே (மைத்தடங் கண்ணி னாய்) என்கிறார்கள். இவன் வாய் திறக்கப்புக்கவாறே, 'இவர்கள் நம்மையொழிய இவனை யெழுப்புவதே' என்று அவனைக் கண்ணாலே 'வாய்வாய்' என்ன, பேசாதே கிடந் தான். * ஆக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா * நாமாரேனையுமின் னதாகிறதென். நம்பரிகரம் நமக்கு உதவுகிறதில்லை யென் கிறார்கள். இவள் விலக்கவேணுமோ? இக்கண்ணுண்டாக வமையாதோ? இக்கடலைக் கரைகண்டாலிறே நம் அநீ தியை அவன் பார்ப்பது. * 3003. அல்லிமலர் மகள் போக மயக்குக் களாகியும் நிற்குமம்மான் * *1738. மணநோக்க முண்டான். *நஜீவேயம் க்ஷணமபி ஸ்ரீ. ஸு. 67-10. * என்னப்



பண்ணுமவையிறே. 'மையிட்டெழுதோம்' என்றவர்களை யும் உன்படி யாக்க வேண்டாவோ? உன்னாலே அவனைப் பெறுகை தவிர்ந்து மற்றைப்படி செய்கையாய்த்து. (உன் மணாளனை) கோபீஜநவல்லப னென்கை. * லோக பர்த்தாரம் ஸ்ரீ. ஸு. 38-56 * என்கை தவிர்ந்து உனக்கு விலையும் ஒத்தியும் செல்லும்படியிருக்கிற இருப்பெல்லாம் எங்களுக்கு உடலென்றிருந்தோம். இனி உனக்கே சேஷ மென்றிருக்கிறோம்; பண்டு இருவரையும் தங்கள் ஸ்வம் என்றிருக்கையாலே அவனுடைய நீயும் உன்னுடைய அவனு மென்றிருந்தோம். இனி உன்னுடைய மணாளன் என்று கிலாய்க்கிறார்கள்.

(எத்தனை போதும் துயிலெழ வொட்டாய் காண்) கட்டினகை நெகிழ்க்கில் பிழைக்க மாட்டாய், புணர்ச்சிக் காகப் பிரியவும் பயப்படுவுதி. (எத்தனையேனும் பிரிவாற்ற கில்லாயால்) * அகலகில்லேனிறையும் என்று கிடவாநின் றாய், உனக்காகவன்றோ அவன் புறப்படமாட்டாதொழி கிறது, பிரியில் நீ பிழையாய், உன்னை யிழக்கவொண்ணா தென்று.

(தத்துவம்) ஸத்யம் - அன்று. (தகவன்று) தர்ம மன்று எங்களாற்றாமையாலே சொல்லுகிறோமன்று; மெய்யே தர்மமன்று (தத்துவமன்று) ஸ்வரூபமன்று. உன் ஸ்வரூபம் நீர்மையன்று இனி அவனில் உனக்கு வாசியில்லை யென்றிருக்கிறோம். * பாபாநாம் ஸ்ரீ.யு. 116-47 என்றவிடம் பொய்யென்கிறார்கள். *த்விதா பஜ்யேயம் ஸ்ரீ.யு. 36-11. * என் றத்தோடு, * சரணம் கத: ஸ்ரீ. ஸு. 38-33. * என்றத்தோடு வாசியில்லை. இவள் ஸந்நிதியுண்டானால் பெருகைக்கு கபோ தியில் கெட்ட பிராட்டியுண்டோ வென்றிருந்தார்கள். 19

முப்பத்துமூவர் அமரர்க்குமுன்சென்று
கப்பம்தவிர்க்கும்கலியே !துயிலெழாய்
செப்பமுடையாய் ! திறலுடையாய் !, செற்றார்க்கு
வெப்பம்கொடுக்கும் விமலா ! துயிலெழாய்
செப்பன்னமென்முலைச் செவ்வாய்சிறுமருங்குல்
நப்பின்னைநங்காய் ! திருவே ! துயிலெழாய்
உக்கமும்தட்டொளியும் தந்துன்மணாளனை
இப்போதேஎம்மை நீராட் டேலோரெம்பாவாய். 20

இருபதாம் பாட்டு :—அங்கு சொன்னதெல்லாம் சொல்லி இவனைப்பற்றி யெழுப்பி அவன் உணராவிட்ட வாறே, அவன் தனக்கு உரியனோ? அவனுக்கும் எங்களுக்கு மடியான நீ எங்களை நீராட்டுவீயென்று நப்பின்னைப்பிராட் டியோடேகூட அநுவர்த்திக்கிறார்கள்.

(முப்பத்து மூவர்) ரக்ஷிக்கைக்கு ஸங்க்யாநியதி யுண்டோ ? அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுமாய் அபலைகளுமாய் அநந்ய ப்ரயோஜனைகளுமானலாகாதோ வென்கிறார்கள். (அமரர்க்கு) கொன்றாலும் சாவாதார்க்கோ உதவலாவது; உன் நோக்குப்பெறாவிடில் சாம் எங்களுக்கு உதவலாகாதோ ? (முன்) நோவுபடாதார்க்கோ உதவலாவது ; நோவுபட்டார்க்கு உதவலாகாதோ ? (சென்று) உன்னுடைய முறைமையிருக்கிறபடி யென். (சென்று) நீயே சென்று செய்திறே வருவது ; யாம் வந்தோம். உன் வாசலிலே வந்தார்க்கு உதவலாகாதோ வென்கை. நாங்கள் வரவிருக்கை குற்றமோவென்கிறார்கள். (கப்பம்) *தேவா: ஸ்வர்க்கம் பரித்யஜ்ய வி.பு. 1-17-5*. கம்பம் வலித்து கப்பமென்றாய் - நடுக்கம். அத்தைத்தவிர்க்குமென்றபடி. அதவா, கப்பம் தவிர்க்கையாவது - இறைதவிர்க்கையாகையென்னவுமாம். கூசி நடுங்கி எங்களை நடுங்கப்பண்ணுதே கொள்ளாய். துக்கநிவ்ருத்தியை ஆசைப்பட்டார்க்கோ உதவலாவது. நீ உணரும்படிகாண வாசைப்பட்டார்க்கு உதவலாகாதோ ? (கலியே) மிடுக்குடையவனே ! அபலைகளுக்கு பலவான் தேட்டமாமிறே (துயிலெழாய்) எங்களுக்கு ஜீவனமும் குடியிருப்பும் நீ உணரும்படிகாண்கை.

(செப்பமுடையாய்) ஆச்ரிதரோடு செவ்வையழியாமே நிற்கும் ஆர்ஜவகுணம் ; எங்களுக்கு இங்ஙனே செவ்வையாயிருக்கவேண்டாவோ ? (செப்பம்) ரக்ஷையென்னுமாம். (திறலுடையாய்) அபலைகளுக்கு எங்ஙனே உதவிற்று உன் பலம். பராபிபவநஸாமர்த்த்ய மென்னுமாம். எங்களுக் கணுக வொண்ணுதபடியாயிற்றே ' என்னுமாம். (செப்பமுடையாய் திறலுடையாய்) பாண்டவர்களுக்கு செவ்வியனாய், துர்யோதநாதிகளுக்கு அநபிபவநீயனானவனே ; (செற்றார்க்கு வெப்பம்கொடுக்கும் விமலா) ஆச்ரிதவிரோதிகளைப் போக்கி நெடுங்காலம் தேடின குணமெல்லாம் அழிக்கப்புகுகிறானென்கை. (வெப்பம்) அநுகூலர்பாடேயாய்த்தோ ? (விமலா) *2840. செய்குந்தா வருந்தீமை யுன்னடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா" (துயிலெழாய்) எங்களுக்கு அம்பெய்யவேண்டா ; எழுந்திருந்துநோக்காய்.

அங்குகிடையாதொழிய நப்பின்னைப்பிராட்டியை யெழுப்புகிறார்கள். (செப்பென்னமென்முலை) இவன்தான் முகம் கொடாமைக்கு ஹேது இவளென்கை ; இவள் ஸந்நிவேசம் என்று. *2284. மலராள்தனத்துள்ளான். அவன் ஜீவநம் கிடக்குமிடம். நிதியிட்டுவைக்கும் செப்பு. விரஹஸஹமின்றிக்கே யிருக்கையாலே 'மென்முலை' என்கிறது. 'சிறிய



சிங்கம்' என்கையாலே இச்சிங்கம் வர்த்திக்கும் மலைத்தாழ்வரை. (செவ்வாய்) அவனுடைய போக்யம். அங்குள்ள கனியை நுகருமாபோலே. (சிறுமருங்குல்) மலையின் நுனியிலிருப்பார் 'விழுகிறோமோ விழுகிறோமோ' என்று பயப்படுமாபோலே இம்முலையிலே புஜிக்கிறவனுக்கு பயஸ்தானமாயிருக்கை. மேலேயும் கீழேயும்கொண்டு இவையுண்டென்றறியுமித்தனை. (நப்பின்னை நங்காய்) அநுக்தஸௌந்தர்ய ஸமுச்சயம். (செப்பித்யாதி) அவனகப்படும் துறைகள் சுழிகள். (திருவே) *ஒசிந்தவொண்மலராள். ஸம்ச்லேஷத்தால் வந்த துவட்சிக்கு அவளோடொத்தால் நீர்மை அங்குமவளோடொக்க வேண்டாவோ ? அவள் ஆச்ரிதர்க்காக சிறையிலிருந்த படியறியாயோ ? (துயிலெழாய்) எழுந்திருந்து எங்கள் ஸத்தையுண்டாக்காயோ ?

செய்யவேண்டுவ தென்னென்ன (உக்கமும்) ஆலவட்டமும். (தட்டொளியும்) கண்ணாடியும். பறையென்னுமாம். (உன்மணாளனை) உன்னேட்டைக் கூட்டுறவும் எங்களுக்கு உறுப்பென்றிருந்தோம். அன்றாய்த்தோ. உக்கத்தோபாதி அவனையும் அவள் தரவேணுமென்கை. (இப்போதே) *வைதர்ம்யம் நேஹ வித்யதே* என்று மற்றைப்போதைக்கு இரோமென்கை. (எம்மை) 'பேய்ப்பெண்ணே' என்றும் 'நாயகப்பெண்பிள்ளாய்' என்றும் தங்களில் தாங்கள் சொல்லுமத்தனை. பேற்றில்வந்தால் எல்லாருமொத்திருப்பார்கள். எல்லார்க்கும் உபாயம் ஒன்றானாப்போலே உபேயமொன்றாயிருக்கிறபடி. (எம்மை) *ஏஹி பச்ய சரீராணி* என்று விரஹம் தின்ன உடம்பைக் காட்டுகிறார்கள். (எம்மை நீராட்டு) எங்களையும் அவனையும்கூட நீராட்டவேணும் இவன் முழுக்கூட்டுகைக்காக நிற்கில் முழுக அஞ்சுவோமென்பார்கள். கையைப்பிடித்துக் கூடமுழுகும். (நீராட்டு) *247. கடியாரித்யாதி. (நீராட்டு) *தாரா: பித்ருக்ருதா இதி ஸ்ரீ. பா. 77-26.* என்று பெருமாள் பிராட்டியுடைய ஸௌந்தர்யாதிகள் கிடக்க பிராட்டியை யுகப்பது ஐயர் பண்ணிவைத்த விவாஹமென்றாய்த்து. அப்படி 'இவள் தந்த க்ருஷ்ணன்' என்று இவர்களும் உகப்பார்களாயிற்று.

ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப 20
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள்
ஆற்றப்படைத்தான்மகனே ! அறிவுறாய்
ஊற்றமுடையாய் ! பெரியாய் !, உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே ! துயிலெழாய்
மாற்றாருனக்கு வலிதொலைந்துன்வாசற்கண்
ஆற்றாதுவந்து உன்னடிபணியுமாபோலே
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். 21

இருபத்தோராம்பாட்டு:— கீழே கண்டாரையெல்லா மெழுப்பி பட்ட வ்யஸநம் தீர அவன் தன்னையே யெழுப்புகிறார்கள். நப்பின்னைப்பிராட்டி, 'நான் உங்களிலே யொருத்தியன்றோ? நாமெல்லாரும் கூடிக் கிருஷ்ணனை அர்த்திக்க வாருங்கோள்' என்ன, அவனை எழுப்புகிறார்கள். உகவாதார் வீரத்துக்குத் தோற்றுவருமாபோலே உகந்தநாங்கள் உன் நீர்மைக்குத் தோற்று வந்தோமென்கிறார்கள்.

(ஏற்றகலங்கள் எதிர் பொங்கிமீதளிப்ப) (ஏற்றகலம்) கலமிடாதார்தாழ்வே. இட்ட இட்ட கலங்களெல்லாம் நிறைக்கும். அவையும் க்ருஷ்ணன் படியாயிருக்கும். *உதாரா: கீதா. 7-18. *ஸர்வாந் ஸ்ரீ. அ. 16-27. * ஏறாத கலங்கள் நிரம்பாதொழிகிறது பாலின் குறையன்றே? அர்த்தியாதார் குறையிறே. ஸ்வீகாரம் வேண்டுவது (கலங்கள்) சிறியது பெரியது என்கிற நியமமில்லை. கடலை மடுக்கிலும் நிறம்பும். அவன் குணத்தோபாதி பரப்புண்டாகிலும் நிறம்பும். (மாற்றாதே பால்சொரியும்) 'கலமிடுவாரில்லை' என்றால் தான் தவிராது. முலைக்கடுப்பு போந்தனையும் நின்று பால்சொரியும். (வள்ளல்) அபேக்ஷைபால் கொடுக்குமவனைப்போலே இவையும் அபேக்ஷித்ததுக்காகச் செய்ததென்கை. அர்த்திக்கை உபாயமாகாதோ வென்னில், ரக்ஷணம் அவனுக்கு ஸ்வரூபமானவோபாதி, ஸ்வரூபத்தில் புகலாமிறே. அர்த்தித்வம் நித்யமாகவேணுமோ வென்னில் முக்தனுக்கும் வேணும். இல்லையாகில் அது ப்ராப்யமாகமாட்டாதென்கை. ஸம்ஸாரபோகம் ஸாவதியாகையாலே அர்த்தித்வம் ஓரளவிலே பர்வஸிக்கும். அங்கு நித்யமாகையால் உள்ளதனையும் வேணும். 3339. * அகலகில்லேனிறையும். *3582 மருந்தேகங்கள் போகமகிழ்ச்சிக்கு* (க்ருஷ்ணனைப்போலே பெண்ணுக்கும் பேதைக்கும் கட்டவும் விடவும்படி பவ்யமாயிருக்கும். (பெரும்பசுக்கள்) ஸ்ரீ பத்ருஞ்ஜயனைப்போலேயிருக்கை. க்ருஷ்ணஸ்பர்சத்தாலே வளர்ந்து அவன் ஏழுவயஸ்ஸிலே பதினாறுவயஸ்ஸா குமாரனென்னும்படி யிருக்குமாபோலே யிருக்கும்

(ஆற்றைப்படைத்தான்) மிகவும் படைக்கை. * 1529 கழியாரும் கனசங்கம் * என்னும் திருநறையூரில் முத்தெண்ணிலும் எண்ணப்போகாது. [கழியாரும் கலசங்கம்] கர்ப்பிணிகளைப்போலே. (கலந்தெங்கும் நிறைந்தேறி) பெரிய திருநாளுக்கு வருமாபோலே. [வழியார] தார்மிகர்வழித்துறைப்புறப்படக்குவிக்க, வழியை மலையாக் குவிக்கும். படைத்தான் மகனே) அவர் ஆர்ஜித்துப்படைக்க இவன்



பிறந்து படைத்தஸம்பத்து *பதிம் விச்வஸ்ய* இத்யாதிகளிலுங்காட்டில், ஸ்ரீ நந்தகோபருடைய ஸம்பத்துக்கு இட்டுப்பிறந்தவேற்றம் பரமபதம் போலேயும் நாராயணத்வம் போலேயும் தான்தோன்றியன்று. (அறிவுறாய்) ஸர்வஜ்ஞனுக்கும் உணர்த்த வேண்டும்படியிறே உள்ளு செல்லுகிற பராக்கு. (ஊற்றமுடையாய்) த்ருடப்ரமாணஸித்தன். * 66 நம்முடை நாயகனே. (பெரியாய்) அவை தனக்கு *அப்ராப்ய மநஸா ஸஹ என்றும், *யஸ்யாமதம் தஸ்ய மதம்* என்றும் சொல்லுகிறபடியேயிருக்கை.

(தோற்றமாய்) இப்படிபெரியனாயிருந்து வைத்து இதரஸஜாதீயனாய் வந்தவதரித்தபடி. (சுடர்) மநுஷ்யத்வே பரத்வம். (ஊற்றம்) பிராட்டி மஹாராஜருள்ளிட்டார் விடவேணுமென்றிலும் ஆச்ரிதரை விடாத ஏற்றம். (பெரியாய்) தன்பேறாயிருக்கை. எல்லாம் செய்தாலும் ஆச்ரிதவிஷயத்திலொன்றும் செய்யப் பெற்றிலோமென்கை. (உலகினில்தோற்றமாய் நின்ற) சிசுபாலன் துர்யோதனருள்ளிட்டாரில் இவனுக்குப்பாண்டவர்கள் பக்கலிலே பக்ஷபாதமுண்டென்றும் தோற்றவிருக்கை. (சுடரே துயிலெழாய்) இப்போது உணராமையாலே அக்குணங்களெல்லாமிழக்கப்புகாநின்றாயென்கிறார்கள். (மாற்றார்) நாங்கள் வருமவர்களோ? பண்டு ஹிரண்ய ராவணாதிகளாய் வந்தோம் நாங்களன்றோவென்கை. (வலிதுலைந்து)*நநமேயம்து கஸ்யசித் ஸ்ரீ யு. 36-11. *என்கை தவிர்ந்து. அம்புக்குத் தோற்றாரோபாதி குணத்துக்குத் தோற்றுவந்தோம். அவர்களுக்கு முடிந்து பிழைக்கலாம். உன்குணத்துக்குத்தோற்றார்க்குப் பிழைக்க விரகுண்டோ? *ஸத்யேந லோகாந் ஜயதி ஸ்ரீ. அ. 12-29. *

(வந்து) * 2241. ஆள்பார்த்துழிதருவாய்* என்று நீ வரக்கடவையாயிருக்கை. (அடிபணியுமாபோலே) வணக்கம் ஸ்வரூபத்துக் கென்றிராதே ஆற்றாமைக் கென்றிருக்கை. (போற்றியாம் வந்தோம்) தோற்றார்பண் புகழுமித்தனை. அபலைகளை வெல்லுகையும் ஒரு பணியோ? (போற்றியாம் வந்தோம்) பெரியாழ்வாரைப்போலேயன்றோ நாங்கள் வந்ததென்கை. தம்மைப் பேணாதே அத்தலையைப் பேணுவர் அவர். நாங்களும் எங்களைப்பேணாதே உன்வாசலிலே வந்தோமென்கை. (புகழ்ந்து) நீ எங்களைப் படுத்தினபாடும் வென்று கொண்டபடியும் சொல்லிக்கிட்டினால் திருப்பல்லாண்டுபாடுகை ஸ்வரூபமாய்விட்டது. 21

அங்கண்மாஞாலத்தரசர், அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டில்கீழே

சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம்
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ
திங்களும்ஆதித்யனும் எழுந்தாற்போல்
அங்கணிரண்டும்கொண்டு எங்கள்மேல்நோக்குதியேல்
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோரேம்பாவாய். 22

இருபத்திரண்டாம் பாட்டு:—கீழ்ப்பாட்டில் தங்கள் அபிமாநசூந்யதை சொல்லிற்று. இப்பாட்டில் தங்களுக்கும் பிறர்க்கும் ஆகாதபடியான அநந்யார்ஹ சேஷத்வம் சொல்லுகிறது.

(அங்கண்) அழகியவிடம். ப்ரஹ்மாவுக்கும் தானும் தன் பரிகரத்தோடும் அநுபவிக்கலாய், பிபீலிகாதிகளுக்கும் அதன் போகோபகரணத்தோடே அநுபவிக்கலாயிருக்கை. (மாஞாலத்தரசர்) இப்பரப்பித்தனையும் எங்களதென்றபிமானம்பண்ணின ராஜாக்கள். * 2250. [கோவாகி] இதடைய தன் அபிமானத்தே யடக்கிவைக்கை. * 2699. யாவையும் யாவரும் தானமைவுடை நாரணன் * என்கிற வற்றை அநுஸரிக்கிற பௌண்ட்ரக வாஸுதேவனைப் போலே. (அபிமானபங்கமாய் வந்து) அபிமான சூந்யராய் வந்து. (நின்பள்ளிக் கட்டில் கீழே) ஸிம்ஹாஸநத்தின் கீழே திரளவந்து அணுகோலக்கமாயிருக்கை, (கீழே) அவதாரணம். (நின்பள்ளிக்கட்டில்கீழே) எங்கேனும் வழிபறியுண்டாலும் ராஜாவின் வாசலிலே கூப்பிடுமாபோலே. * ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் * அவர்களாகில் ஆற்றாமைக்கும் தாங்கள் ஆகிடுகை. இளையபெருமாளும் * குணைர்தாஸ்யமுபாகத: ஸ்ரீ. கி. 4-12. * இவர்களுக்கு இவ்வவதாரத்தில் அழகு தோற்பித்து அடிமையிலே மூட்டிற்று.

(சங்கமிருப்பார்போல்) ‘வெளியிலே திரியில் பின்னையும் ராஜ்யம் பண்ணென்று தலையிலே முடியை வைப்பார்கள்’ என்றஞ்சி அணுகோலக்கத்திலே ஸேவித்திருப்பர்கள். * ராஜந், கச்சித் நதுஷ்டோ வ்ரஜஸி ஸ்ரீ. அ. 85-7 * என்று. (வந்து தலைப்பெய்தோம்) கீழெல்லாரையும் எழுப்பிப்பட்ட க்லேசமெல்லாம் தீரவந்து கிட்டப்பெற்றோமென்கை வந்து தலைப்பெய்கை-கீழ் கைகழிந்தபடியும், இன்று யாத்ருச்சிக ஸங்கதியுண்டானபடியும். * 2677 அந்நலனுடையொருவனை நணுகினம் நாமே. * சிராயமே கூலமிவாஸி லப்த:* மந்யே ப்ராப்தாஸ்ஸ்மதம் தேசம் பரத்வாஜோ யமப்ரவித் ஸ்ரீ. அ. 999 * வாநராணும் நராணும் சகதமாஸீத் ஸமாகம: ஸ்ரீ ஸு 35-2. * (கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப்பூப்போலே) இழவுபேறுகள் அத்தலை



யிலேயாயிருக்கிறபடி. காலை இளமை மொட்டிக்கப்பண்ணி, பெண்களாற்றாமை அலரப்பண்ணுகிறபடி.

பெண்காள்! நம்மைக்கிட்டுகையாலே எல்லாம் ஸபலமாயிற்றேவென்ன, விசேஷகடாக்ஷம் பண்ணியருளீர்.

(செங்கண்) உபமாநம் நேர்நில்லாமை உபமேயந் தன்னையே சொல்லவேண்டினபடி. (சிறுச்சிறிதே) ஒரு நீர்ச்சாவியிலே வெள்ளமாகாமே பொறுக்கப் பொறுக்கவென்கை. ப்ரதமபரிஸ்பந்தமே தொடங்கி காணவேணுமென்னுமாம். (எம்மேல் விழியாவோ) கோடையோடின பயிரிலே ஒரு பாட்டம் வர்ஷியாதோ என்னுமாபோலே. சாதகம் வர்ஷதாரையை ஆசைப்படுமாபோலே விழியாவோ வென்று மநோரதம். (திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்) உன்னைப் பெறுதவிடாய் ஆறுகைக்கும் கிடையாதோவென்கிற அஜ்ஞாநாந்தகாரம் போகைக்கும்; பித்தம் கழன்று தங்களுக்குத் தண்ணளி மிக்கிருக்கையுமென்னுமாம். ப்ரதாபமும் தண்ணளியும். * ப்ரஸந்நாதித்ய வர்சஸம்.*

(அங்கணிரண்டுங்கொண்டு) கார்கால ஆதித்யனும் நகட்டுச்சந்த்ரனும் போலல்ல. * சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்சநம் ஸ்ரீ. அ 3-29*. முழுநோக்குப் பொறுக்கும்படியாகையாலே உன்னழகிய இரண்டு கண்ணையுமிட்டுப் பார்க்கவேணும் நாங்கள் பிழைக்கவென்கை. (அங்கண்) ‘தாமரைப்பூ’ என்னபோது விகஸிக்கைக்கு தாமரை ஒப்பல்லாதாப்போலே, கோபப்ரஸாதங்களுக்கு சந்த்ரஸூர்யர்கள் ஒப்பல்லவென்னுமாம். (எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல் சாபமிழிந்து) சாபம் விரஹவ்யஸநமாதல், ஸம்ஸாரதுக்கமாதல். தண்கண்கள். (எங்கள்மேல் சாபமிழிந்து) யாதநாசரீரம்போலே உன்னைப் பெறுதேவ்யஸநப்படுகைக்கடியான சாபோபஹதரான வெங்கள் துக்கம் போகவென்கை. விச்லேஷவ்யஸநத்தால் வரும் துக்கம் அநுபவித்தேவிடவேண்டுகையாலே ‘சாபம்’ என்றது. ‘சாபமிழிந்து நோக்குதியேல்’ என்றந்வயம். ‘போற்றியாம் வந்தோம் புகழ்ந்து’ என்று கீழோடே. 22

††மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்
சீரியசிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து
வேரிமயிர்போங்க எப்பாடும்பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டு
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா!, உன்
கோயில்நின்றும் இங்ஙனேபோந்தருளி, கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து, யாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோரேம்பாவாய். 23

இருபத்துமூன்றாம் பாட்டு:—பெண்காள்! உங்கள் கார்
யம் அழகிதாகச் செய்கிறோம்; உங்களுக்குச் செய்யவேண்
டுவதென்னென்ன; செய்யும்படியை உள்வரியிட்டுத்தாருங்
கோளென்ன; பாசுரத்தைச் சுருங்கவிட்டு உள்வரியிட்டுச்
செய்து கொடுக்கிறார்கள். 'சங்கமிருப்பார்போல்' என்ற
வார்த்தையைக் கேட்டு 'நீங்கள் அநந்யகதிகளென்பதே
நப்பின்னைப் பிராட்டி பரிக்ரஹமாயிருந்து வைத்து' என்று
திருவுள்ளம் புண்பட்டு உங்களுக்குச் செய்யவேண்டுவதென்
னென்ன? இங்ஙனம் குன்னங்குருச்சியாகக் கேட்டருள
வொண்ணாது, பேரோலக்கமாகவிருந்து நீ கேட்டருளுமா
போலே கேட்டருளவேணுமென்கிறார்கள். புருஷகாரம்
*2748 பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை முன்னைய
மரர்முழுமுதலானே. அழகர் கிடாம்பியாச்சானை அருளப்
பாடிட்டு, நீர் ஒன்று சொலஎன்ன, *அபராத ஸஹஸ்ரபாஜநம்*
என்று தொடங்கி, *அகதிம் ஆ. 48* என்ன, 'நம் இராமா
நுசனையுடையாயிருந்து வைத்து அகதியென்னப் பெறாய்,
என்றருளிச்செய்தாராம். அநந்தாழ்வான், *அமர்யாத: ஆ.
62 என்கிற ச்லோகத்தை ஆளவந்தார் அருளிச்செய்தா
ரென்னக் கேட்டு 'எனக்கது சொல்லவேண்டா' என்றான்,
அவர் ஸம்பந்தத்தாலே. *வசஸா ஸாந்த்வயித்வைநம் ஸ்ரீ. யு.
19-7 என்றருளி, 'ஸாபராதனன்றோ ஸாந்த்வநம் பண்ணு
வான்' என்றருளிச் செய்தாப்போலே, நீங்கள் சொல்லிற்
றெல்லாம் நம் குறையாலே வந்ததென்றருளிச் செய்து,
பெண்களை ஸாந்த்வநம் பண்ணியருளினான்.

(மாரிமலை முழைஞ்சில்) பெருமாள்மால்யவானிலே யெழுந்
தருளியிருந்தாப்போலே, வர்ஷம் பெய்து வழிகளெல்லாம்
தூறெழுந்து ராஜாக்கள் படைவீட்டிலே யிருந்து வினை
யுண்டானாலும் புறப்படாதாப்போலே, ஸிம்ஹங்கள் கிரி
குஹரங்களிலே கிடந்துறங்கும் காலம். விச்லேஷித்தார்
கூடும் காலம். கூடியிருந்தார் ஸம்போகரஸமநுபவிக்கும்
காலமென்னுமாம். நீ எங்கள் வாசலிலே வர ப்ராப்தமா
யிருக்க, நாங்கள் உன்வாசலிலே நிற்கும் காலமென்னுமாம்.
(மன்னி) ஆர்க்கஞ்சவேணுமிதுக்கு. மலைக்குவடுபோலே
பொருந்தி யிருக்கை. தன் பேடையோடே ஏகவஸ்து
வென்னலாம்படி பொருந்திக் கிடக்கிறதென்னுமாம்.
இங்கு *நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்
மார்பனிறே. ஹாரவிசேஷம். *ஸ்ரீஸ்தநாபரணம்*. இது
மூலை; அது மலை. 'ஆஷாடே'. (கிடந்துறங்கும் சீரிய சிங்கம்)
ஒருத்தர் முடிசூட்டவேண்டாதே பிறப்பே ம்ருகேந்த்ரனா
கையும், நிரங்குச வைபவமுண்டாகையும். *ஸ மயா போதித:



ஸ்ரீமாந் ஸ்ரீ. ஸு. 38-24 இத்யாதி. [பரந்தப:] க்ஷுத்ர ம்ருகங்
கள் மண்ணுண்ணும்படியிருக்கை. * அபித: பாவகோபமம்
ஸ்ரீ. அ. 99-26. அநுகூலரான தம்பிக்கு மகப்பட அணுக
வொண்ணாதபடி யிருக்கை. (அறிவுற்று) பூ வலர்ந்தாப்
போலே காலத்திலே யுணருகை. ஸம்ஸாரிக்கு நித்ரை
மேலிட தமஸ்ஸு அபிபவிக்கை. இவனுக்கு உறக்கம்
வ்யதிரேகத்தில் ஆற்றாதார் வருமளவும். (தீவிழித்து) ப்ரத
மாக்ஷி ஸந்நிபாதத்திலே பேடைகளும் அருகு நிற்க
வொண்ணாதென்கை.

(வேரி மயிர்பொங்க) உளைமயிர் சிலும்ப. (வேரி) ஜாத்
யுசிதமான கந்தம். அவனுக்காகிற ஸர்வகந்தம். (எப்
பாடும் பேர்ந்துதறி) ஒரு கார்யப்பாடில்லாமையாலே நாலு
பாடும் பெருகிறபடி. (உதறி) அவயவங்களைத் தனித்தனியே
உதறினபடி (மூரிநிமிர்ந்து) உடலொன்றாக நிமிர்ந்தபடி.
(முழங்கி) மானுளரிட்ட ம்ருகங்கள் முழுக்காயாக அவிந்து
கிடக்கும்படி. (முழங்கிப் புறப்பட்டு) கிரிகுஹையில நின்
றும் இப்படி புறப்பட்டதொரு ஸிம்ஹம் புறப்பட்டுப்போரு
மாபோலே போரவேணுமென்ன, பெண்காள்! நரஸிம்ஹம்
போருமாபோலே போரவோவென்ன.

(நீ பூவைப் பூவண்ணா) காம்பீர்யத்துக்கு ஒன்றைச்
சொன்னோமாகில் நீ போருமாபோலே போரவேணு
மென்கை. வடிவையும் நிறத்தையும் உன்னைப்போலே
பண்ணவொண்ணுமோவென்கை. இவன் ஸிம்ஹத்தைப்
போலே வருகையாகிறவிது நாய்ச்சியார் விழிவிழிக்கா
யிருக்கை. (உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி)
பிராட்டியோடேயிறே கண்வளர்ந்தருளுவது; அவள் எங்
களைத் தனித்தனியே நோக்கியருளும்படி அவள் திருக்
கையை ஊன்றிக்கொண்டு திருப்பளளியறையில் நின்றும்
பெரிய திருமண்டபம் புறப்பட்டருளவேணும். பிராட்டி
மங்களாசாஸநம் பண்ண பெருமாள் புறப்பட்டருளினாப்
போலே புறப்பட்டருள ஆசைபபடுகிறார்கள். *பர்வதாதிவ
நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கிரிகுஹாசய:, லக்ஷ்மணம் த்வாரி ஸோபச்யத்
ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்திதம். ஸ்ரீ. அ. 16-26*. கண்வளர்ந்
தருளுமழகு காணப்பெற்றோம்; இனி நடையழகும் இருப்
பில் வேறுபாடும் கண்டு வாழவேணுமென்கிறார்கள. *3570
தடங்கொள் தாமரைக் கணவிழிதது நீயெழுநதுன் தாமரை
மங்கையும் நீயுமிடங்கொள் மூவுலகுந்தொழவிருந்தருளாய்*
என்கிறார்கள். இப்படியிருநதருளவேணும. (போநதருளி)
சதுர்க்கதியிறே. *கஜஸிம்ஹகதீ வீரௌ சார்தூலவ்ருஷபோபமௌ
புண்டரீகவிசாலாக்ஷௌ கட்கதூணீதநுர்தரௌ ஸ்ரீ. பா. 50-17 *

நடையிலே ருஷபத்தின் செறுக்குத் தோற்றியிருப்பது, மத்தகஜத்தின் திமிர்ப்புத் தோன்றியிருப்பது, புலியினுடைய உறட்டுத் தோன்றியிருப்பது, ஸிம்ஹத்தினுடைய பராபிபவநமும் தோற்றியிருப்பது. நமக்கிவையெல்லாம் நம்பெருமாள்நடையழகிலே காணலாமிறே. (கோப்புடைய) உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை.

(சீரியசிங்காசநம்) ராஜாக்கள் இன்ன மண்டபத்திலே இன்ன ஆஸநத்திலே இருந்து நினைப்பிட்டதென்றால் அதையறியுமாபோலே. இங்கு 'கடற்கரையில் வார்த்தையும், திருத்தேர்த்தட்டில் வார்த்தையும்' என்னுமாபோலே ஸிம்ஹாஸநத்திலேயிருந்து நினைப்பிட்டதென்றால் பெண்களுக்குப் பொய்சொல்லும் க்ருஷ்ணனேயாகிலும் அமோகமாய் தவிரவொண்ணாதிருக்கை. தர்மாஸநம்போலே தர்மாதிபீடமிறே. சீரிய சிங்கத்துக்குத் தகுதியான ஆஸநம்-சீரிய சிங்காசநம். ஓராணுவாகிலும் க்ருஷ்ணனோடொத்த வரிசையைக் கொடுக்கவற்றான ஸிம்ஹாஸநமென்னுமாம். (யாம்வந்த காரியம்) இப்போது சொல்லார்கள். சிற்றம் சிறுகாலைக்கு வைக்கிறார்கள் (ஆராய்ந்தருள்) நீங்கள் என்பட்டிகோள். என்செய்திகோளென்கை. அதாகிறது பெண்களை யெழுப்புவது, வாசல்காப்பானை யெழுப்புவது, ஸ்ரீநந்தகோபருள்ளிட்டாரை யெழுப்புவது, நம்மையெழுப்புவதாய் போர வ்யஸநப்பட்டு வந்திகோளாகாதே யென்கை. ப்ரஜை கிணற்றில் விழுந்தால் தாயன்றோ நோக்காதே பரியவிட்டாளென்பர்கள். அவன் *எதிர்சூழல் புக்குத் திரிந்தால் இன்றிறே இவன் * 2919 ஒழுவில் காலமென்பது. 23

††அன்றிவ்வுலகமளந்தாய்! அடிபோற்றி
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய்! திறல்போற்றி
பொன்றச்சகடமுதைத்தாய்! புகழ்போற்றி
கன்றுகுணிலாவெறிந்தாய்! கழல்போற்றி
குன்றுகுடையாவெடுத்தாய்! குணம்போற்றி
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி
என்றென்றுன்சேவகமே ஏத்திப்பறைகொள்வான்
இன்றுயாம்வந்தோம் இரங்கேலோரெம்பாவாய். 24

இருபத்துநாலாம் பாட்டு;—அவனைக் காணுமளவுமிறே அதுவேணும், இதுவேணுமென்பது. கண்டால் அவனுக்குப் பரியுமத்தனையிறே. நப்பின்னைப் பிராட்டியோடே கூடவிருந்த இருப்பிலே சாத்தியருளின அத்தவாளத்தலைமேலே பறக்க, ஸ்ரீசடகோபனைக்கோத்துக்கொண்டு மெத்தன எழுந்தருளுகிற திருவடிகளைக்கண்டு, அத்திருவடிகளை



திருமுலைத்தடத்திலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொண்டு *உன்செவ்வடி செவ்விதிருக்காப்பு, வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு' என்று திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். இங்ஙனே போரவேணுமென்ன, நடந்த நடைகண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார்களாகவுமாம்.

(அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி) பகவத் விபூதியை மஹாபலி நெருக்கி அபஹரிக்க நோவுபட்டவன்று, பண்டுமொரு நாளிப்படியே எல்லை நடந்து மீட்டுக்கொண்டானென்கை. இவ்வழகிய திருவடிகளைக்கொண்டே காடுமோடையு மளந்துகொண்டது. (இவ்வுலக மளந்தாய்) பிராட்டிமார்க்கும் பூத்தொடுமாபோலே கூசிப்பிடிக்க வேண்டின திருவடிகளைக்கொண்டு கூசமமறியாத காடுமோடுமளப்பதேயென்கை. * 2909 வன்மாவையம். (அடிபோற்றி) *உன் செவ்வடி செவ்விதிருக்காப்பு. (சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி) அழகுக்கிலக்காகாதாரை அம்புக்கிலக்காக்கினபடி. கீழ் நமுசிப்ரப்ருதிகளேயுள்ளது; பிராட்டியைப் பிரித்த ராவணனிருந்தவிடத்தே செல்லுவதேயென்கை. கால்நடை நடப்பித்த கைகேயியை நோக்கினார்கள். (சென்று) புலி நின்ற தூற்றிலே சென்று கொல்லுமாபோலே *தென்னிலங்கையரண்சிதறியவுணன் மாளச்சென்று. (சென்று) வழிப்போக்கிலே கர கபந்த விராதாதிகளுடைய மணல்கொட்டகமிடறினைப்போலே இடறிக்கொண்டு போனபடி. (தென்னிலங்கை செற்றாய்திறல் போற்றி) *மைவாயகளிறொழிந்து இத்யாதி. ராவணனைக் கால்நடையே நின்று போருவதேயென்கை. (திறல் போற்றி) என்ன குடிப்பிறப்பு. மதிளுக்கு மதிளிடுகிறார்கள். * இலங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே என்றவர் மகளிறே. (தென்னிலங்கை) ஆரியர்களிகழ்ந்த தேசம்.

(பொன்றச் சகடமுதைத்தாய் புகழ்போற்றி) ராவணனைப்போலே நினையாமை முடிந்தபடி. அங்கு பருவம் நிரம்புகையாலே விலாஸமநுபவித்தானென்கை. இங்கு அந்த லீலையில் நுழையும்பருவமன்று. (பொன்ற) மாரீசனைப்போலே குற்றுயிராக்கி மேலே அநர்த்தம் விளைக்கவையாதே முடிக்கப்பெற்றபடி. (புகழ்போற்றி) ராமாவதாரத்தில் பிதா தசரதன் சம்பராந்தகன்; ஊர் அயோத்யை. தம்பிமாரோ கல்மதிள். மந்த்ரவாதிகளான வஸிஷ்டாதிகள் புரோஹிதர். ஸுமந்த்ராதிகள் மந்த்ரிகள். நாட்டடையக் காவல். ஸ்பர்த்தை பண்ணுவாரும், * இச்சாம:

ஸ்ரீ. அ. 2-22 என்னும்படியான குணவானாகையாலே அஞ்ச வேண்டா, இங்கு மாதாபிதாக்கள் ஸாது இடையர்; ஊர் இடைச்சேரி; புத்திசொல்லும் மந்த்ரிகளும் இளவிடையர் ஸம்ஸாரிகள். கம்ஸாதிகள் எதிரிகள். ஸ்ரீப்ருந்தாவநத்தில் முளைத்த பூண்டுகள் அகப்பட ராக்ஷஸர்; தமையன் ஒருக்ஷணம் தப்பில் பாம்பின் வாயிலே விழும் தீம்பன்; பூதநாதிகளால் புகுந்த அபாயங்களவை. இனி மங்களா சாஸந மொழியக்காவலுண்டோ? தாயுமுதவாத தசையிலே திருவடிகள் உதவுகை புகழாவது. *செய்ய பாத மொன்றால் செய்தநின் சிறுச்சேவகமும்* என்று காறை முறித்த கன்னிப்போராகையாலே காப்பிடுகிறார்கள். (கன்று குணிலாவெறிந்தாய் கழல்போற்றி) 'சத்ருவையிட்டு சத்ருவையெறிந்தால் அவர்கள் க்ருதஸங்கேதிகளாய் மேல் விழ என்செய்யக் கடவோம்' என்று வயிறுபிடிக்கிறார்கள். குஞ்சின திருவடிகளுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். (குணில்) எறிகருவி.

(குன்றுகுடையா வெடுத்தாய்குணம் போற்றி) இதுக்கு முன்பு செய்த செயல்கள் இந்த்ரனுக்கு. இப்போது அவன் தான் பகையானபடி சொல்லுகிறது. 'அநுகூலர் ப்ரதிகூலிக்கையால் தலையறுக்க வொண்ணாது; பெரும்பசியாலே அவனை நலிந்தோம்; அவன் கைநோவுந்தனையும் வர்ஷிக்கிறான். அவ்வளவு கல்லிட்டுக்காப்போம்' என்று ஆந்ருசம்ஸ்யத்தாலே மலையை யெடுத்துக் கொண்டு நின்ற குணத்துக்கு மங்களாசாஸநம்பண்ணுகிறார்கள். சவலைப் பசல் தன்னைக்கிள்ளப்புக்கால் கைநொந்தவாறே விட்டுப் போகிறதென்று உடம்பு கொடுத்திருக்கும் தாயைப்போலே.

(வென்றுபகை கெடுக்கும் நின்கையில்வேல் போற்றி) ஒருவ்யக்தியிலே எல்லா அபதாநங்களையும் சொன்னால் த்ருஷ்டி தோஷமாமென்று பிடித்த வேலுக்கு மங்களாசாஸநம்பண்ணுகிறார்கள். சக்ரவர்த்தி வில்பிடிக்க பிள்ளைகள் வில்பிடிக்காப்போலே, *கூர்வேல் கொடுந்தொழிலன் மகனிறே. பசுக்களின் பின்பே திரியா நின்றால் ஸிம்ஹம் வராநின்றாலும் வேலாலே குத்திப் பொகட்டுப்போமத்தனை. (நின் கையில் வேல்போற்றி) வெறும் புறமே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்க, அவ்வழகுக்குமேல் வில்லைப்பிடித்தவழகு. *வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு.

(என்றென்று) ப்ரயோஜநம் பெறுமளவும் சொல்லிப் பின்னை, *தேஹி மே ததாமி தே* என்னுமவர்களன்று; இது தானே ப்ரயோஜநமாயிருக்குமவர்கள். ஸம்ஸாரிகள் புறம் புங்கொள்ளுவர்கள். அவன்பக்கலிலும் கொள்ளுவர்கள்.



இவள் புறம்பும் கொள்ளாள், இவன் பக்கலிலும் கொள்ளாள். *ஒன்று நூறாயிரமாகக் கொடுத்து, *ஆந்தனையும் கை காட்டி புறம்புத்தைக்குத்தானே கொடுக்குமித்தனை. (உன் சேவகமே ஏற்றி) *உன்னுடைய விக்கிரம மொன்றொழியாமலெல்லாம் என்னுடைய நெஞ்சகம் பால் சுவர்வழியெழுதிக்கொண்டேன்* என்னுமவர் மகளிறே.

(இன்று) இசைவு பிறந்த இன்று. நீயுறங்க, நாங்கள் உறங்காதே யிருந்த இன்று. வ்ருத்தைகளுறங்க நாங்கள் வந்தோம். நென்னேற்று வந்தோமோ, ஊராரிசைந்த இன்று வந்தோமென்னுமாம். (யாம்) பந்துக்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள். (யாம் வந்தோம்) நீ வர ப்ராப்தமாயிருக்க எங்களாற்றாமையாலே வந்தோமென்னுமாம். (வந்தோம்) எங்களாற்றாமையால் வந்த இழவெல்லாம் தீர வந்தோம். (இரங்கு) எல்லாம் பட்டுவந்தாலும் அவனிரங்கியல்லது கார்யமாகாது. வ்யபிசாரமில்லாத உபாயமிதுவே யென்கை. இத்தலைக்கு இரங்குகை அவனுக்கு ஸ்வரூபம். 'அவனுக்கென்வருகிறதோ' என்று இரங்குகை இத்தலைக்கு ஸ்வரூபம்.

24

ஒருத்திமகனாய்ப்பிறந்து, ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளர
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த
கருத்தைப்பிழைப்பித்துக், கஞ்சன்வயிற்றில்
நெருப்பென்னநின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில்
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். 25

இருபத்தஞ்சாம்பாட்டு:—பெண்காள்! நோன்பொழிய உங்கள் நெஞ்சிலே ஒன்றுண்டிறே யென்ன; 'பறை' என்றொரு பேர்; நாங்கள் உன்னை அர்த்தித்துவந்தோம் என்ன; என்னை அர்த்தித்துப் பெற்றாருண்டோ? என்ன, எங்களோட்டையார் பெற்றாருண்டு என்கிறார்கள்.

(ஒருத்தி மகனாய்) ஸர்வலோகத்துக்கும் பிதாவான உன்னை ஒருத்தி மகனாகப் பெறுவதோ? *மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்*. (ஒருத்தி) *அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்கிறபடியே ஸர்வலோகங்களுக்கும் நியாமகனானவனையுங்கூட நியமிக்குமவளென்கையாலே, நாட்டில் தனக்கு ஒப்பின்றிக்கே யிருக்குமவள். (மகனாய்) பிறந்தபோதே சொல்லிற்றுச் செய்கை. *ஸ்துதோஹம் யத் த்வயா பூர்வம் புத்ரார்த்திந்யா தத்ய தே | ஸபலம் தேவி ஸஞ்ஜாதம் ஜாதோஹம் யத்தவோதராத்* வி. பு. 5-314.* சக்ர

வர்த்தி திருமகன் வளர்ந்தபின்பு பித்ருவசந பரிபாலநம் பண்ணினான். இவன், பிறந்தபோதே தோள்களை மறைத்துத் திருவாய்ப்பாடியில் போகச்சொல்லப் போனான். சோபநம் கூறுகைக்கும் வேறாளில்லை, தானே. (பிறந்து) கர்மவச்யர் படுமவற்றை அகர்மவச்யன் க்ருபாவச்யனாய் பிறந்து படுவதோ ? * உபஸம்ஹர இத்யாதி * [அஜோபி ஸந்நவ்யயாத்மா] கீதா. 4-6. * கர்மவச்யர் கூறான ஜந்மாதி தோஷங்களன்றிக்கே யிருக்கை. என்பிறவாமைக்கு தட்டு வாராதபடியும் எனக்கு நிறமுண்டாம் படியுங்காண் நாம் பிறப்பது. * ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந: * பூதாநா மீச்வரோபி ஸந் * பிறக்கையும் பிறவாமையும் கிடக்கப்பிறக்கும். பிறப்பு நித்யர்க்குமுண்டாகையாலே அவ்வளவேயல்ல. அல்லாதார் பிறப்பையும் நீக்கவல்ல ஸ்வதந்த்ரன் பிறப்பன்றோ வென்கை.

சிறையர் சிறைக்கூட்டத்தில் பிணையுண்கைக்குப்புகும்; நியாமகன் சிறைக்கூட்டத்தை விடுவிக்கப்புகும். புகுகையிலே இத்தனை நெடுவாசியுண்டு. அவன் பிறந்தால் இவன் பிறவி தனக்குத் தட்டாமையல்ல. நம்பிறவியைப்போக்கி நம்மைத் தன்போலேயாக்க வல்லனாயிருக்கும். * ஜந்ம கர்மச மே திவ்ய மித்யாதி. நம்பிறவி நம்மையும் அவனையும் உறவறுக்கைக்கு உடலாயிருக்கும். இப்படியல்லானைக்கடி சாவுதல் பிறத்தல் செய்யவேண்டாத நித்யமான உடம்புடையனாகை. * ஆதியஞ்சோதி யுருவை யங்குவைத் திங்குப்பிறந்த. * யத்ராவதீர்ணம் க்ருஷ்ணாக்யம் பரம் ப்ரஹ்ம நராக்ருதி * அவனுக்குப் பிறக்கையாகிறது அத்தை நாம் பிறவாதபடி ஸஜாதீயமாக்கிக்கொண்டு தோன்றுகை.

புந்நாம்நோ நரகாத் த்ராயத இதி புத்ர: * என்கிறபடியே இவர்கள் தாளில் தளைகழலப்பிறந்தபடி என்றும். [பிறவி நமக்கென்றுகொல்] நம்பிறவியாக விலக்கப்படும். * அறுவர்தம் பிறவி அஞ்சிறையே * அவன் பிறப்புகூட்டும்; நீங்க நம்பிறப்பு. ப்ரபத்தியாவது இந்த ஜ்ஞாநமே. நம்முடைய கர்மம் அவனை நம்மோடே ஸஜாதீயனாக்கும். அவனுடைய க்ருபை நம்மை அவனோடே, * பரமம் ஸாம்ய முபைதி* என்று ஸஜாதீயராக்கும் * பிறந்தவாறும். (மகனாய்ப் பிறந்து) பிறக்கைதவிராதாகில் தமப்பனானாலோவென்னில்; தன்னுடைய பிறவி விஸஜாதீயத்துக்குப் போராதபின்பு ஆராய்ப் பிறக்கிலென் னென்னுமாம்.

(ஒருத்தி) இந்நாளென்னாதே தங்கள் பயத்தாலே மறைத்துச் சொல்லுகிறார்கள். * அத்தத்தின் பத்தாநாள். என்னுமவர்மசுளிறே. (பிறந்து) ஆவிர்ப்பவித்தாலாகாதோ! பன்னிரண்டுமாஸம் வயிற்றிலேயிருந்து பிறக்கவேணுமோ:



* தேவகீபூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம் மஹாத்மநா வி. பு. 5-3-2 என்று பிறந்தானென்கை. அவத்யமென்று பரிஹரித்தான் ருஷி. அதுதான் அவத்யமென்று * பிறந்தவாறும்* என்றும் *பிறக்கவல்லன்* என்றும் சொல்லுகிறார்கள். (ஓரிரவில்) நாய்க்குடலுக்கு நறுநெய் வகுக்குமோ? ஸம்ஸாரிகள் பொல்லாங்கு அவனை ஓரிராத்தங்கிப் போகவொட்டிற்றில்லையென்கை. அவ்விரவோடொக்கு மிரவுமில்லை; பகலுமில்லை. மாதாபிதாக்கள் கைவிட்டவளவிலே கைதந்தாத்ரி. பிறவாநின்றால் கண்காணவந்து பிறந்து தூர்யம் கொட்டப்பெறா தொழிவதே. (இரவு) காலக்ருத பரிணாமமில்லாத தேசத்திலே வர்த்தித்த இவன் காலக்ருத பரிணாமமான தேசத்திலே பிறந்தால் பெறுவதும் பெறாதொழியவேணுமோ.

(ஒருத்திமகனாய்) இருவருமிவனைப் பெறவேணும் என்று ஆச்ரயிக்க, அவளுக்கு அவதார ரஹஸ்யத்தைக் காட்டிக்கொடுத்து இவளுககு லீலாரஸத்தை அனுபவிப்பிக்கிறபடி. *அம்சாவதாரோ ப்ரஹ்மர்ஷே யோயம் யதுகுலோத்பவ வி. பு. 5-1-2* என்றருஷிதானே,*கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி வி பு.5-20-49.* அவள் கரும்பின் கேழைக்கொண்டவோபாதி, இவளுக்குக் கரும்பின் நடுவைக் கொண்டாப்போலேயிருக்கிறது. * ஆப்புண்டு தீங்கரும்பு. அங்கு ஈச்வரத்வ லக்ஷணத்தோடே பிறந்தது. பிறப்பில் புரையற்றாப்போலே இவள் மகனானவளவிலும் பிறப்பில் புரையற்றிருக்கை. (ஒளித்துவளர) கம்ஸாதிகளுடைய விஷத்ருஷ்டிகள்படாமே. நாட்டார் செய்வன செய்யப்பெறாதே களவுபட்டது படுவதே. அந்தர்யாமியாய்ப்பட்டது பட்டான். உள்ளேயிருக்கச்செய்தே இவனில்லையென்று எழுதி எழுத்திடுமவன் முகங்காண ஸம்மதிக்குமோ? பிச்சேறின ப்ரஜை தாய்முன்பே நிற்கில் தாயைக்கொல்லும்; அவள் பேரநிற்கில் தன்னை முடித்துக்கொள்ளும். அதுக்காக முகம் தோற்றாதேநின்று நோக்குமாபோலே இவனும் முகம் தோற்றாதேநின்று இரண்டு தலையையும் நோக்குகிறான். இசைந்து 'அம்மே' என்றால் 'அடியேன்' எனகைக்குக் கிட்டவிருக்கிறான்.

(தரிக்கிலானாகி) நாரதாதிகள் 'க்ருஷ்ணன் வளரா நின்றான்' என்று சொல்லக்கேட்ட பின்பு தரிக்கமாட்டிற்றிலன். *38 திண்கொளசுரரைத்தேயவளர்கின்றான். ஈச்வரஸத்தையும் பொறாதொழிகை. (தான் தீங்கு நினைந்த) * 2697 எத்திறம் என்று அங்குத்தைக்குப் பரியவேண்டும் விஷயத்திலே தீங்கு நினைத்தது துஷ்ப்ரக்ருதியாகையிறே

(தான் தீங்கு நினைந்த) உத்தரக்ஷணத்திலே படப்புகுகிறதான். ‘தீங்கு’ என்கிறது அப்பொல்லாங்கு தன்வாயால் சொல்லமாட்டாமை. * அஸ்மாந்ஹந்தும் நஸம்சய: ஸ்ரீ.யு. 17-5. *3032 மாய்த்தலெண்ணி. தங்களை நலிந்ததாயிருக்கை. பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும் வில்விழவுக்கென்றழைத்தும் நலியத்தேடினபடியும்.

(கருத்தைப் பிழைப்பித்த) அவன் நினைத்ததைப் பிழைக்கப்பண்ணிவித்து அந்நினைவை அவனோடே போக்கினபடி. (கஞ்சன்வயிற்றில் நெருப்பென்ன நின்ற) ஆச்ரிதர் வயிற்றில் நெருப்பை அவன் வயிற்றில் புகவிட்டபடி. (நெடுமாலே) இதெல்லாம் படவேண்டிற்று ஆச்ரிதர் பக்கல் வ்யாமோஹத்தாலேயென்கை. வஸுதேவதேவகிப் பிராட்டிகள் பக்கல் திருவுள்ளமன்றே. தாயார்க்கும் தமப்பனார்க்கும் செய்தனவில்லை. அவர்களையுமொளித்துச் செய்யுமவர்களன்றோ நாங்களென்கை. (உன்னை) அர்த்தித்வத்தால் நிரபேக்ஷனான உன்னை. (உன்னையருத்தித்து வந்தோம்) உன்னைப் பெறவிருக்கிறோம். பிச்சன்மேலே பிச்சேற்றவந்தோம். ஸ்ரீவைகுண்டத்தில் நின்றும் இரப்பாளனாய் இவ்வளவும் வந்தவனிறே. எங்கள் வடிவைப்பாராய். * மாசுடையுடம்பித்யாதி. (பறைதருதியாகில்) தாழ்ந்தார் உயர்ந்தாரை ‘திருவுள்ளமாகில் செய்’ என்னுமாபோலே. உன்னழகாலே எங்களை மயக்கத்தைப் பண்ணாதே செய்தருளப்பார்த்தாயாகி லென்னுமாம்.

(திருத்தக்க செல்வமும்) திருவுக்குத்தக்க செல்வம். *யஸ்யஸா ஜநகாத்மஜா, அப்ரமேயம் ஹி தத்தேஜ: *ஸ்ரீ.ஆ.37-18 என்கிறபடியே. (திருத்தக்க செல்வமும்) பிராட்டியாசைப்படும் ஸம்பத்து.* 1608 திருவுக்கும் திருவாகிய. *ச்ரிய: ச்ரியம் ஆ. 45* (சேவகமும்) இதைக்காற்றாட்டவல்ல வீர்யம். (பாடிவருத்தமும் தீர்ந்து) வருத்தம் உன்னை நீ கண்டறியாயே. பிரிந்தார் படும்பாடு பாராயென்கை. (பாடிவருத்தமும் தீர்ந்து) கைவல்யம்போலே துக்கநிவ்ருத்தியன்று. தேட்டம். ப்ரீதிக்குப் போக்கு விடும்படியாகை. பறை தருதியாகில் உன்னையருத்தித்து வந்தோம். 25

மாலே! மணிவண்ணா! மார்கழிநீராடுவான்
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன
பாலன்னவண்ணத்து உன்பாஞ்சசன்னியமே
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே



கோலவிளக்கே கொடியேவிதானமே
ஆலினிலையாய்! அருளேலோரெம்பாவாய். 26

இருபத்தாறும் பாட்டு.—பெண்காள்! உங்களுக்கு அபேக்ஷிதமென் என்று க்ருஷ்ணன் கேட்க, நோன்புக்கு வேண்டுமுபகரணத்தைச் சொல்லி அவற்றைத் தரவேணுமென்கிறார்கள்.

(மாலே) தங்கள் பக்கலிலே பண்ணின வ்யாமோஹமிருக்கிறபடி. இவர்கள் பேச்சுக் கேட்டபின்பு பண்டையிலும் பிச்சன்மேலே பிச்சாயிற்று. பண்டு ‘ஸர்வேச்வரன் நிர்வாஹகன் ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தி’ என்றிருப்பர்கள். இப்போது இத்தத்வத்தை அழகிதாக நிலையிட்டாள்: வாத்ஸல்யமே ஸ்வரூபம் என்றபடி. பிராட்டி சக்ரவர்த்தி திருமகனை, * சரணாகதவத்ஸல: ஸ்ரீ. ஸு. 21-20 என்று ஸ்வரூபத்தை நிலையிட்டாள். அதுவே ஸ்ரீராமாயணத்துக்குள்ளீடான ப்ரதாநகுணம். இங்கு இவர்கள் ‘சரணாகதபக்ஷபாதி’ என்று நிலையிட்டார்கள். இதுவே மஹாபாரதத்துக்குள்ளீடான ப்ரதாநகுணம். (மணிவண்ணா) அபரிச்சேத்யனாயிருக்கச் செய்தே முன்றானையிலே முடியிலாம்படியிருக்கும். (மணிவண்ணா) பிச்சு வடிவிலே தெரிந்திருக்குமென்னுமாம். (மணிவண்ணா) பெண்கள் பிச்சுக்கு நிதாநம். *639 மாலாய்ப் பிறந்த நம்பியைமாலே செய்யும் மணாளனை* நீர்மையின்றிக்கே காதுகனானாலும் விடவொண்ணாத வடிவழகென்று. (மாலே) ஸ்ரீவிபீஷணாழ்வான் *விபீஷணோ மஹாப்ராஜ்ஞோபூமிம் ஸமவலோகயந் ஸ்ரீ. யு. 19-1* என்று பெருமாளைக் கிட்டினபின்பு, ‘விபீஷணன் நம்மைக் கைக்கொண்டு நம்மை உளோமாகப் பண்ணவல்லரே’ என்று தானிருந்தவிருப்பை பெருமாள் நினைத்திருந்தமை முகத்திலே தோற்றியிருந்தது. முற்பட்ட நினைவுககு ருஷி *உவாச மஹாப்ராஜ்ஞ: என்றான். பிற்பட்ட பெருமாள் ப்ரக்ருதியை யறிந்தபடிக்கு * விபீஷணோ மஹாப்ராஜ்ஞோ பூமிம் ஸமவலோகயந் * என்றபடியே நிலையிட்டார்கள் இவர்களும். * நாராயணனே நமக்கே பறைதருவான் என்றிருந்தார்கள். பெண்கள் நம்மைக் கடாக்ஷிப்பது காண் என்று இருந்த விருப்பைக்கண்டு தலை சீய்க்கிறார்கள். நீங்கள் வந்ததென்னென்ன, வந்த காரியத்தை இருவரும் மறந்தார்கள். இருவர் நெஞ்சையும் கல்லாலேயன்றோ பண்ணிற்று, ஆகிலும் இவர்கள் விடார்களிறே. இவர்கள் அவனுககு வரிசைகொடுக்கிறார்கள். *வைதேஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயாஸஹ ஸ்ரீ. அ. 94-18 * அவை மாறிநிற்கிறபடி.

(மார்கழி நீராடுவான்) மார்கழி நீராடுகைக்கு உபகரணம் வேண்டிவந்தோமென்ன, அங்கி கைப்பட்ட விடத்திலும் அங்கம் கைப்படாதொழிவதே. நாஸ்திகரைப்போலே மார்கழி நீராட்டாவதென்னென்ன, நீ இதறியாயோவென்ன, * ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத * என்கிறபடியே ஸித்தமாயிருந்ததோவென்ன, எங்களுக்கு ஸ்வர்காதிகளில் ச்ரத்தையுண்டோவென்ன, * நிதித்யாஸிதவ்ய: * என்கிறப்போலே தானுண்டோவென்ன, ப்ரமாணங்கள் பலத்தில் பலிக்கிலும் பலிக்கும், தவிரிலும் தவிரும்; * யத்யதாசரதிச்ரேஷ்ட:* என்று பூர்வர்கள் அநுஷ்டித்துப் போந்தார்களாகையாலே பலத்துக்கழிவில்லை. அதுவேயுமன்று நீ இறையிறை அறிவதொன்றன்று.

(மேலையார் செய்வனகள்) என்ன; தப்பச்சொன்னோம் நம்மைக் கோபியாதே வேண்டுவன சொல்லலாகாதோவென்றான். (வேண்டுவன கேட்டியேல்) உன் அங்யபரதை கேட்டால் சொல்லவேணுமே யென்ன, அஞ்சுலக்ஷம் குடியில் பெண்கள் உன்முன்னேபுகுந்து நிற்கையாலே ஆனைக்குப் பாடுவாரைப்போலே எங்கள் வார்த்தைகேளாதே இவர்கள் கண்ணிலும் முலையிலும் இடையிலும் வடிவழகிலே மண்டினானென்கை. இவர்கள், உன் காரியத்துக்கு வந்தோமோ; எங்கள் காரியத்துக்கு வந்தோமென்ன; உங்கள் வடிவழகு கண்ணுக்கிலக்கான வோபாதி உங்கள் வார்த்தை என்செவிக் கிலக்கன்றோ; அது என்கார்யமன்றோ, சொல்லிகோளென்ன.

(ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன பாலன்ன வண்ணத்துன்பாஞ்ச சன்னியமே போல்வனசங்கங்கள்) இடமுடைத்தாய் உன் திருமேனிக்குப் பகைத்தொடையாம்படியாய் பாலைத்திரட்டினாப்போலே யிருக்கிற நிறத்தையுடைத்தாய், *ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் கீதா. 1-19. * என்கிறபடி யன்றிக்கே நின்று முழங்கக்கடவதுமாய் பல சொல்லுகிறதென், உன்கையில் ஸ்ரீ பாஞ்சஜந்யம்போலே யிருப்பன பல சங்கங்கள் வேணுமென்கிறார்கள்.

(போய்ப்பாடு) இடமுடைமை; பெருமை, புகழென்றுமாம். ருக்மிணிப்பிராட்டி மற்றையார்க்கு உதவினதென்கிற புகழ். 595 * பூங்கொள்திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும் * இத்யாதி. இதொன்று, இனியோவென்ன, (சாலப்பெரும்பறையே) ஒரு மண்ணளவில் த்வநிக்கையன்றிக்கே எங்கும் கேழ்க்க த்வநிப்பதொரு பறைவேணும். * யயௌ தூர்யநிநாதேந பேரீணாஞ்ச மஹாஸ்வநை:*. பின்னையோவென்ன,



(பல்லாண்டிசைப்பாரே) திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு போவார் வேணுமென்ன, பின்னையோவென்ன;

(கோலவிளக்கே) மங்களதீபம் வேணுமென்ன; பின்னையோவென்ன, (கொடியே) திருக்கொடி யாடவேணுமென்ன; பின்னையோவென்ன, (விதாநமே) மேல்கட்டு வேணுமென்ன; பெண்காள், நீங்களிட்டதிவை நம்மால் செய்யலாயிருந்ததில்லை யென்ன;

(ஆலினிலையாயருள்) ஸர்வலோகத்தையும் தன் சிறுவயிற்றிலேவைத்துப் பவனாயிருப்பதோராலிலையிலே கண்வளர்ந்திருக்கிற உனக்கு முடியாததுண்டோ? பெண்காள்! தந்தோ மென்னு மித்தனையன்றோ வென்கிறார்கள். புறம்பு தன்னைப்போலே யிருப்பதொரு தத்வமுண்டாகிலிறே தன் கையில் சங்குபோலே யிருப்பதொரு சங்குண்டாவது. *607 தாமுகக்கும் தம்கையில் சங்கமேபோலாவோ *என்று இவளுகந்த சங்குதன்னைக் கொடுத்தான். *பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க 'கன்றப்பறைகறங்க' என்று மரக்கால் கூத்தாடுகிறபோது அரையில் கட்டின பறையையும் பறையடிக்கைக்கு ஸ்ரீ ஜாம்பவான் மஹாராஜரையும் கொடுத்தான். திருப்பல்லாண்டு பாடுகைக்கு *2 அடியோமோடும் நின்னோடும் என்றுதிருப்பல்லாண்டு பாடும் பெரியாழ்வாரையும், பாகவதஸம்ருத்திக்கு * 3128 பொலிகபொலிக என்னும் நம்மாழ்வாரையும் கொடுத்தான். மங்கலதீபத்துக்கு உபயப்ரகாசகையான நப்பின்னைப் பிராட்டியைக் கொடுத்தான். கொடிக்கு பெரியதிருவடியைக் கொடுத்தான். விதாநத்துக்கு திருவவதரித்தவன்று தன் பணத்தையிட்டுக் கவித்துக்கொண்டு போந்த திருவநந்தாழ்வானைக் கொடுத்தான்.

(ஆலினிலையாய்) எல்லாம் கொடுத்தாலும் தன்னைக் கொடுத்ததாகாமையாலே அத்தவாளத்தையும் கொடுத்தான். எல்லாத்தையும் கொடுத்தாலும் தன்னையொழிய ஓரடியிடாத பெண்களாகையாலே, * நயாமி பரமாம் கதிம் * என்கிறபடியே அத்தவாளத்தலையைக் கவித்துக்கொண்டு போனான் என்றும், * கள்வன் கொல்லிப் பிராட்டியைப் போலே ஒளித்துக்கொண்டு போகவேண்டாவோ; அது வேண்டாவே; ஊர் இசைந்ததே, * அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* ஸ்ரீ. அ. 31-25 என்கிறபடி ஒருவனே எல்லா வடிமையும் செய்வானையுடையனாய் நின்றால் *2134. சென்றால் குடையாம் *என்கிறபடியே எல்லாவடிமையும் செய்யவல்ல ஒருவனையும் கொடுத்துவிடாதே நித்யவிபூதியிலுள்ளாரையும் கொடுக்

கிற தென்னென்னில்; எல்லாரும் ஸ்வரூபலாபம் பெறு கைக்காக. 26

††கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா !, உன்தன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம்
நாடுபுகழும்பரிசினால் நன்றாக
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம்
ஆடையுடுப்போமதன்பின்னேபாற்சோறு
மூட நெய்பெய்து முழங்கைவழிவார
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். 27

இருபத்தேழாம் பாட்டு :—கீழ் தன் ஸ்வரூபஸித்தியைச் சொல்லிற்று. இப்போது அவர்களை அலங்கரிக்கும்படி சொல்லுகிறது.

(கூடாரை வெல்லும்) தாங்கள் பட்ட இடரை அறிவித்து அத்தலையைத் தோற்பிக்க நினைத்தார்கள். அவன் தன் தோல்வியைக் காட்டி அவர்களைத் தோற்பித்தபடியைச் சொல்லுகிறது. எங்களைத் தோற்பித்த நீ யாரை வெல்லமாட்டா யென்கிறார்கள்; அதாவது, நாங்கள்வந்து உன்முன்னே நின்று வார்த்தை செல்லும்படி பண்ணினாய். ஆந்தனையும் பார்த்தால் *ந நமேயம் என்ற கூடாரைவெல்லுமத்தனை; கூடினார்க்குத்தான் தோற்குமித்தனை. (சீர்) எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. கூடுவாரை சீலத்தாலே வெல்லும். கூடாதாரை சௌர்யத்தாலே வெல்லும். அழகுக்கும் அம்புக்கும் இலக்காக்கும்; அஜ்ஞரை ஸர்வஜ்ஞராக்கும். ஸர்வஜ்ஞரை 'எத்திறம்' என்னப் பண்ணும் *ஸத்யேந லோகாந் ஜயதி ஸ்ரீ.அ. 12-29. * இத்யாதி. அம்புவாய் மருந்தூட்டித்தீர்க்கலாம். இதுக்குப் பரிஹாரமில்லை. நீர் கொன்றாப்போலே. * 2614. நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து என்னைக்கடவதிறே. சத்ருக்களை வில்லைக் காட்டிக் கொல்லுமத்தனை. *சசால சாபம்ச முமோச வீர: ஸ்ரீ.யு. 59-140. என்று விற்பிடித்தபிடியைக்கண்டு வில்லை ராவணன் பொகட்டான், பின்னை வில்லெடாதே யொழிந்தானாகில் பெருமாளைவென்றே போகலாயிற்று. வில்கை வீரன் பெருமாள். வெறுங்கைவீரன் ராவணனென்றான் ருஷி. (கோவிந்தா) பசுக்களுக்கும் தோற்குமவன். கூடுவோமென்னும் அபிஸந்தி இல்லாதாரையும் ரக்ஷித்தபடி.

(உன்தன்னைப்பாடி) விலக்கினவது பெற்றபடி "ஹிரண்யாயநம:" என்கை தவிர்ந்து உன்பேர் சொல்லப் பெறுவதே யென்கை. (உன்தன்னைப்பாடி) பெண்கள் புணர்ப்பே தாரகமாகப் பாடித்திரியுமுன்னைப் பாடுகையே



ப்ரயோஜநம் போருமென்னுமாம். (சீர்) சீலவத்தையின் மிகுதியாகவுமாம். (பறைகொண்டு) ப்ராப்யத்திலே ப்ராபகவ்யவஹாரம்; உங்களுக்குப் பறையென்கிறது. (யாம் பெறு சம்மானம்) தங்கள் பேறு. இவ்வளவிலே வெளித் திருமுற்றத்தில் நின்றும் ப்ரஸாதம் கொண்டொருவன்வர, 'இது யாம்பெறு சம்மானம்வந்தது' என்று பட்டர் அருளிச்செய்தார். * பதிஸம்மாநிதா ஸீதா ஸ்ரீ.அ. 16-21. என்று 'தோளில் மாலையைவாங்கி யிட்டார்' என்று ஆழ்வான் பணிக்கும். பட்டர் 'ப்ரணயித்வத்தாலே காலைப்பிடித்து நில் என்றார்' என்பர். *தாம்ப்ரீதி த்வதுபஸம்ச்ரயணாந் நிராஹு: ஸ்ரீ.வை. 27. என்று கொடுத்தால் தட்டென் என்கை. (யாம் பெறுசம்மானம்) அநாதிகாலம் எல்லாராலும் பட்ட பரிபவம் மறக்கும்படி அவன் கொண்டாடும்படி சொல்லுகிறது.

(நாடுபுகழும் பரிசு) * பாரோர் புகழ* என்னும்படியே ஒருவன் கொடுக்கும்படியே, சிலர் பெறும்படியே என்று கொண்டாட; ஸஞ்ஜயனும் சுகஸாரணர்களும் இவனுடைய ஆச்ரிதபக்ஷபாதத்தைப் புகழ்ந்து போனாப்போலே. (நன்றாக) நாடுசிரிக்கும்படி. காலங்கொண்ட பொன்னையிட்டு ஆபரணம் பூண்கையன்றிக்கே, *ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பாமிநி ஸ்ரீ.யு 131-82. * என்று இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப்பெருமாள் பிராட்டிக்குக் கொடுக்க, அத்தை ஒருகையிலே பிடித்து, பெருமாளை ஒரு கண்ணாலும் 'இத்தை இவனுக்குக் கொடுப்பது' என்று திருவடியை ஒருகண்ணாலும் பார்க்க; பெருமாள் அத்தையறிந்தருளி, 'ஆச்ரிதரையறிவாய் நீயன்றோ, கொடுக்கலாகாதோ' என்றருளிச்செய்யக் கொடுத்தாப்போலே, இருவரும் கூடிக்கொடுக்கும் ஆபரணமென்கை. *தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி* என்று விரஜைக்கு அக்கரைப்பட்டாரை எம்பெருமான்தன்னை யொப்பிப்பாரையிட்டு ஒப்பிக்கக்கடவது. இங்கு அங்ஙனன்றியே தானும் பிராட்டியுங்கூட ஒப்பித்த தன்னேற்றம் சொல்லுகிறது (நன்றாக) ஆபரணத்தைப் பூண்டு அவர்வரவுபார்த்திரா தொழிகை யென்னுமாம்.

(சூடகமே) *வெள்ளி வளைக்கைப்பற்ற* என்கிறபடியே அநந்யார்ஹைகளாகப்பிடித்த கைகளிலேயிறே முதலாபரணம் பூட்டுவது. * 3694. அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் * என்னுமாபோலே, அவனும் சொல்லி மார்பிலும் தலையிலும் வைத்துக்கொள்ளும் கைக்கு இடும் சூடகம். மூந்துறத்தான் உறவுபண்ணுமிடம். * 561 கைத்தலம் பற்ற*(தோள்வளையே) அத்தலையில் ஸ்பர்சமேயணைக்கவேண்டியிருக்கையாலே அணைத்ததோளுக்குத் தோள்

வளையுமென்கை. (தோடே) அணைத்தாலுறுத்துமவை. *ப்ரியாவதம்ஸோத்பலஆ. 33*2073 கண்டேன் கனமகரக்குழையிரண்டும் நான்கு தோளும்* என்னும்படியே. (தோள்வளையே தோடேசெவிப்பூவே) செவிப்பூ - ஆக்ராணம் பண்ணுமிடம். கண்ணுகவுமாம்.

(பாடகமே) அணைத்தால் துவண்டுவிழுமிடம். *அஸிதேக்ஷணேயாகையாலே,*ஜிதம் தேபுண்டரீகாக்ஷ* என்று அவன் தோற்று விழுமிடம். (அனையப்பல்கலன்) பருப்பருத்தன சிலசொன்ன வித்தனை. நீயறியுமவையெல்லாம் வேணுமென்கை *2834 பலபலவேயாபரணமிறே. இத்தசையிலே யிருந்தெண்ணப்போமோ (யாமணிவோம்)* மலரிட்டு நாமுடியோம் என்னுமிவர்கள் அநுமதி பண்ணவுமமையுமென்கை.

(ஆடையுடுப்போம்) பண்டு உடார்களோ வென்னில், (கோவிந்தா உன்னைப் பாடியாடையுடுப்போம்) ஒருத்திக்குப்புடவை கொடுத்தது இவர்களுக்குச் செய்யச்சொல்லவேணுமோ? அவன்உடுத்த உடாதது உடையன்றென்றிருக்கை. அதாவது கூறைமாறுடுகை. *3539 புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று, அப்பன் திருவருள் மூழ்கினள்* என்னும்படியே அவனோட்டைஸம்பந்தமே இவர்கள் நன்மைக் கெல்லாமடி. [புதுக்கணிப்பும்] அவனுகப்பொழிய தங்களுகப்புப் பொகட்டபடி. நோன்பு முடிக்கையாலே நல்லபரியட்டமுடுக்க வென்னுமாம் *9. உடுத்துக்களைந்த என்னுமவர்களிறே. (அதன்பின்னே பால்சோறு மூடநெய் பெய்து முழங்கைவழிவார) பகவத்ஸம்பந்த முண்டான திருவாய்ப்பாடியில் ஸம்ருத்திகளெல்லாம் இவர்களுக்கு ப்ரியமாயிருக்கிறபடி. நம்பிதிருவழுதிவளநாடுதாஸர், “நெய்வாயில்படாதோ” என்ன, “ஓரவிழ்வாயில் தொங்கிலன்றோ நெய் வாயில்படுவது” என்று பட்டர் அருளிச்செய்தார். க்ருஷ்ண ஸந்நிதியாலே த்ருப்தைகளாயிருக்கிறார்கள். பால்தொங்கிலன்றோ நெய்தொங்குவது. ‘நெய்யுண்ணோம் பாலுண்ணோம்’ என்றது தனியாகை.

(கூடியிருந்து) தனியே புஜிக்கக்கடவதன்று. உண்கையுத்தேச்யமன்று. பிரிந்துபட்ட க்லேசம்தீரக்கூடத் தொட்டுக் கொண்டிருக்கையே ப்ரயோஜனம். ‘நம்பெருமாள் திருநாள்’ என்று ஒருபேரையிட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களையடையத்திரட்டிக் காணுமாபோலே. *ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா* அஹமந்நமித்யாதி. ஒரு



வர்க்கொருவர் போக்யமாகை. (குளிர்ந்து) பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் வவ்வலிடும்படி. 27

††கறவைகள்பின்சென்று கானம்சேர்ந்துண்போம்
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து, உன்தன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம்
குறைவொன்றுமில்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல்நமக்கு இங்கொழிக்கவொழியாது
அறியாதபிள்ளைகளோமன்பினால், உன்தன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே
இறைவா! நீதாராய் பறையேலோரெம்பாவாய். 28

இருபத்தெட்டாம் பாட்டு:— பெண்காள்! நீங்கள் சொன்னவை நாட்டுக்கு; உங்கள் அபிஸந்தி இவ்வளவென்று தோற்றியிருந்ததில்லை. நீங்கள் சொன்னவையும் இன்னும் மேல் சொல்லுமவையும் உண்டாகில், நாம் தருமிடத்தில் உங்கள் பாடே நாமும் சிறிது பெற்றோமாக வேணும்; அதுக்கு உங்களுக்குள்ள தென்னென்ன; உனக்கு உதவுவதாவது எங்கள் பக்கல் ஒன்றுமில்லை. நாங்கள் பண்டு தப்பச் சொல்லிற்றினவுண்டாகில் பொறுக்க வேணுமென்று க்ஷமைகொள்ளுகிறார்கள். முதற்பாட்டில் ‘நாராயணனே நமக்கே பறைதருவான்’ என்று ஸங்க்ரஹேண சொன்ன ப்ராப்யப்ராபகங்களை இந்த இரண்டு பாட்டாலே விவரிக்கிறது. இப்பாட்டு உபாய விவரணம்.

(கறவை) உங்கள் ஸ்வரூபம் ஏதென்ன, இன்னதென்கிறார்கள். பட்டர் அருளிச்செய்யும் பாட்டையும் இங்கே நினைப்பது. (கறவைகள்) அறியாமைக்கு கன்று காலிமேய்க்கை. [ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ்ஸமாந:] அறிவில்லாதாரை பசுக்களோடொப்பரென்னக்கடவது. (பின் சென்று) பின்னென்று தாங்கள் குருகுலவாஸம் பண்ணும்படி சொல்லுகிறார்கள். [ராவணோ நாம] ஸ்ரீயு. 17.12 பரஹிம்ஸையிலே பேர்படைத்தவன். [துர்வ்ருத்த:] பேர் மாத்ரமேயாய் ஸதசாரமுண்டோவென்னில் அதிலும் புரையில்லை. [ராக்ஷஸ:]ஜந்மத்தால்வரும்நன்மையுண்டோவென்னில்,அதுவுமில்லை. காட்டிலே புக்குநோக்கினாலும் திருத்தப்போகாது. [ராக்ஷஸாதிப:] நியாம்யனோவென்னில், இவன் தனக்கு எல்லாரும் நியாம்யர். (கானம் சேர்ந்து) ஊர் கண்டறியோம். (உண்போம்) ருஷிகளைப்போலே தபஸ்ஸு பண்ணுகைக்கல்ல. (சேர்ந்துண்போம்) நடந்து நடந்து உண்ணுமத்தனை. எங்களைப்பார்க்க பசுக்கள் வஸிஷ்டாதிகளோடொக்கும். எங்கள் இளிம்புகண்டால் சிரிப்பன பசுக்களாயிற்று. *க்ருதாநுகாராநிவ கோபிரார்ஜவே* என்று பசுக்கள் அசுக்

காட்டும் ஆர்ஜவம் எங்கள்படியென்கை. இத்தால் கர்ம யோகத்தில் அதிகாரமில்லையென்றபடி.

(அறிவொன்றுமில்லாத) இஜ்ஜந்மத்தில் ஒரு ஸுக்ருத மில்லையாகிலும் ஜந்மாந்தரத்தில் புண்யத்தைப் பண்ணி அத்தாலே விதுராதிகளைப்போலே இஜ்ஜந்மத்திலே அறிவுண்டாமதுவுண்டோவென்னில், அதுவுமில்லையென்கிறார்கள். (ஒன்றுமில்லாத) ஈச்வரஜ்ஞாநத்துக்கடியான ஆத்ம ஜ்ஞாநமில்லை. இத்தால் ஜ்ஞாநபக்திகளில்லையென்கிறது. * பக்திச்ச ஜ்ஞாநவிசேஷ: என்று, பக்தியாவது ஒரு ஜ்ஞாந விசேஷம். அதுவுமில்லையாகையாவது கீழிலவையுண்டாக வுண்டாமதொன்றாகையால் இதில்லையென்னுமிடம் சொல்ல வேண்டாவிறே. இவர்கள் அலமாப்பு பக்தியன்றோவென்னில், அது ஸ்வரூபமாகையால் உபாயமாக நினையார்கள். இத்தால் கர்மஜ்ஞாநபக்திகளில்லையென்கை. * அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சந:. * 3183 நோற்ற நோன்பிலேன் * *896 குளித்து மூன்று* நதர்மநிஷ்டோஸ்மி ஆ. 22 இவையன்றோ அறிவுடையார்வார்த்தை. அவர்களோடொத்திகோளென்ன; (ஆய்க்குலம்) அதிகாரமேயில்லை எங்களைக் கண்டுவைத்து அறிவுண்டோவென்று கேழ்க்கிற நீயன்றோ அறிவுகேடன். 'முதலில்லாதவன் பலிசையிழக்கும்' என்று சொல்லுகிற படியே புண்யமில்லாதார் இழக்குமத்தனையன்றோவென்ன.

(உன்தன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்) என் சொன்னாய், எங்களுக்கோ புண்ணிய மில்லாதது. * க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் * என்று எங்கள் புண்யத்துக்குப் பாலும் சோறும் இட்டு வளர்க்கிறோம் நாங்களன்றோ *உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் என்னும் படியான உன்னை. (பிறவிபெறுந்தனை) நாட்டார் ஆச்ரயணீயர் இருந்தவிடத்தே போய் ஆச்ரயிப்பார்கள். நாங்களிருந்தவிடத்தே எங்களோடே ஸஜாதீயனாய் ஆச்ரயணீயனாக நீ வந்து அர்த்திக்கும்படியன்றோ எங்களுடைய ஏற்றம். எங்கள் புண்யம் முதலில்லாதார்க்கு முதலும் பலிசையும் பலிக்கும் புண்யங்காண். (புண்ணியம் யாமுடையோம்) ஸாத்ய தர்மத்தைப்பற்றினோமோ? ஸித்தமுமாய் வடிவுள்ளதொரு தர்மத்தைப்பற்றினோம் இதுவோ எங்களுக்குக்குற்றம்.

(குறைவொன்றுமில்லாத கோவிந்தா) உங்களுக்கு ஒன்றுமில்லையென்றிகோளே யென்ன; உன்னையுமில்லையென்றோமோ என்ன; உங்கள் பெருமைக்கு நாம் செய்ய வேண்டுவதென்னென்ன, ராஜாக்கள் வழிபோம்போது மேடுபள்ளமுமொக்கவிட்டு வழிபோமாபோலே உன்குறையில்லாமையை எங்கள் குறைவிலேயிட்டு நிரப்புவது. பெரு



மாள் கடலைத்தூர்த்து வழிபோனாப்போலே. (கோவிந்தா) அறிவில்லையென்றிகோளே யென்ன, நீயோ சாலவறிவுடையாயிருக்கிறாய். * ஸ.நா. அவிஜ்ஞாதாவன்றோ? உன்னை உணரில் பிறக்க விரகுண்டோ? கோல்கொண்டு பசுவின் பின்னே திரியவிரகுண்டோ.

(உன்தன்னோடுறவேல் நமக்கிங்கொழிக்கவொழியாது) நாங்கள் * அறிவொன்றுமில்லாத வாய்க்குலம். நீ *குறையொன்றுமில்லாத கோவிந்தன். ஆனபின்பு இனி இவ்வுறவு * விதிநிர்மிதமேததந்வயம் ஆ. 51* என்கிறபடியே. மேடு படக்கண்டது பள்ளத்தை நிரப்பவன்றோ? நாராயணத்வமொழிய தயாபூர்த்திக்கு தயநீயதாபூர்த்தியுண்டானபடியாகிற உறவு. எனக்கறிவுண்டென்றும் கண்டால் உங்களறியாமை போயிற்றோவென்னில்; எங்களறிவு கொண்டு கார்யமுண்டோ? உன்னோடுவிடவொண்ணாத குடல் துடக்கான உறவுண்டாயிருக்கவென்ன, உறவுண்டாயிருக்கச் செய்தேயன்றோ துர்யோதநசிசுபாலனுள்ளிட்டாரை விட்டதென்ன; உனக்கு விடவொண்ணாத பாண்டவர்களுக்காகக் கொள் எங்களையுமென்கிறார்கள். 'தங்கள் கருமம் தாங்கள் செய்கிறோம்' என்றிருப்பாரையன்றோ உனக்கு விடலாவது. எங்கள் கருமம் உன்னாலே என்றிருப்பாரை உன்னால் விடவொண்ணாது. அவர்கள் தங்களாலும் விடவொண்ணாதென்கை. எங்கள் வெறுமையும் உன் பூர்த்தியும் உணர்ந்த எங்களை விடவொண்ணுமோ என்னுமாம்.

(அறியாத) அநவதாநம். (பிள்ளைகள்) அஜ்ஞர். (அன்பு) தவிரவொண்ணாதாகையால் ப்ரக்ருதி. ப்ரக்ருதி உபாயபுத்தியாகிலிறே தப்பாவது; இம்மூன்றும் குற்றமாக நினைக்கவிரகில்லை. *மயா ப்ரமாதாத் ப்ரணயேநவாபி. (அன்பினாலுன்தன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே) 'நாராயணன்' என்று கோவிந்தாபிஷேகம் பண்ணி பூர்ணனாயிருக்கிற என்னை, சிறு பேர் சொன்னிகோளேயென்ன; நாராயணனென்கை குற்றமோவென்னில், நீர்மை ஸம்பாதிக்கப் பிறந்தவிடத்திலே மேன்மையைச் சொல்லுகை குற்றமன்றோ? அர்ஜுநனைப்போலே பொறைகொள்ளுகிறார்கள். ஒரு படுக்கையிலே யிருந்து 'கால்தாக்கிற்று கை தாக்கிற்று' என்று குற்றம் கொள்ளுவாரைப்போலே அன்புடையாரைக் குற்றம் கொள்ளப்போமே? பொறுத்தருளாய் என்கிறார்கள்.

(இறைவா) உன் ஸ்வரூபம் பெறவேண்டாவோ? (நீ தாராய்) ஸ்வீகாரத்தில் செய்தவற்றையும் நீ செய்து அநுதாபமும் நின்தலையிலே யாகவேணும். * ஏகம் என்ற

படி செய்தருளாய். (ஒழிக்க ஒழியாது) நன்மையுண்டாகி லன்றோ பழியிட்டுவிடலாவதென்றுமாம். (சீறியருளாதே) உபாயமென்று நினையாதே ப்ரக்ருதி வ்ருத்தியென்று கொள்ளவேணும். இத்தலைபற்றும் பற்றடைய சீற்றத்துக்கு விஷயம். இத்தலைக்குக் குறையும் அத்தலைக்கு ரக்ஷையும் ஸ்வரூபப்ரயுக்தம். (இறைவா) தன் கைகால் தப்பச்செய்ததென்று பொடிவாருண்டோ? (நீ தாராய்) விலக்குகைக்காளில்லை. நீ தருமித்தனை. 28

††சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்து, உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து, நீ
குற்றேவேலெங்களைக் கொள்ளாமற்போகாது
இற்றைப்பறைகொள்வானன்றுகாண்கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும், உன்தன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம்காமங்கள் மாற்றேலோரேம்பாவாய். 29

இருபத்தொன்பதாம் பாட்டு:— * எம்மா வீட்டிற் போலே ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறது. திருவாய்மொழியில் இப்பிரபந்தத்துக்கு வாசி மூந்துற*நெடுமாற்கடிமையில் அர்த்தத்தை அநுபவித்துக்கொண்டு, அது நிலைநிற்கைக்காகவும் அத்தைக் காற்றாட்டுகைக்காகவும்,பிற்பட *எம்மா வீட்டில் அர்த்தத்தோடே தலைக்கட்டுகிறது.

(சிற்றம் சிறுகாலே) *ப்ராஹ்மே முகூர்தேசோத்தாய சிந்தயேதாத்மநோ ஹிதம் *என்றும், * காலை நன்ஞானத்துறைபடிந்தாடிக்கண் போதுசெய்து மாலை நன்னுவில் கொள்ளார் நினையாரவர்மைப்படியே 570*என்றும்சொல்லுகிறபடியே இவர்கள் அநுஷ்டிக்கிறார்கள். [காலையாவது] ஆத்மாவுக்கு வெளிச்செறிக்குங்கால மென்னுமாம்; இக்கண்ணுக்கு இவ்வாதித்யன் வெளிச்செறிப்புப் பண்ணுமாப்போலே அகவாயில் கண்ணுக்கும் வெளிச்செறிப்புப் பண்ணக்கடவ ஆதித்யன் ச்ரிய : பதி. * பாஸ்கரேண ப்ரபா யதா*. [ஞானமாகிறது,*2148 ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு* என்கிறபடியே ச்ரிய:பதியே தனக்கு விஷயமாகவுடைய ஜ்ஞாநம். [நன்ஞானமாகிறது] ப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக அம்மிதுனமே நமக்கு பலம் தரக்கடவதென்று அத்யவஸாயம். [துறைபடிந்தாடுகை யாவது] குருபரம்பரையில் சொல்லுகிற க்ரமத்தாலே எம்பெருமானைப் பற்றுகை.

பகல் பரஹிம்ஸை பண்ணி இராவெல்லாம் மறந்து கிடந்து உருகி, வெடிந்தால் பரஹிம்ஸையிலே புகும். நடுவே



அல்பகாலம் ஸத்வம் தலையெடுத்து வெளிச்செறிப்புள்ள காலம்; மநஸ்ஸு ஸ்திரமாம் காலம். முன்பு தான் தனக்குக் கடவனாயிருக்கும். பின்பு எம்பெருமானுக்கு பரமாயிருக்குப். நடுவிலுணர்ச்சியிறே யிக்காலம். மாறனேர் நம்பி சரமதசையில் கலக்கங்கண்டு பயப்பட்ட பெரியநம்பிக்கு எம்பெருமானார் பயந்தீர அருளிச்செய்த ச்லோகங்களிவை. *ஸ்திதே மநஸீத்யாதி. இவை எங்ஙனேயென்ன. ஸ்ரீவராஹவெம்பெருமான் ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு அருளிச்செய்தாரென்றார். ஸ்ரீவராஹவெம்பெருமான் உம்மைப்போலே ஆச்ரிதபக்ஷபாதி; அவன் வார்த்தையொழிய என்போல்வார் மத்யஸ்தர் வார்த்தை யுண்டாகில் சொல்லுமென்ன, *நமே பக்தஃப்ரணச்யதி. கீதா 9.30* இத்யாதிகளடைய உம்மைப் போல்வார்வார்த்தையாகயிராநின்றதென்ன, இந்த ஜ்ஞாநமுடையவனுக்கு புநர்ஜந்மமில்லை என்னுமிடத்துக்கு ப்ரமாணமுண்டோ வென்ன, * த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந, கீதா 4-9. * என்று உண்டென்றருளிச் செய்தார். இவற்றைக் கொண்டு பெரிய நம்பி ப்ரீதரானார்.

அந்திமஸ்ம்ருதி யில்லையென் றஞ்சவேண்டா; புநர்ஜந்மமுண்டென் றஞ்சவேண்டா; இந்த ஜ்ஞாநமுடையவனுக்கு ஆளவந்தார் கோஷ்டியிலே, ஸம்ஸாரிக்கு எம்பெருமான் ஸந்நிதியில் விண்ணப்பம் செய்ய வடுப்பதென்னென்ன, சில முதலிகள், * மூடோயமித்யாதி க்ஷத்ரபந்துவின் ச்லோகத்தை விண்ணப்பம் செய்கை அழகிதென்ன, ஆளவந்தார் அதிலே பெருந்தேவையுண்டு, நமக்காவது *ஸோஹம்தே வி. பு. 5-7.70 என்கிற காளியன் ச்லோகமேயென்றருளிச்செய்தார். *2262. பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன்* என்னுடைய ஆதித்யனுதித்தான். அஸ்தமியாத ஆதித்யனையும் கண்டேன். உறங்காத வென்னையும் கண்டேன். முன்பு ஒரு போகியாக உறக்கம். பின்பு ஒருபோகியாக உணர்ச்சி. பெண்களாகையாலேசிற்றம்சிறு காலேயென்றபடி, வெட்ட வெடியாலே யென்னுமாபோலே. யோகிகளும் உணர்வதற்கு முன்னே, சிறுபெண்களான நாங்கள் உறங்கக்கடவ போதிலே உணரக்கடவ இத்தர்மஹாநியைப்பாராய். * என்னில் முன்னம் பாரித்து * என்று நீ உணரும் காலத்திலே நாங்களுணர்ந்துவந்தோமென்கை.

(வந்து) இரண்டு ஸ்வரூபத்தையு மழித்தோம். ஸ்வரூபம் நிலையிட்டவர்களிறே. (வந்து) *பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்சநேந ச ஸ்ரீ. அ 50-40 * என்னும் சொல்லுகையால் அவனிருந்தவிடத்தே நாலடியிட்டுச் செல்லில், இட்டயிட்டவடிதோறும் நெஞ்சுளுக்கும்; பொறுக்கமாட்டா

னென்கை. (வந்துன்னை சேவித்து) உன்னை வேண்டாதே ஸாதநகாலத்திலே ரஸிக்கிற உன்னைச்சேவித்து. * ஸுஸுகம் கர்த்துமவ்யயம் கீதா. 9-2. * அதுக்குமேலே ஒரு அஞ்ஜலி உண்டறுக்கமாட்டாத உன்னைச் சேவித்து. (உன்னைச்சேவித்து) அத்தலை இத்தலையாயிற்றே. ஸேவ்யரான நாங்கள் ஸேவகரானபடி. *ஸுக்ரீவம் நாதமிச்சதி ஸ்ரீ.கி.4-18 என்றும் காலம்பார்த்திருப்பார்; லங்கையில் சென்று ஸ்ரீ விபீஷணாழ்வானைக் காலம்பார்த்திருந்தவனன்றோ.

(உன் பொற்றாமரையடியே) ஆற்றாமை ஸ்வரூபமாகையால் அடைவுகெட மேல்விழுந்தபடி. (அடியே போற்றும் பொருள்) சூடவந்த பூவுக்கு விலையிடுவாரைப் போலே; உனதுபாலென்னுமாம். உபாயோபேயங் களிரண்டும் தானே. ஸ்வீகாரமாத்ரத்தில் நிற்கப்போகாமை போற்றுகிறபடி ருசிக்கவ்வருகுபட்டால் பலத்திலே மூளுமத்தனை. கவிழ்ந்து நிற்கச்செய்தே விண்ணப்பம் செய்கிறது. (கேளாய்) இவர்கள் அடியே போற்றா நிற்க, தான் இவர்கள் காலைப் பிடிக்கக் கணிசியாநின்றானென்கை. தாங்கள் முன்னேநிற்கில்வார்த்தைகேட்கவொண்ணாதோவென்கை.

(பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்தநீ) கேட்கப்புகாநின்றதோவென்ன, நீயன்றோ மூத்தீமைசெய்தாயென்ன; எங்ஙனேயென்ன; என்றும் கேட்டே போகக்கடவதான நீ வந்து இக்குலத்திலே பிறந்து இட்டீடுகொண்டு எளியனானையென்கை. நாங்கள் நீயிருந்தவிடத்திலே வந்து பிறந்தோமோ? வஸிஷ்டாதிகள் விலக்குமிடத்தே வந்தோமோ? (குற்றேவலெங்களைக் கொள்ளாமல் போகாது) பெரும்பசியிலே உண்ணப்புக்கவன் கலத்திலே கேசலேசங் கண்டால் பின்னையுண்ணாதே போகட்டுப் போமாபோலே சப்தாதி விஷயங்கள் தாரகமாயிருக்கிற எங்களை வடிவழகைக்காட்டி, *உண்ணும் சோறுபருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணனெம்பெருமான்* என்னப்பண்ணி ஸ்வரூபாநுரூபமான அடிமை தாராதே போகைக்கு உன்தரமோவென்கை. *உண்டிட்டாயினியுண்டொழியாய். நீர் விளாவிவைத்தோ போகப்பார்த்தது, *நிவேதயத மாம் க்ஷிப்ரம், அஹமந்ந மஹமந்நமஹமந்நம்* (எங்களை) *வைதர்ம்யம் நேஹவித்யதே* (போகாது) உன்தரமோ நாங்கள். நீதான் உனக்குரியையோ. *2748 என்னை நெகிழ்க்கிலு மித்யாதி. நாங்கள் நப்பின்னைப்பிராட்டி பரிகரம். ஆணையிட்டவர்கள் பெண்பிள்ளையன்றோ?

(இற்றைப்பறைகொள்வானன்றுகாண்) இவர்கள் சொல்லிற்றுக்கேட்டு, இவர்கள்நம்மை விடார்களாயிருந்தார்கள்;



நம்மைத்தடுத்தும் வளைத்தும் கொள்வர்களென்று, பறையையெடுத்துக் கொள்ளுங்கோளென்ன, *தேஹி மே ததாமி தே* என்று ஒருகையாலே கும்பிட்டு ஒருகையாலே ப்ரயோஜநம் கொண்டுபோமவர்களோ நாங்கள்! (கோவிந்தா) யதாச்ருதக்ராஹியாயிருந்தாய். 'கெடுவாய், நாங்கள் இற்றைப்பறை கொள்வானன்றுகாண்' என்று பட்டர் அருளிச்செய்த வார்த்தை. இடையனாகையாலே அபிதாநவ்ருத்திபோமித்தனை. தாத்பர்யவ்ருத்தி போகாதென்கை. *3239 போகுநம்பி என்று சொல்ல, வரநிற்குமவனல்லையோவென்கை. பசுக்களின் பின்னே திரிவார்க்கு ச்ரோத்ரியராகமுடியுமோ.

ஆனால் செய்யவேண்டுவதென்னென்ன, (எற்றைக்கும்) நகாலஸ்தத்ர வை ப்ரபு: என்று சொல்லுகிற பரமபதத்தில் போனாலும், (ஏழேழ்பிறவிக்கும்) இங்கே பிறந்தாலும் ஒக்கப்பிறக்கவேணும். க்ருஷ்ணனும் பெண்களுமாய் புறப்படில் அமையுமென்கை. அவனும் *எதிர்சூழல் புக்குஎன்று இவர்களைப் பெறவேணுமென்று முற்கோலிப்பிறவாநிற்குமென்னுமாம். இளையபெருமாள் படைவீட்டிலும் காட்டிலுமொக்க அடிமை செய்தாப்போலே. *தேவத்வே தேவதேஹேயம் மனுஷ்யத்வேச மாநுஷீ* ஆகவேணுமென்கிறார்கள்.

(உன் தன்னோடுற்றோமேயாவோம்) ஒருறவைக்குறித்து அதுவாகவேணுமென்னாதொழிந்தது - எல்லாவுறவும் நீயேயாகவேணுமென்கை. *மாதா பிதா ப்ராதா நிவாஸச்சரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:* என்றும், *க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:* என்றும், *3124 சேலேய்கண்ணியரும் இத்யாதிப்படியே. (உற்றோமேயாவோம்) உதிரத்தெறிப்புண்டாக வேணும். நாராயணஸ்த்வம். *பக்தா நாத்ம சரீரவத். இளையபெருமாள் வேலேற்றபோது நீபட்டாப்போலே உனக்கொன்று வந்தால் நாங்கள்முடியும் ப்ரக்ருதிகளாகவேணும். (உனக்கே) உனக்குமெனக்கும் பொதுவான அடிமையன்று. *2878 எனக்கேயாட்செய் என்னுமாபோலே ஆட்செய்யவேணும். ஸ்ரீ பரதாழ்வானைப் போலே கிடவென்ற விடத்திலே கிடக்குமவர்களன்று. இளைய பெருமாளைப் போலே,*அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று அடிமைசெய்து உஜ்ஜீவிக்க வேணுமென்கை.

(மற்றைநங்காமங்கள் மாற்று) கையும் திருவாழியுமாய், நாங்கள் தொழ மேன்மைகாட்டியிருக்க வொண்ணாது. நீ பெண்காளென்ன, நாங்கள் க்ருஷ்ணனேயென்று ஊடினார் சிறுமுற்றத்திலே உன்னை ஒரு பாச்சல் பாயவேணும். *பாவோ நாந்யத்ர கச்சதி ஸ்ரீ.உ. 40-14* என்றவனை இசைவித்

தாருண்டோ? எங்கள் வாஸனையாலும் உன்தோள் தடிப்பாலுமாகவேண்டா, உன் தரமாகாமலிருக்கிற இருப்பைத் தவிர்க்கவேணும். 29

††வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி
அங்கப்பறைகொண்டவாற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத்தண்தெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன
சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே
இங்கிப்பரிசுரைப்பார் ஈரிரண்டுமால்வரைத்தோள்
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால்
எங்கும்திருவருள்பெற்று இன்புறுவரேம்பாவாய். 30

முப்பதாம் பாட்டு. பெண்காள்! நீங்களும் நானும் அநுபவித்தோ! பிற்பாடரிழக்குமத்தனையோ வென்ன, அவர்கள் பெறும்படி சொல்லுகிறார்கள். ப்ரபந்தம் கற்றார்க்கு அநுஷ்ட்டித்தாரோபாதி பலம் ஸித்திக்கிறது. கன்றிழந்த நாகு தோற்கன்றை மடுத்த அதுக்கிரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டுபுக நமக்கும் பலிக்குமென்று பட்டர் அருளிச்செய்வர். 'வெடிவோறே யெழுந்திருந்து முப்பது பாட்டையுமநுஸந்திக்கல், அதுவும் மாட்டிற்றிலனாகில், சிற்றம் சிறுகாலே யென்கிற ஒருபாட்டையுமநுஸந்தித்தல், அதுவும்மாட்டானாகில், இன்றுநாமிருந்த விருப்பை நினைப்பது' என்று பட்டர் அருளிச்செய்தார்.

(வங்கக்கடல்) கீழுள்ள பதார்த்தம் மேலெழக்கடையாநிற்கச் செய்தே, கடலில் மரக்கலம் அலசாமல் கடைந்த நொய்ப்பம் சொல்லுகிறது. கடைந்தபோது சுழன்று வருகையால் கடலடைய மரக்கலமாய்நின்றபடி யென்னுமாம். க்ருஷ்ணனே ப்ரயோஜநாந்தர பரர்க்கும் கார்யம் செய்யும் சீலவானென்கை. (மாதவனை) ஆச்ரயணீய தத்வம் லக்ஷ்மீஸநாதமா யிருக்குமென்கை. தாய் முன்பு பிதாவுக்கு ப்ரஜை செய்த குற்றம் பொறுக்கவேண்டுமா போலே, ஆத்மாவின் குற்றம் பொறுக்கைக்கு புருஷகாரமென்கை. அவள்ஸந்நிதியில் குற்றம் மிக்க காகம் பிழைத்தது. அவள்ஸந்நிதியில்லாமை அத்தனை குற்றமின்றியே யிருக்க, ராவணன் தலையறுப்புண்டான். (கேசவனை)விரோதிநிரஸநஸ்வபாவனை. (மாதவனைக்கேசவனை) *1449 கண்ணுதல் நஞ்சுண்ணக்கண்டவனே விண்ணவரமுதுணவமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமான் *என்று சொல்லுகிறபடியே, 'தான்ஸாக்ஷாத் அம்ருதத்தையுண்டு ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக்கொடுத்தான்' என்று பட்டர். மாதவனை என்று தன் வாயைக்காட்டி, கேசவனை என்று



கோதைப் போகட்டார். (கேசவனை) விரோதி நிரஸநஸ்வபாவனை. ஸ்த்ரீத்வப்ரயுக்தமான ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்ய சேஷத்வத்தையும் போக்கினவனை.

(திங்கள் திருமுகத்து) க்ருஷ்ணனோட்டைச் சேர்த்தியால் வந்த செவ்வி. அங்கு *கதிர்மதியம்போல் முகம்* என்றது. *ஜகத்வ்யாபாரவர்ஜம்* என்று கொடுப்பார்க்கு இது ஒன்றொழிய அல்லாத தெல்லாம் கொடுக்கையாலே இவர்களுக்குக் குளிர்த்தி வேண்டுகையாலே 'திங்கள் திருமுகம்'என்கிறது. *3764 மதிமுகமடைந்தையரிறே. (சேயிழையார்) தானும் அவனும் கூடப்பூட்டின ஆபரணத்தை யுடையராயிருக்கை. (சென்று) இவ்வொப்பனையோடே வரப் பார்த்திராதே சென்று. (இறஞ்சி) மங்களாசாஸநம் பண்ணி. (அங்கு) திருவாய்ப்பாடியில். (அப்பறை கொண்டவாற்றை) மறந்து நில்லாதே நாட்டுக்குப் பறையென்று அடிமை கொண்டபடியை.

(அணிபுதுவை) ஸம்ஸாரத்துக்காபரணமான ஸ்ரீவில்லிபுத்தூர். (பைங்கமலத்தண்டெரியல்) பெரியாழ்வார்க்குத் தாமரைத்தாராயிருக்கிறபடி. (பட்டர் பிரான்கோதை சொன்ன) ஆண்டாள் அநுகாரத்தாலே அநுபவித்துப் பேசின. *ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:*என்று ஸ்ரீபராசரபகவான் 'தன்மகன் ஸ்ரீவேதவ்யாஸபகவான் பாடே சென்று நாம் சொன்ன அர்த்தத்துக்கு ப்ரமாணம் கேட்டுக்கொள்ளுங்கோள்' என்னுமாபோலே, பெரியாழ்வார்மகள் சொன்னத்திலும் அர்த்தவாத மில்லை.

(சங்கத்தமிழ்மாலை) *குழாங்களாய்*என்னுமாபோலே பஞ்சலக்ஷம் குடியில் பெண்கள் திரண்டநுபவித்த ப்ரபந்தமாகையாலே, பகவத்ப்ரேம முடையார்க்கெல்லால் சிரஸாவஹிக்க வேண்டும்படியிருக்கை. (தமிழ்மாலை) பிராட்டி ஆண்டாளானப்போலே உபநிஷத்தும் தமிழானபடி. (முப்பதும் தப்பாமே) இதிலொரு பாட்டும் விழவிடாதே. விலையில்லாத ரத்நங்களாலே செய்த ஏகாவளியிலே ஒருரத்நம் குறைந்தாலும் நெடும்பாழா யிருக்குமிறே. அப்படி ஒரு பாட்டுக்குறைந்தாலும் பேரிழவாயிருக்குமென்கை. (இங்கு) பிற்பட்ட காலத்திலே. (இப்பரிசுரைப்பார்) இப்பாசுரமாத்ரத்தைச் சொல்லுவார். திருவாய்ப்பாடியில் பெண்கள் தாங்களே க்ருஷ்ணனோடேகூடி அநுஷ்ட்டிக்கப் போனார்கள். ஆண்டாள் அநுகாரப்ரகாரத்தாலே பெற்றாளாகையாலே இப்ப்ரபந்தம் சொன்னார்க்கும் இங்கே பலம் கிடைக்கும். (ஈரிரண்டுமால் வரைத்தோள்) இவர்களளவு பாராதே பண்டுபாடினவர்கள் சொல்வழியாலே அநுஸந்திக்

கையாலே தோள்கள் பணைக்கும். அநுபவிக்கத்தோள்கள் பணைத்தாப்போலே.

(செங்கண் திருமுகத்து) அலப்யலாபத்தாலே சிவந்த திருக்கண்கள். (செல்வத்திருமாலால்) உபய விபூதியுக்தனை ச்ரிய: பதியென்கை. இப்பாட்டில் உபக்ரமத்திலும் உபஸம்ஹாரத்திலும் பிராட்டிஸம்பந்தம் சொல்லியிருக்கையாலே த்வயத்தில் பூர்வகண்டத்திலும் உத்தரகண்டத்திலும் சொன்னபடியே இங்கு சொல்லிற்றாயிற்றென்கை.

(எங்கும் திருவருள் பெற்று) இத்திருப்பாவை சொன்னார்களிடத்தே எங்கும் தானும் பிராட்டியுமாக ஆதரிக்குமென்கை; கிடக்கைப்பாயிலே வெள்ளம் கோத்தாப்போலே. (இன்புறுவர்) இஸ்ஸ்லோகத்தை அநுபவித்து இனியராவர். பிராட்டியும் தாமும் ஸந்நிஹிதமாம்படி ப்ரஸாதத்தைப் பெற்று, (இன்புறுவர்) பகவத்ஸம்ச்லேஷத்தால் வந்த ஆநந்தம் பெறுவர். * 3568 நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும், * 3534 திருமாலாலருளப்பட்ட சடகோபன் * * 1707 திருமாமகளாலருள்மாரி * நிரூபகதர்மம். இசலி இசலி இருவரும் பரியக்கடவர்.

ஆயி அருளிச்செய்த

நாலாயிரப்படி

முற்றிற்று

ஆண்டாள் திருவடிகளே சரணம், ஆயிதிருவடிகளே சரணம்

அடிவரவு:—மார்கழி வையம் ஓங்கி ஆழி மாயன் புள்ளுங்கீசு கீழ்வானம் தூமணி நோற்று கற்று கனைத்து புள் உங்கள் எல்லே நாயகன் அம்பரம் உந்து குத்து முப்பத்து ஏற்ற அங்கண் மாரி அன்று ஒருத்தி மாலே கூடாரை கறவைகள் சிற்றம் வங்கம் தை.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

## ஸ்வாபதேசம்

முதற்பாட்டில்:—பகவத்பரத்வத்தால் சொல்லிற்றாகிறது வேதார்த்தம். அதாவது—ஸர்வஸமாச்ரயணீய ஸ்தலமென்றும் அவதீர்ணனானவனழகே ருசிஜநகமென்றும் ருசியுடையார் ப்ராப்யத்வரையாலே அவன்தன்னை மேல்விழுந்து அபேக்ஷிக்கை ப்ராப்தமென்றும் இவ்விஷயத்திலே இழிவார்க்கு ருசியுடையார் உத்தேச்யரென்றும், ப்ராப்யமாகிறது அநுபவஜநிதப்ரீதிகாரிதமுமாய் யாவதாத்மபாவியான கைங்கர்யமென்றும் தத்ஸாதநமும் அவன்திருவடிகளே யென்னலாயிற்று; ப்ராப்யப்ராபகஸங்க்ரஹம். 1

இரண்டாம் பாட்டில்:—இவ்விஷயத்தில் இழிவார்க்குடைய விரக்தியையும் ஸம்பாவித ஸ்வபாவத்தையும் சொல்லுகிறது. 2

மூன்றும் பாட்டில்:—பகவத் ஸமாச்ரயணபலமான கைங்கர்யமொழியவே, * ஆயுராசாஸ்தே * என்கிறபடியே ஐஹிக பலங்களும் ஆநுஷங்கிகஸித்தமாய்க்கொண்டு ஸித்திக்குமென்கிறது. 3

நாலாம் பாட்டில்:—அநந்ய ப்ரயோஜநனாய் பகவத் ஸமாச்ரயணம் பண்ணுமவனுக்கு இந்த்ராதி தேவதைகள் நியாம்யராவர்களென்று, இவ்வதிகாரிகளுடைய உத்கர்ஷம் சொல்லுகிறது. 4

அஞ்சாம் பாட்டில்:—இப்படி பகவத்பஜநாநுபவம் பண்ணுமவனுக்கு, *உத்ர பூர்வாகயோ ரச்லேஷ விநாசௌ* என்கிறபடியே, பகவதநுபவ மாஹாத்ம்யத்தாலே ஸகலதுரிதங்களும் போமென்று சொல்லுகிறது. 5

மார்கழிமுதல் மாயனை என்னுமளவும் நாராயணனே என்று தொடங்கி, பாற்கடலுள் பையத்துயின்ற பரமனென்றும், ஓங்கியுலகளந்த உத்தமனென்றும், சார்ங்கமுதைத்த சரமழையென்றும், மாயனை மன்னு வடமதுரை மைந்தனை யென்றும் அடிப்பாடு சொல்லுகிறது.

இனி மேல்பத்துப்பாட்டிலும் பகவத் விஷயம் அபரிச்சிந்நமாய் தனியனுபவிக்க மாட்டாத சாபலத்தாலும், பகவதநுபவம் பண்ணுவார்க்கு, * தொண்டீரெல்லீரும் வாரீர் * என்கிறபடியே துணைத்தேட்டமாயிருக்குமென்னுமத்தைச் சொல்லுகிறது.

அதில் முதற்பாட்டில் பகவதேக போகரான ஸ்ரீ
வைஷ்ணவர்கள் அநந்ய ப்ரயோஜநராய் இவ்விஷயத்தில்
தேசிகரன்றிக்கே யிருப்பாரை அவர்கள் பக்கல் பரிவாலே
தேசிகராக்குகை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வபாவமென்னு
மத்தைச் சொல்லுகிறது. 6

[கீசு] இரண்டாம் பாட்டில், பகவத்விஷயமான அர்த்
தம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானல் தங்கள் பரிவால் * போத
யந்த : பரஸ்பரம் * என்கிறபடியே அறிவிக்கையும் ஸ்ரீ வைஷ்
ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 7

[கீழ்வானம்] மூன்றாம்பாட்டில், பகவதநுபவத்தில்
ப்ரத்யாஸந்நராயிருப்பார் திறத்தில் ஸாபேக்ஷராயிருக்கை
யும், அவர்களை முன்னிட்டு ஈச்வரனைக்கிட்டுகையும் ஸ்ரீ
வைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 8

[தூமணி] நாலாம்பாட்டில், * தத்தஸ்ய ஸத்ருசம் பவேத் *
என்று பூர்வார்த்த நிஷ்டராயிருப்பாரை, பகவத்ப்ரேமாதி
சயத்தாலே ததேகபோகரா யிருக்குமவர்கள் போகார்த்த
மாக ப்ரேரிக்கை அவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 9

[நோற்று] அஞ்சாம்பாட்டில், * ஜ்ஞாநீ த்வாத்மைவ மே
மதம், அஹம் ஸச மம ப்ரிய : * என்று அவன் பக்ஷபாதத்தி
லிருப்பார் திறத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் நித்ய ஸாபேக்ஷ
ராயிருக்கை ஸ்வரூபமென்கிறது. 10

[கற்று] ஆறாம்பாட்டில், பகவத்ஸம்பந்தம் விச்சேதி
யாதே போந்த ஸந்தாந ப்ரஸூதர் நமக்கு பூஜ்யரென்றும்
அவர்களடியாக பகவத் ஸமாச்ரயணம் பண்ணுகை ஸ்வரூப
மென்கிறது. 11

[கனைத்து] ஏழாம்பாட்டில், பகவத்விஷயம் ஸஹ்ய
மாம்படி அவகாஹித்தவர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உத்
தேச்யராமளவன்றிக்கே தத்ஸம்பந்த ஸம்பந்திகள் உத்
தேச்யரென்றிருக்கை ஸ்வரூபமென்கிறது. 12

[புள்ளு] எட்டாம்பாட்டில், பகவதநுபவ ரூபமான
ஜ்ஞாநபக்திகளால் பூர்ணராயிருப்பாரிடத்திலும் ததர்த்த
மாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூப
மென்கிறது. 13

[உங்கள்] ஒன்பதாம் பாட்டில் பகவத் விஷயத்தில்
மூட்டுகையிலே அதிகரித்த நிர்வாஹகர் முன்பாக பகவத
நுபவம் பண்ணுகை ஸ்வரூபமென்கிறது. 14



[எல்லே] பத்தாம் பாட்டு. ஸ்ரீ வைஷ்ணவ ஸமாஜ
தர்சநம் அபிமதமாயிருக்கு மவர்களைக் கண்டால், அந்த
ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபமென்கிறது. 15

நாயகனில்—இவை யிரண்டாலும் பகவத் விஷயத்
தைக் கிட்டுவார் தத்ப்ரத்யாஸந்நரைப் புருஷகாரமாகக்
கொண்டு புகுருகை ஸ்வரூப மென்கிறது. 16

[அம்பரம்] பகவத் விஷயீகாரம் பிராட்டி ஸாபேக்ஷ
காயிருக்கிறது. 17

[உந்து மதகளிற்றன்] பிராட்டியைப் புருஷகாரமாக
வரித்தால் அவனும் அவளும் இசலி இசலி பரியும் பரிவை
யும் சொல்லுகிறது. 18

[குத்து விளக்கு] அடிமை செய்யுமிடத்திலும் இருவர்க்
கும் சேர்ந்த சேர்த்தியிலே அடிமை செய்வதே முறை
யாகிறது. 19

[முப்பத்து] ப்ரபுத்தனைய் தங்கள் கார்யம் செய்
கைக்கு * ஏற்றவேழுலகங் கொண்ட * என்கிறபடியே ஆச்
ரித ரானவர்கள் நிர்மமராய்க் கொண்டு அவன் குணகீர்த்
தநம் பண்ணுகை கர்த்தவ்ய மென்கிறது. 20

[ஏற்ற கலம்] கீழிற் பாட்டில் தங்கள் அபிமாந சூந்ய
தையைச் சொல்லிற்றாய், இப்பாட்டில் அநந்யார்ஹசே
ஷத்வம் சொல்லுகிறது. அவனுடைய விசேஷ கடாக்ஷத்
துக்குத் தங்களுடைய அநந்யார்ஹ சேஷத்வம் அநுஸந்
தேய மென்கிறது. 21

[அங்கண்] கர்மபரதந்த்ர ராயிருந்துள்ள ப்ரயோஜ
நாந்தர பரரிற் காட்டிலும் அநந்யப்ரயோஜநராய் ஸாத
நாந்தர நிஷ்ட்டராயிருக்கு மவர்களிற் காட்டிலும் ஸித்த
ஸாதநம் பண்ணினார் குற்றம் போக தன்கைம்முதலில்
லாமையால் ஈச்வரனே ப்ரபுத்தனைய்க் கொண்டு ஸம்விதா
நம் பண்ணவேணுமென்று அபேக்ஷிக்க அவ்வதிகாரத்
தைச் சொல்லுகிறது. 22

[மாரி] அர்த்திகள் ஆஸ்த்தாநத்திலிருக்கிற ச்ரிய:
பதிக்கு ஸ்வரூவபாநுகுணவ்ருத்தியை விண்ணப்பம் செய்ய
வேணு மென்கிறது. 23

[அன்றிவ் வுலகம்] அர்த்திகளாய்ச் சென்றாலும் தந்
தாமுடைய புருஷார்த்தத்தை விஸ்மரித்து மங்களாசாஸநம்

பண்ணவேண்டும் படியான விஷயவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. 24

[ஒருத்தி] ஸ்வரூபலாபத் தோபாதி துக்கநிவ்ருத்தியும் ததாச்ரயணத்தாலே யென்கிறது. 25

[மாலே] போகோபகரண ஸித்தியும் அவனாலே யென்கிறது. 26

[கூடாரை] * தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி * என்கிறபடியே கைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமென்றறுதியிட்டு, ப்ரதிபந்தகநிவ்ருத்திக்கும் உத்தேச்யமான புருஷார்த்த ஸித்திக்கும் அநுகுணாலங்காரம் அவனே பண்ணவேணு மென்கிறது. 27

[கறவைகள்] கீழடங்க ஒரு அதிகாரிக்கு ஸம்பவிக்கும் ஸ்வபாவங்களைச் சொல்லி, ஆகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு அவனே உபாயமாக வேணுமென்றபேக்ஷித்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டு தலைக்கட்டுகிறது. 28

[சிற்றம் சிறுகாலே] ஏவம் ஸ்வீக்ருதஸித்தோபாயனுக்கு தத்க்ருத ஸ்வரூபாநுரூபபலமும் தத்விரோதிநிவ்ருத்தியும் * யா: காச்சந க்ருதய: * இத்யாதிப் படியே சொல்லித் தலைக் கட்டுகிறது. 29

[வங்கக் கடல்] உக்தமான அநுஷ்ட்டாந மில்லாதவர்களுக்கு அவர்கள் பாசுரமே பேற்றைக் கொடுக்குமென்று சொல்லி நிகமிக்கிறது. 30

ஆசார்யஹ்ருதயஸ்யார்த்தாஸ் ஸகலா யேந தர்சிதா: |
ஸ்ரீசாநுதாஸ மமலம் தேவராஜம் தமாச்ரயே ||

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஆழி திருவடிகளே சரணம்.

---